# நீதித்துறையும் அதன் பணிகளும்

(THE JUDICIARY : ITS ORGANISATION AND FUNCTIONS)

டாக்டர் சோ. சுப்பிரமணியன்





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவன

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—500

# நீத்துறையும் அதன் பணிகளும்

ஆசிரியர்

டாக்டர் சோ. சுப்பிரமணியன், எம்.ஏ., பி எச்.டி.,

பேராசிரியர், அரசியல் துறை,

மாநிலக் கல்லூரி, சென்னை



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—September, 1973

T.N.T.B.S. (C.P.) No. 500



**The Judiciary : Its Organisation and Functions**

DR. S. SUBRAMANIAN

**Price Rs. 4-55**

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi'.

*Printed by*
MANI PRINTERS,
7, Muthial Naicken Street,
Madras-7.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உள்வியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'நீதித்துறையும் அதன் பணிகளும்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 500 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 535 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

## பகுதி ஒன்று

### நீதித்துறை பற்றிய கொள்கைகளும் விளக்கமும்



## பகுதி இரண்டு

### நீதிமன்ற அமைப்பும் இயங்கும் முறையும்

# 1. நீதித்துறைச் சார்புடைய சில அம்சங்கள்

(அ) நீதித்துறையையும் அதன் பணிகளையும் பற்றிய கருத்துகளைத் தெரிந்துகொள்ளுவதற்கு ஆதாரமாக அமைவன சமூகம், அதனால் ஏற்படுத்தப்பட்ட அல்லது ஏற்படுத்தப்படுகின்ற விதிகள், முறைகள், பழக்கவழக்கங்கள், சமூகத்திற்கு ஆதரவாக இருக்கின்ற சட்டங்கள், இவை தொடர்பாக எழுகின்ற பிரச்சினைகள், அவற்றின் தீர்வு ஆகியவைகளைச் சொல்லலாம். இவ்விடத்தில் சிறப்பாகத் தெரிந்துகொள்ள வேண்டியதென்னவெனில், நீதித்துறை சமூகத்திற்குப் பாதுகாப்பாக இருந்து சமூகம் அதன் நோக்கத்தை அடைவதற்குத் துணைபுரிவதாகும். ஆனால், இந் நீதித்துறை சமூகத்திற்குத் துணை நிற்கும் இதர அமைப்புகளைப் போன்றதென்பதையும் அவ்வமைப்புகளின் பகுதியாக இருந்து இணைந்து செயலாற்றுவதென்பதையும் குறிப்பிடுவது அவசியமாகும். எனவே, நீதித்துறையோடு தொடர்புடைய, அத்துறைக்கு ஆதாரமாக இருக்கின்ற அமைப்புகளைப் பற்றிச் சிந்திக்கும்போது அவை நிர்வாகத் துறையும், சட்டத்துறையுமாகும் என்பதை எவரும் எளிதில் தெரிந்துகொள்ளுவார்கள்.

அதாவது, மக்கள் தங்கள் குறிக்கோள்களையும் விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்ள அரசாங்கத்தைக் கருவியாக, துணையாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவ்வரசாங்கம் பரந்த அடிப்படையில் மூன்று அங்கங்களையுடையதாக அறிஞர்களால் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவைகள், நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை என்பன. அரசாங்கம் மூன்று அங்கங்களையுடையதாகப் பிரிக்கப்படுவது பன்னெடுங் காலமாக இருந்து வருவது. இதைப்பற்றிக் கிரேக்க அறிஞர் அரிஸ்டாடில் முதற்கொண்டு தற்கால அறிஞர் ஹெரால்டு ஜே. லாஸ்கி வரை, பலர் தங்களுடைய கருத்துகளைத் தெளிவாக எடுத்துரைத்திருக்

கிறார்கள். இவைகளில் எப் பிரிவு முக்கியமானது என்று குறிப்பிடுவது இடர்ப்பாடு மிகுந்ததாகும். ஏனெனில், மூன்று துறைகளுமே சமூகத்தைப் பொறுத்த வரையிலும் முக்கியமானவைகளாகும்.

இம் மூன்று துறைகளும் சில கூட்டாட்சி நாடுகளிலுள்ளவாறு தனித்தனியாக அமைக்கப்பட்டுச் சுதந்திரமாகப் பணியாற்றலாம்; அல்லது ஒற்றையாட்சி நாடுகளிலுள்ளவாறு தனித்தனியாக அமைக்கப்பட்டிருந்தாலும், ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடைய நிலையில் பணியாற்றலாம், கூட்டாட்சியோ, ஒற்றையாட்சியோ எதுவாக இருந்தாலும், பொதுவாக நீதித்துறைக்கு அங்குத் திட்டவட்டமான, சிறப்பானதோர் இடம் தரப்படுகிறது. இதற்குக் காரணங்கள் பலவென்றாலும் அவற்றில் மக்களின் நேர்மைப் பண்பையும், நாகரிகப் போக்கையும் முக்கியமானவைகளாகக் குறிப்பிடலாம். எனவே, எங்கெல்லாம், நேர்மைக்கும் நாகரிக நடத்தைக்கும் சிறப்பிடம் கொடுக்கப்படுகிறதோ அங்கெல்லாம் நீதித்துறைக்குத் தனியிடமுண்டென்று குறிப்பிடுவதுதவறாகாது எனத்தோன்றுகிறது. இக் கருத்து நவீன அரசாங்கங்கள் பலவற்றிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதென்பது அந் நாடுகளில் நீதித்துறை அமைக்கப்பட்டுச் செயலாற்றும் முறையினால் தெளிவாகிறது. இந் நீதித்துறையமைப்பையும், அதன் பணிகளையும்பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கு முற்படுமுன் அரசாங்க அமைப்பையும், அதன் தன்மைகளையும், அதன் இதர அங்கங்களான நிர்வாகத்துறை, சட்டத்துறை ஆகியவற்றின் கடமைகள், பொறுப்புகளைப் பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். ஏனெனில், நீதித்துறையமைப்பும் அதன் பொறுப்புகளும் அரசாங்கத்தின் தன்மைக்கேற்ப அமைந்திருக்கின்றன என்பதாலாகும். முதலில் அரசாங்கத்தைப் பற்றிப் பார்க்கலாம்.

(ஆ) அரசாங்கம் முடியாட்சி, உயர்குடியாட்சி, குடியாட்சி என்று கிரேக்கர்கள் காலத்திலேயே வகைப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த இயற்கையான அரசாங்கங்களின் திரிபுகளாகக், கொடுங்கோலாட்சி, சிறு குழுவாட்சி, மக்களாட்சி ஆகியவை சொல்லப்படுகின்றன. ஆனால், நாம் இவ் வரசாங்கங்களைப் பற்றி இங்கு ஆராய்வதற்கில்லை. அதற்கு மாறாக நவீன காலத்திலுள்ள குறிப் பாக ஒற்றையாட்சி, கூட்டாட்சி அரசாங்கங்களையும், அவற்றின் தன்மையையும்பற்றி இவ்விடத்தில் நாம் காணலாம்.

அரசாங்கம் சாதாரணமாக ஒற்றையாட்சி முறையையும், கூட்டாட்சி முறையையும் சேர்ந்ததென்று இருவகையாகப்

பிரிக்கப்பட்டிருக்கிறது. சான்ருக அமெரிக்க ஐக்கிய நாடுகள், கானடா, ஆஸ்திரேலியா, மலேசியா, இந்தியா, சுவிட்சர்லாந்து, சோவியத் யூனியன் மற்றும் பர்மா போன்றவை கூட்டாட்சி யமைப்பையுடையவைகளாகவும், இங்கிலாந்து, ஃபிரான்க, இலங்கை, மற்றும் ஜப்பான் போன்றவை, ஒற்றையாட்சி அமைப்பை யுடையவைகளாகவு மிருக்கின்றன வெனலாம்.

(இ) ஒற்றையாட்சி முறை அரசாங்கம்: இம்முறை அரசாங் கத்தில் அரசின் இறைமை அதிகாரம் மத்திய அரசாங்கம் ஒன்றினுல் மட்டுமே செலுத்தப்படும். அதாவது, நிர்வாக சௌகரியத்தை முன்னிட்டு நாடு பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டிருந்தாலும், அப் பகுதிகளிலுள்ள நிர்வாகங்களனைத்தும் நடு அரசாங்கத்தின் ஆட்சியதிகாரத்திற்குக் கட்டுப்பட்டிருக்கும். இவையனைத்திற்கும் பொதுவாக ஒரேவொரு பாராளுமன்றம் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றிருக்கும். நடு அரசாங்கம் தன் விருப்பம் போல வட்டாரப் பகுதிகளின் அதிகாரங்களை எப்போது வேண்டுமானுலும் குறைக்கலாம், கூட்டலாம்; அவற்றின் எல்லைகளை மாற்றி அல்லது திருத்தியமைக்கலாம். இதனுல் ஒற்றையாட்சிமுறை அரசாங்கத்தின் இறைமையதிகாரம் பிரிக்கப்படாதது என்பதும், அதன் முடிவுகள் இறுதியானவை என்பதும் புலனுகும். இதனை வற்புறுத்துமாறு, 'ஒற்றையரசின் சாரம் இறைமையதிகாரம் பிரிக்கப்படாதிருப்பது. அதாவது அதன் அதிகாரங்கள் அளவற்றவை. அதனில் நடுவிலுள்ள பாராளுமன்றத்தைத் தவிரச் சட்டமியற்று மதிகாரமுடைய வேறு நிலையமெதுவும் கிடையாது'[1] என்று சி. எஃப். ஸ்ட்ராங்கு (C. F. Strong) என்பவர் குறிப்பிடுவதை நினைவுகூர்தல் பொருத்த மாகும்.

இத்தகைய அரசாங்கமுறையுடைய நாடுகளில் நீதித்துறையும் ஒருங்கிணைந்ததாக நாடு முழுவதற்கும் பொதுவானதாக அமைக்கப்பட்டிருக்கிறதென்பதைக் குறிப்பிடவேண்டும். இந் நீதித்துறை இங்கிலாந்து நாட்டிலுள்ளவாறு பாராளு மன்றத்திற்குக் கட்டுப்பட்டதாக இருக்கலாம்; அல்லது இதர எழுதப்பட்ட அரசியலமைப்பையுடைய நாடுகளிலுள்ளவாறு பாராளுமன்ற அதிகாரத்தை அவசியமேற்படும்போது கட்டுப் படுத்துவதாக இருக்கலாம்.

(ஈ) கூட்டாட்சி முறையரசாங்கம்: கூட்டாட்சி முறை அரசாங்கம் இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் வேறுபடுகிறது. அது

1. C. F. Strong, 'Modern Political Constitutions' (1958) p 80.

சாதாரணமாக 'நாடுகளின் கூட்டமென்ற நிலையிலிருக்கலாம். இதற்கு 1815-ல் ஏற்பட்ட ஜர்மானிய நாடுகளின் கூட்டத்தை (Germanic Confederation of 1815) எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். அல்லது இறுகப் பிணைக்கப்பட்ட பல நாடுகளைக் கொண்ட உண்மையான கூட்டாட்சியாக இருக்கலாம். இதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகளை உதாரணமாகச் சொல்லலாம். கூட்டாட்சி எத்தன்மையதானாலும் அதனில் அங்கம் வகிக்கும் நாடுகளிடையே தேசிய உணர்வும், கூடிவாழ வேண்டும் என்னும் உணர்வும் காணப்படுமெனலாம். கூடிவாழ் உணர்வு (desire for union) 'ஐக்கிய' உணர்வு (desire for unity) ஆகாது என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளுதல் அவசியமாகும். அங்க நாடுகள் ஐக்கியமாகிட விரும்புமானால், அந்த ஐக்கியத்தினால் ஏற்படக் கூடியது ஒற்றையாட்சியரசாக இருக்குமேயல்லாது கூட்டாட்சியாக இருக்க முடியாது.

எனவே, கூட்டாட்சியில், தேசிய இறைமையையும் நாட்டு இறைமையும் இணைக்கும் முயற்சிகளைக் காணலாம். இவ் விணைப்பின் தன்மை கூட்டாட்சிக்குக் கூட்டாட்சி வேறுபடும். நாடு முழுவதற்கும் சம்பந்தமுள்ளவையும் பொதுவானவையுமான அதிகாரங்கள் அனைத்தும் தேசிய அரசாங்கத்திற்கும், தனிப்பட்ட முறையில் அங்க நாடுகளுடன் தொடர்புடையவைகள் இராச்சியங்களுக்கும் தரப்படும். இந்த அதிகாரப் பங்கீடு கூட்டாட்சிக்கேயுரிய முக்கியமான அம்சமாகும். இந்த அதிகாரப் பங்கீட்டின் தன்மைக் கேற்பக் கூட்டாட்சியின் தன்மையும் இருக்கும் என்பது அரசியல் மாணவர்கள் அறிவதாகும். இதைப்பற்றிய அதிகப்படியான விவரங்கள் இந் நூலின் நோக்கத்திற்கு அப்பாற்பட்டவையாதலால் அவைகளை நாம் இங்கு விவரிப்பதற்கில்லை.

ஆனால், அதிகாரப் பங்கீட்டின் தன்மை எத்தன்மையதாயினும், கூட்டாட்சியில் அப் பங்கீடு இன்றியமையாததாகக் கருதப்படுவதனாலேயே கூட்டாட்சி, இராச்சிய அரசாங்கங்களிலுள்ள சட்டமன்றங்களின் அதிகார எல்லை வரம்பிற்குட்பட்டதென்பதும், இரண்டுமே உச்ச அதிகாரமற்றவையென்பதும் புலனாகும். இவைகளுக்கும் மேலே அரசியலமைப்பு என்ற ஒன்று இருக்கிறது. அது தேசிய இராச்சிய அரசாங்கங்களுக்கிடையேயுள்ள தீர்மானமான ஓர் ஒப்பந்தம். அதில் கூடிவாழ இணக்கம் தெரிவித்த நாடுகளின் நிபந்தனைகளும், விருப்பங்களும் எழுத்துருவத்தில் வடிக்கப்பெற்றிருக்கும். உண்மையில், கூட்டாட்சி அரசியலமைப்பு, கூட்டாட்சி இராச்சியங்களின் உரிமைகளும் கடமைகளும் கொண்ட சாசனம் என்றால் தவறாகாது. இந்த உரிமை



களும் கடமைகளும் முறைப்படி அமைந்திருக்க வேண்டும். ஒவ்வொன்றின் உரிமைகளும் கடமைகளும் அரசியலமைப்பிலுள்ள ஏற்பாடுகளுக்கு உட்பட்டவைகளாக இருத்தல் வேண்டும். உண்மையான கூட்டாட்சியொன்றில் இவற்றின் சமநிலை நீதித்துறையினுலேயே பெறப்படுகிறது. அதாவது, கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங்களுக்குமிடையே அதிகாரங்களைப் பெறுவதிலும் செலுத்துவதிலும் ஏற்படும் இடர்ப்பாடுகளும், சச்சரவுகளும் நீதித்துறையினுல் தீர்த்து வைக்கப்படுகின்றன.

கூட்டாட்சி நீதித்துறைக்குத் தரப்பட்டிருக்கும் அதிகாரத்தின் அளவு கூட்டாட்சிக்குக் கூட்டாட்சி வேறுபடுகிறது. முழுமையான கூட்டாட்சிக்கு எடுத்துக்காட்டாக உள்ள அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதித்துறை சிறப்பான அதிகாரங்களைப் பெறுவதோடு அதன் தலைமை நிறுவனமான உச்ச நீதிமன்றம், கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் இராச்சிய அரசாங்கங்களுக்குமிடையே ஏற்படும் வழக்குகளில் இறுதித் தீர்ப்பளிக்கும் அதிகாரமுடையதாக இருக்கிறது. ஆனுல், இதரசில கூட்டாட்சிகளில், இதர நிலையங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமைகள் கூட்டாட்சி நீதிமன்றத்தின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகின்றன. இதற்கு உதாரணம் சுவிட்சர்லாந்து கூட்டாட்சியாகும். இங்குக் கூட்டாட்சி சட்டமன்றந்தான், இராச்சியக் கூட்டாட்சி அரசுகளுக்கிடையே ஏற்படும் சச்சரவுகள், வழக்குகள் ஆகியவற்றைத் தீர்ப்பதில் நடுவராகத் திகழ்கின்றது. இதனுல் இயற்றப்படும் சட்டங்களின் செல்லுபடியாகுந் தன்மையை நீதிமன்றம் தீர்மானிக்க முடியாது. இந்த அதிகாரங்கள் நீதிமன்றத்திற்கு இங்குத் தரப்பட்டிருக்குமானுல் அது பொருளற்றதாகி விடும். ஏனெனில், இறைமையதிகாரமுடைய மக்கள் தங்களுடைய எண்ணத்தைத் தெரிவிப்பதற்கான நேரிடை வழிவகைகளைப் பெற்றிருக்கிறுர்கள்.

இவ் விரண்டு நேர் எதிரான கூட்டாட்சிகளுக்கும் அவற்றிலுள்ள ஏற்பாடுகளுக்கும் இடைப்பட்ட தன்மையுடைய வேறுபல கூட்டாட்சிகளுமிருக்கின்றன. ஆஸ்திரேலியா, கானடா, இந்தியா, பர்மா முதலியன இவ் வகையிலடங்கும். இவ்வாறு கூட்டாட்சி அரசாங்கங்களில் சட்ட, நீதியுணர்வுகள் காணப்படுகின்றன. ஆனுல் இவ்வுணர்வுகள் பெரும்பாலான ஒற்றையாட்சி அரசாங்கங்களில் காணப்படுவதில்லை. இதற்கு ஒற்றையாட்சித் தன்மையுடைய நாடுகளில் நீதியுணர்வும், நீதிக்குக் கட்டுப்படும் தன்மையுமில்லை யென்றுகாது. ஆனுல், இவையெல்லாம், கூட்டாட்சிகளில் காணப்படுமளவிற்கு இருப்பதில்லையென்பதாகும். பொதுவாக இவ்விடத்தில் நாம் அறிய வேண்டியது ஒற்றை, கூட்டாட்சி

அமைப்புகளில் நீதித் துறைக்கெனத் தனியொரு பணி இருக்கிறதென்பதும், அது அமைப்புகளின் தன்மைக்கேற்ப அமைந்திருக்கிறதென்பதுமாகும். அடுத்து அரசாங்கத்தின் முப்பெரும் அங்கங்களான நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை ஆகியவற்றின் அமைப்பு, தன்மை, பணி ஆகியவைகளைப்பற்றிப் பார்க்கலாம்.

**(உ) நிர்வாகத்துறை :** நிர்வாகம் என்ற சொல் பெரும்பாலும் முதலமைச்சரொருவரையோ குடியரசு தலைவரொருவரையோ குறிக்கும் வகையில் பயன்படுத்தப்படுகிறது. சில சமயங்களில் முதலமைச்சர், இராணுவ சிவில் ஊழியர்கள் எல்லோரையும் சேர்த்துக் குறிப்பதாகவும் கருதப்படுகிறது. இரண்டாவதாகச் சொல்லப்பட்டவகையில் நிர்வாகம் பொருள் கொள்ளப்படுவது சிறந்ததாகும். இவ் வடிப்படையில் நிர்வாகம் என்பது அரசியலமைப்பால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள சட்டமன்ற மொன்றினுல் இயற்றப்படும் சட்டங்களை நடைமுறைக்குக் கொண்டுவரும் நிலையம் என்ருகும். சாதாரணமாக, சட்டமன்றந்தான் கொள்கைகளை உருவாக்கும் முயற்சிகளை எடுத்துக்கொள்கிறது என்று கருதப்பட்டாலும், நடைமுறையில் நிர்வாகந்தான் கொள்கைகளை உருவாக்கி, பிறகு சட்டமன்றத்தின் ஆமோதிப்பைப் பெறுகிறது.

அத்தகைய நிலையமொன்று எந்த நாட்டிலும் காணப்படும். குறிப்பாக, தற்கால அரசுகளில் அது கண்டிப்பாக இருக்கும். அந்த நிலையம் மிக விரிவான அதிகாரங்களைப் பெற்றிருக்கும். நிர்வாகத்திற்கும் சட்டத்திற்குமிடையேயுள்ள மிகப்பெரிய வித்தியாசம் எண்ணிக்கைப் பலத்தை அடிப்படையாகக் கொண்டதெனலாம். சட்டமன்றம் அதிகமான எண்ணிக்கையினரைக் கொண்ட பெரிய நிலையம். ஆனுல், நிர்வாகமோ ஒரு சிலரையேயுடைய சிறிய நிலையம். சட்டமன்றத்தின் வேலை, பொது விஷயங்களை விவாதிப்பது ஆகும். நிர்வாகத்தின் வேலையோவெனில் துரிதமாக முடிவுகளையெடுத்துச் செயலில் இறங்குவது. சில காலங்களில் நிர்வாகம் சட்டமன்றத்தால் கட்டுப்படுத்தப்படுகின்றது. சில காலங்களில் அது சட்டமன்றத்தினின்றும் ஒதுங்கி இயங்குகின்றது. இந்த அடிப்படையில் நிர்வாகம் பாராளுமன்ற முறையையும், அதைச் சாராததாகவும் இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

**(ஊ) பாராளுமன்றமுறை நிர்வாகம் :** இம் முறையைச் சேர்ந்த நிர்வாகம் பாராளுமன்றத்தால் ஏற்படுத்தப்படுவது. அதாவது பிரதம மந்திரி அல்லது முதலமைச்சர், இதர அமைச்சர்கள் யாவரும், வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட, அவர்

களுக்குப் பொறுப்பேற்கும் பிரதிநிதிகளைக்கொண்ட பாராளு மன்றம் அல்லது சட்டமன்றத்தால் அதன் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும்வரை பதவியில் அமர்த்தப்படுகிறார்கள். இவ்வாறு நியமிக்கப்படுகின்ற அமைச்சர்கள் பாராளுமன்றத் திற்குக் கூட்டுப் பொறுப்பும் தனிப் பொறுப்பும் உடையவர்கள். உண்மையில் பாராளுமன்றமுறை நிர்வாகம் அமைச்சர்களின் கூட்டுப்பொறுப்பு, தனிப்பொறுப்பு என்ற அடிப்படைகளில்தான் ஏற்படுத்தப்படுகிறது. இவ் வமைச்சர்கள் நிர்வாகத்தை நடத்திச் செல்வதற்கு மேல்மட்டத்திலிருந்து கீழ்மட்டம் வரையிலுள்ள ஊழியர்களை நேரிடையாகவோ, அல்லது ஊழியர்களைத் தேர்ந் தெடுக்கும் கழகங்களின் துணையைக்கொண்டோ நியமித்து, அவர் களின் உதவியைக்கொண்டு நிர்வாகத்தை நடத்துகின்றனர். இம்முறை அரசாங்கத்தில், அரசியலடிப்படையில் பதவிக்கு வருபவர்கள் எந்தச் சமயத்தில் வேண்டுமானாலும் பதவியிலிருந்து சட்டமன்றத்தால் அகற்றப்படலாம். ஆனால், பதவியிலிருந்து விலகும்போது, அரசியல் சார்புடைய அமைச்சரவை சட்ட மன்றத்தைக் கலைத்து, பொதுத்தேர்தல் நடைபெறுமாறு செய்யும் உரிமையையும் பெற்றிருக்கிறது. எனவே, பாராளுமன்றமாக இருந்தாலும், ஒன்றைப் பிறிதொன்று பதவியிலிருந்து அகற்று வதற்கு முன்பு தீர ஆலோசித்தே முடிவு செய்யவேண்டியிருக் கிறது என்பது தெளிவாகும்.

மேற்சொல்லப்பட்டதிலிருந்து அரசாங்கத்தின் இந்த இரண்டு உறுப்புகளுக்குமிடையேயுள்ள நெருங்கிய பிணைப்புப் புலனாவதோடு ஒன்று பிறிதொன்றைத் தன் பலத்திற்குத் தகுந்தாற் போலக் கட்டுப்படுத்தவோ, ஆதரிக்கவோ முடியும். ஒன்றை மற்றொன்று புரிந்து கொண்ட நிலையில இவை இரண்டிற்கு மிடையே சக ஆதரவு இருக்குமானால் நிர்வாகமும் சீராக நடை பெறும். மக்கள் வாழ்விற்குத் தேவையான பல சட்டங்களும் இயற்றப்படுமெனலாம். அடுத்து, பாராளுமன்ற முறையைச் சேராத (non-parliamentary) நிர்வாகத்தைப்பற்றிக் காணலாம்.

**(எ) பாராளுமன்ற முறையல்லாத நிர்வாகம் :** பாராளுமன்ற முறையல்லாத நிர்வாகம் தலைவர் முறையைச் (Presidential) சேர்ந்ததாக இருக்கலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள நிர்வாகத்தை இதற்குச் சான்றாகக் குறிப்பிடலாம். அல்லது சுவிட்சர்லாந்துக் குடியரசிலுள்ள குழு முறை (collegiate) நிர்வாகம் போன்றதாக இருக்கலாம்.

முதலாவதாகச் சொல்லப்பட்ட நிர்வாகம் அரசியல் சட்டப் படி அரசாங்கத்தின் இதர துறைகளான சட்டம், நீதி ஆகிய

வற்றின் நேரிடைக் கட்டுப்பாடில்லாமலிருக்கும். இந்த நிர்வாகத்தில் தலைவர் உள்பட அரசியல் சார்புடையவர்களெல்லாம் குறிப்பிட்ட காலக்கெடு முடியும் வரை பதவியிலிருப்பர், உதாரணத்திற்கு அமெரிக்க ஐக்கிய நாட்டுக் குடியரசு தலைவரைச் சொல்லலாம்.

இரண்டாவதாகச் சொல்லப்பட்ட முறையில் அரசியற் சார்புடைய நிர்வாகத்தினர் பாராளுமன்றத்தால் அதிலுள்ள பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள். இவர்களும் குறிப்பிட்ட காலக்கெடு முடிவதற்கு முன்பு பதவியிலிருந்து அகற்றப்பட முடியாதவர்கள். இம்முறை நிர்வாகத்தில் பொறுப்பேற்பவர்கள் யாவரும் சமமானவர்கள்—தோழமைத் தன்மையுடையவர்கள். அவர்களுக்குள் ஒருவர் தலைவராகவும், மற்றொருவர் துணைத்தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்படுவது வழக்கமாயினும், தலைவர் அல்லது துணைத்தலைவராக இருப்பதனாலேயே இவர்களுக்கு மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பிடம் கிடையாதெனச் சொல்லப்படுகிறது. இதற்குச் சொல்லப்படுகின்ற சமாதானம் மற்றவர்களும் சுழல்முறைப்படி தலைவராகவோ துணைத் தலைவராகவோ தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் என்பதாகும் மற்றுமொரு முக்கியமான அம்சம், நீதித்துறை போன்ற பல முக்கியமான துறைகளுக்கான நியமனங்கள் யாவும் பாராளுமன்றத்தால் ஆமோதிக்கவும் படுகிறதென்பதாகும். இன்னும் எந்தெந்த வகைகளில் பாராளுமன்றம், சிறப்பிடம் பெறுகிறதென்பது இவ்வத்தியாயத்தில் பிறிதோரிடத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். இனி அரசாங்கத்தின் இரண்டாவது பிரிவாக விளங்கும் பாராளுமன்றம் (அதாவது சட்டத்துறையைப்) பற்றிய சில இன்றியமையாத அம்சங்களைக் காணலாம்.

(ஏ) சட்டத்துறை: சட்டத்துறை உள்ளிட்ட அரசாங்கத்தின் மூன்று பிரிவுகளும், நவீன அரசில் இறைமையதிகாரத்தைச் செலுத்துவதில் அவற்றின் பணிகளைச் செய்கின்றன. இம் மூன்று துறைகளும் பெரும்பாலான நாடுகளிலுள்ளவாறு நெருங்கிய தொடர்புடையவைகளாக இருப்பினும், எல்லா நாடுகளிலும் இவை ஒவ்வொன்றும் தனிச் சிறப்புடையதாக இருக்கின்றது என்பதை நவீன அரசாங்கங்களைக் கற்கும் மாணவர்கள் அறிவார்கள். சட்டத்துறை என்பது, நியாய அடிப்படையில் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய சட்டங்கள் தேவைப்படும் வரை, அச் சட்டங்களை இயற்றுவதற்குப் பொறுப்பேற்கும் நிலையம் என்று கருதப்பட வேண்டும். சட்ட ஆக்கம், அது

நடைமுறைப்படுத்தப்படுவதற்கு முன்னால் நிகழ்வதாகுமாகையால், நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகியவைகளைக் காட்டிலும் முக்கியமானதாகவும், முதலிடம் பெற வேண்டியதாகவும் தோன்றும். இது சரியென வாதிக்கப்பட்டாலும், இதர துறைகளைக் கட்டுப்படுத்தும் சட்டத்துறையின், குறிப்பாகச் சட்டமன்றத்தின் அதிகாரம் நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது என்பதைக் கவனிக்காதிருக்க முடியாது. இருப்பினும், சுதந்திர அரசாங்கங்களில், சட்ட ஆக்கப்பணி இதர துறைகளின் பணிகளைப் புறக்கணித்து மறுக்குந்தன்மையுடையதாக இருக்கிறதென்பதையும் அலட்சியம் செய்வதற்கில்லை.

சட்டபூர்வத் தன்மையுடைய நவீன அரசுகளில் சட்ட அதிகாரம், ஒரு மன்றம் அல்லது இருமன்றங்களைக் கொண்ட பாராளுமன்றத்திடம் இருக்கிறது. இந்த மன்றங்களில் ஒன்று மட்டுமோ இரண்டுமோ வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டதாக அமைக்கப்படலாம். பாராளுமன்றத்தின் பணிகள், தற்காலச் சமூகத்தின் வளர்ச்சிக்குத் தகுந்தாற்போல அதிகரித்து வருகின்றன. எல்லா அரசுகளிலுமே இதைச் செய்ய வேண்டும் அல்லது அதைச் செய்ய வேண்டுமென்ற கட்டாய நிலைமையை நேரிடையாகவோ மறைமுகமாகவோ சட்டமன்றத்தின் மேல் சமூகம் திணிக்கிறது. அதாவது சமூகம் விரும்புகின்ற சில துறைகளில் சட்டமன்றம் சட்டங்களைச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. குறிப்பாக மக்களாட்சிச் சமூகத்தில் இக் கட்டாயம் நிலவுகிறதென்பதை மறுக்கமுடியாது.

(ஐ) அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு: நிர்வாகத்துறை, சட்டத்துறை, நீதித்துறை என்று அரசாங்கம் மூன்று பகுதிகளையுடையதாகப் பிரிக்கப்படுவது, அரசாங்கத்தின் பணிகள் அவற்றின் தன்மையடிப்படையில் வகைப்படுத்தப்படுவதாலும், அவ்வாறு வகைப்படுத்தப்பட்ட பணிகள் தனித்தன்மையுடையவை என்பதாலும் என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஆரம்பத்தில் அரசரே சட்டத்தை இயற்றுபவராகவும், நடைமுறைக்குக் கொண்டு வருபவராகவும், நீதிபதியாகவும் இருந்தார். நாகரிகம் வளரவளர அரசாங்கத்தின் பணிகளும் வளர்ந்தன. வளர்ச்சியடைந்த பணிகளை ஒருவரே செய்யமுடியாத நிலைமை தோன்றவே அப் பணிகள் வகைப்படுத்தப்பட்டு, அவைகளைச் செலுத்தும் அதிகாரம் பலருக்கும் வழங்கப்பட்டது. எனவேதான் மேற்கூறப்பட்ட மூவகைத் துறைகள் தோன்றலாயின என்றுரைக்கப்படுகிறது. ஆனால், இவ் வளர்ச்சி இறைமையதிகாரத்தைப் பங்கு போடவில்லை. இத்தகைய ஏற்பாடு நாள்தோறும் வளர்ந்து வரும்

அரசின் பணிகளைச் சமாளிப்பதற்காகச் சௌகரியத்தை முன்னிட்டு ஏற்படுத்திக் கொள்ளப்பட்டதாகும். இவ் வேற்பாடு நாளாக நாளாகக் கொள்கையாக மாற்றமடைந்து, அக் கொள்கை பின்பற்றப்பட்டால்தான் மக்களுடைய சுதந்திரமும் உரிமைகளும் காக்கப்படும் என எண்ணப்பட்டது. இந்த அடிப்படையில் அரசாங்கங்கள் அமைவது நன்மை பயக்கும் எனவும் கருதப்பட்டது.

இக் கொள்கைத் தோற்றத்திலுள்ள விசித்திரம் என்ன வென்றால், இங்கிலாந்து நாட்டு அரசியலமைப்புத் திடமாக இருப்பதற்கு, இது மூலதாரமாக அமைந்திருக்கிறதென்றும் மாண்டெஸ்க்யூ என்ற ஃபிரான்ஸ் நாட்டு அறிஞரின் கருத்தடிப் படையில் தோன்றியதாகு மென்பதே. உண்மையினும், நிகழ் முறையினும் இங்கிலாந்து நாட்டில் இத்தகையதோர் அதிகாரப் பிரிவினை அப்போது இருக்கவில்லை; இப்போதும் இருக்கவில்லை.

இவ் வதிகாரப் பிரிவினைக் கொள்கை மாண்டெஸ்க்யூ காலத் திற்கு முன்பும் இருந்ததெனினும், தெளிவாக விளக்கப்பட்டது இவருடைய காலத்திலிருந்துதான் எனப் பலரும் அறிவர். இக் கொள்கை 1748-ஆம் ஆண்டில் மாண்டெஸ்க்யூவினால் வெளியிடப் பட்ட 'சட்டத்தின் உள்நோக்கம்' (Esprit Les Lois) என்ற நூலில் முதன் முதலாகத் தோன்றியது. 'சட்டத்துறை, நிர்வாகத் துறை அதிகாரங்கள் ஒரே நபரிடமோ பல நபர்கள் சேர்ந்த நிறுவனத்திடமோ சேர்த்து தரப்படுமானால் அங்குச் சுதந் திரம் இராது. ஏனெனில். அதே அரசர் அல்லது செனட் கொடுங்கோன்மைத் தன்மை வாய்ந்த சட்டங்களை இயற்றி, கொடுங்கோல் முறைகளில் அவற்றை நடத்திவைக்க முயலும்'.[1] என்ற முடிவுக்கு அவர் வந்தார். மேலும், 'நீதியதிகாரம் சட்ட, நிர்வாகத்துறைகளிடமிருந்து பிரிக்கப்படாதிருக்குமானால் அத்தகைய ஏற்பாட்டிலும் சுதந்திரம் இருக்க முடியாது'[2] என்றும் அவர் கருதினார். மாண்டெஸ்க்யூதாம் இங்கிலாந்தைப் பற்றிய இத்தகைய விசித்திரமான கருத்தை வெளியிட்டாரென்ப தில்லை. இவருக்குப் பிறகு 1765-ல் பிளாக்ஸ்டோன் என்ற இங்கிலாந்து நாட்டுச் சட்டவியல் அறிஞரும், அவருடைய 'இங்கிலாந்து நாட்டுச் சட்டத் திறனாய்வு' என்னும் நூலில் 'சட்டத்தை இயற்றவும் அதை நடைமுறைப்படுத்தவுமுள்ள உரிமை யாராவது ஒருவரிடமோ பலர் சேர்ந்த நிலையத்திடமோ

[1] C F. Strong : 'Modern Political Constitutions' (1958) p: 214

[2] P. Sheron : 'Political Organisation and Government' (1965) p. 29.

எங்குத் தரப்பட்டிருக்கிறதோ அங்கு மக்களுக்குச் சுதந்திரமிராது" என்று குறிப்பிட்டார்.

இக் கருத்து, பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசியலின் ஒரு முக்கியபகுதியானதோடு, புரட்சி யுகத்தில் ஃபிரான்சு நாட்டில் ஏற்பட்ட அரசியலமைப்புகளில் இணைக்கவும்பட்டது. மாண்டெஸ்க்யூ, பிளாக்ஸ்டோன் ஆகியவர்களின் கோட்பாடு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால், ஃபிரான்சில் 1874-லும் அதற்குப் பிறகு ஏற்பட்ட அரசியலமைப்புகளிலும் இக் கோட்பாடு கைவிடப்பட்டதெனினும், அமெரிக்காவில் கைவிடப்படவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது.

இவ்விடத்தில், இக் கொள்கைபற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டியதென்னவெனில், நிர்வாகம், சட்டம், நீதி ஆகிய மூன்று துறைகளும் அவற்றின் அதிகாரங்களும் தனித்தனி நபர்களிடம் இருக்கவேண்டுமென்று மாண்டெஸ்க்யூ குறிப்பிட்டதானது, இவை மூன்றும் ஒன்றோடொன்று முற்றிலும் சம்பந்தமில்லாது, தனித்தனியாக இயங்கவேண்டுமென்று விரும்பினரா ஒன்று பிறிதொன்றோடு சிறிதளவேனும் தொடர்புடையதாக இருக்க வேண்டுமென்று கருதினரா என்பதாகும். இதை மாண்டெஸ்க்யூ தெளிவாக்கவில்லை. ஆனால், இம் மூன்று துறைகளும் எவ்விதத் தொடர்புமே இல்லாது அமைக்கப்பட்டுச் செயலாற்ற வேண்டுமென்று கருதப்பட்டால் அரசாங்க அலுவல்கள் சீராக நடைபெறாதென்றும், குழப்பநிலை யேற்படுமென்றும் சற்றும் சிந்திக்காமலேயே கூறிவிடலாம். அதே சமயத்தில் மூன்று துறைகளும் நெருங்கிய தொடர்புடையவைகளாக இருப்பதும் விரும்பத்தக்கதல்ல. எனவே, இவை இரண்டிற்கும் இடைப்பட்ட நிலைமை வரவேற்கத்தக்கது. மூன்றாவதாகச் சொல்லப்படும் இந்த அடிப்படையில்தான் நவீன அரசாங்கங்களில், குறிப்பாக அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசியலமைப்பில் சமநிலைத் தலையீடுகள் வாயிலாக இக் கொள்கை பின்பற்றப்படுகிறதெனலாம். இக் கொள்கை எந்த அளவிற்கு நவீன அரசாங்கங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதென்பதை அவ்வரசாங்கங்கள்பற்றிய நூல்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

# 2. நீதிமன்றங்களும் அரசியல் நடப்பும்

## (The Courts and the Political process)

முதல் அத்தியாயத்தில் அரசாங்கம்பற்றியும் அதன் பிரிவுகளான நிர்வாகத்துறை, சட்டத்துறை பற்றியும் அதன் மூன்றாவது பிரிவான நீதித்துறைச் சார்புடைய இதர முக்கியமான கோட்பாடுகள் பற்றியும் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இவ் வத்தியாயத்தில் நீதித்துறை பற்றிய இதர சில-தாற்காலிக நடப்பில் காணப்படும் கருத்துகளைப்பற்றிச் சொல்லப்படுகிறது

(அ) நீதிமன்றங்கள்பற்றிய ஆய்வு செய்கின்றபோது விதிகளைச் செய்தல், அவைகளை விளக்கிச் சொல்லுதல் அல்லது அவற்றின் அடிப்படையில் நீதி வழங்குதல் போன்றவற்றை நெகிழா முறையில் ஒன்றைப் பிறிதொன்றினின்றும் வேறுபடுத்திக் காட்டவியலாது. பலவகைப்பட்ட அரசியல் சட்ட அமைப்புகளைப் பிரித்து வேறுபடுத்திக்காட்டுவது சௌகரியமாக இருக்குமென்றாலும் அப் பிரிவினை செயற்கையானதாகவே இருக்கும். அவ்வாறு வேறுபடுத்துவது முடியாட்சி முறைகளில் காணப்படும் பல மாதிரி (pattern)களால் ஏற்படும் கட்டாயத்தினாலென்று சொல்லலாம். நவீன அரசியல் முறைகளில் நாளுக்கு நாள் ஆட்சித்துறை நீதிமன்றங்களும், ஆட்சித்துறை டிரிபியூனல்களும் ஏற்பட்ட வண்ணமிருக்கின்றன. இந் நிலையங்கள், ஆட்சித்துறை, நீதித்துறை அமைப்புகளுக்கிடையேயுள்ள மாறுபாடுகளைத் தெளிவாக அறிய முயலாதபடி செய்துவிடுகின்றன இது நீதித்துறையமைப்பு விஷயத்திலும் உண்மையெனலாம். நீதிபதிகளும் நீதிமன்றங்களும் அரசியலின் மொத்த நடப்பில் சிறப்பான அம்சங்களாகும். அந் நடப்புப்பற்றிய திரிபுதன்மையுடைய கருத்து அவற்றின் பணிகளின் பயங்கரமான பிரிவினையில் கொண்டுபோய் விடும். இக் கருத்தை இராபர்ட்தால் என்பவர் பலமாக விவாதித்திருக்

கிருர்[1]. அமெரிக்க உச்ச நீதிமன்றம் நீதிச்சார்புடைய மன்றம் என்று கருதுவது அமெரிக்க அரசியல் முறையில் அதற்குள்ள முக்கியத்தைக் குறைத்து மதிப்பிடுவதற்கொப்பாகும். ஏனெனில், தேசியக் கொள்கைபற்றிய சர்ச்சைக் கிடமான பிரச்சினைகளில் அம் மன்றம் முடிவுகளை வழங்கும்போது அது அரசியல் தன்மையுடைய நிலையமாக இருக்கிறது. 1950, 1960 முதலான ஆண்டுகளில், சிவில் உரிமைகள் போன்ற அரசியல் பிரச்சினைகளில் குடியரசுதலைவரோ காங்கிரசோ நடவடிக்கைகளைத் தொடங்கத் தயங்கியபோது உச்ச நீதி மன்றம்சர்ச்சை மிகுந்த அப் பிரச்சினைகளில் வழிகாட்டும் தலைமைப்பணியைச் செய்தது.

இதனுல், அமெரிக்க உச்ச நீதிமன்றத்தைப் போன்று இதர எல்லா நீதிமன்றங்களும் அரசியல் சுதந்திரமுடையவைகளாகத் திகழ்கின்றன என்று குறிப்பிடுவதாகாது. சான்ருக அமெரிக்க, நீதிமன்றங்களுக்கும் சோவியத் யூனியனிலுள்ள நீதிமன்றங்களுக்கு மிடையேயுள்ள பரவலான வேறுபாடுகளைச் சொல்லலாம் சோவியத் யூனியனில் நீதிமன்றங்களின் தீர்ப்புகளுக்குள்ளதைக் காட்டிலும் கட்சிக் கொள்கைகளுக்கு வரவேற்பு அதிகம். எனவே, நீதி வழங்குதல் (தீர்ப்பளித்தல்) அரசியல் நடப்பிற்கு அப்பாற் பட்டதென்று கூறுவதற்கில்லை. அதற்கு மாருக அரசியல் துறை, நீதித்துறை ஆகியவையெல்லாம் ஒன்ருேடொன்று தொடர்புடையவைகளாக இருக்கின்றன என்பதே உண்மை நிலையாகும். இவ்விடத்தில் நீதிபதிகளாக இருப்பவர்கள், சச்சரவுகளில் அல்லது வழக்குகளில் தீர்ப்பளிக்கின்றபோது சட்டங்களை ஆதாரமாகக் கொள்கிருர்கள் என்ருலும், அரசியல் பண்பாடு (Political culture) சமூக, அரசியல் பிடிப்புகள் (Social and Political Values) ஆகியவற்றையும் கருத்திற் கொள்வதற்குப் பலமான முகாந்திரமிருக்கிறது என்ருல் தவருகாது. எனவே, நீதித்துறையமைப்பு (legal system) அரசியலோடு பிணைக்கப்பட்டிருக்கிறதெனலாம்.

அரசியல் நடப்போடு நீதித்துறையமைப்புப் பிணைக்கப்பட்டிருப்பதற்கு இரு முக்கியமான காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, திறந்த மனப்பான்மையை வலியுறுத்தும் மக்களாட்சிக் கொள்கை சக்தி வாய்ந்த அரசினின்றும் குடிமக்களைக் காப்பாற்ற வேண்டுமெனும் நோக்கத்தை வற்புறுத்துவதால், நீதித்துறை சுதந்திரமானதாக, சார்பற்றதாக, நடுநிலைமை தவருத

[1] R. A. Dahl; Decision making in a Democracy: The role of the Supreme Court as a National Policy maker, Journal of Public Law. VI (1968) p. 279.

தாக இருக்கவேண்டுமென்றும், மக்களது நல்லெண்ணத்தையும் மதிப்பையும் பெற வேண்டுமென்றும் விரும்பப்படுகிறது என்பது. இவ் விருப்பம், அரசியல் முறைகள் பல திடத்தன்மையைப் பெறுவதற்கு இன்றியமையாததாக வற்புறுத்தப்படுகிறது. எனவேதான், குடியாட்சி நாடுகளில் ஆட்சித்துறை நீதிமன்றங்களும், ஆட்சித்துறை டிரிபியூனல்களும் காளான்கள் போல ஏற்படும்போது மக்களிடையே சலசலப்பு ஏற்படுகிறது. இரண்டாவது, இது, அரசாங்கத்திடம் அதிகாரக்குவிப்பு ஏற்படுவதையும், மக்களாட்சியினால் ஏற்படக்கூடிய தவிர்க்கக் கூடிய விளைவுகள் அல்லது பெரும்பான்மையோர் கொடுங்கோன்மையைத் தவிர்க்க அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு வற்புறுத்தப்படுவதற்கு வழிகோலியிருக்கிறது.[1]

பொதுவுடைமைச் சர்வாதிகார அரசியல் முறைகளில் அதிகாரப் பிரிவினைக் கொள்கை ஒப்புக்குக்கூட ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை. மக்களுடைய விருப்பமாகக் கட்சியிருக்கிறது. நீதிமன்றங்கள் மக்களுடைய ஊழியர்களாக இருக்கின்றன. எனவே, நீதிமன்றங்கள் கட்சியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு அதனுடைய கட்டளைகளை நிறைவேற்றுபவைகளாக இருக்கின்றன என்ற முடிவுக்கு வருவது கடினமன்று. குடியாட்சி சர்வாதிகார அமைப்புகளிலுள்ள நீதித்துறை முறையைப் பற்றிய இந்த நோக்குகள் முக்கியமான விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. ஆனால், குடியாட்சிக் கொள்கைகளைப் பின்பற்றும் நாடுகளிலுள்ள நீதிமன்றங்கள் அரசியல் நடப்பினின்றும் விலகியிருக்கின்றன என்று சொல்வதற்கில்லை. தொழிற்சங்கங்கள் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் இங்கிலாந்து நாட்டிலுள்ள நீதிமன்றங்கள் பின்பற்றும் போக்குகளை ஆராய முற்படும்போது அவை நடைமுறையில் இருக்கும் சட்டத்தை விளக்குவதற்குப் பதிலாக நீதிபதிகளின் கொள்கைகள் அல்லது சமுதாயத்தின் உந்தல் சக்திகளுக்கேற்பத் தங்கள் கருத்துகளை வெளியிட்டிருக்கின்றன என்பது தெளிவாகும். சான்றாக, 1901ஆம் ஆண்டு டாஃப்வால் (Taff Vale) முடிவையோ, இருக்சுக்கும் பர்னுடுக்கும் (Brooks Vs. Barnard) இடையிலான வழக்கு முடிவையோ எடுத்துக் காட்டலாம்.

அரசியல் நடப்பில் (political Process) நீதித்துறைகளின் பங்கு பணியை ஆராய்வதற்குப் பின்வரும் துறைகளில் நாம் கவனத்தைச் செலுத்த வேண்டியது அவசியமாகிறது. அவைகளாவன: (1) சட்டத்தின் தன்மை; அரசியல் சார்பு முடிவிற்கும் (Political

[1] Alam R. Ball. Modern Politics and Government (1971) p. 204.

Decision making) அதற்கு முள்ள தொடர்பு; (2) நீதிமன்றங்களின் அமைப்புகளும் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படும் முறையும்; (3) நீதிமன்றங்களின் பணிகளும் அவற்றின் மேலுள்ள வெளிக் கட்டுப்பாடுகளும்; (4) நீதி நடப்புடன் குடிமகனுக்கிருக்கும் தொடர்பு.

(ஆ) சட்டத்தின் தன்மைக்கும் அரசியல் சார்பு முடிவிற்கு முள்ள தொடர்பு (The nature of law and the political process) : மக்களாட்சி முறைகளில் நீதிமுறை, நடுநிலைமை ஒன்றுக்கொன்று பொருந்தியிருத்தல் (consistency), திறந்த மனப்பான்மை, முன்கூட்டியே முடிவொன்றிற்கு வரும் தன்மை, திடமுடைமை ஆகிய குணநலன்களையுடையதாக இருக்கின்றது என்று கருதப்படுகிறது. கொள்கையளவில் குடிமக்களனைவரும் சட்டத்தின் முன் சமம்; சில நடவடிக்கைகள் தொடர்புடைய இறுதி நீதிமுடிவுகள் முன்கூட்டியே கணித்தறியப்பட வல்லவை. நீதி நடைமுறை யாருக்கும் தெரிந்திருப்பதுடன் அம் முறை எப்போக்கில் செல்லும் என்பதும் எவரும் அறியக் கூடியதொன்றாகும். இதுதான் சில சமயங்களில் 'சட்டத்தின் ஆட்சி' (Rule of Law) எனப்படுகிறது. ஆனால், இவ் வம்சங்களெல்லாம் சர்வாதிகார அல்லது எதேச்சாதிகார அரசுகளில் காணப்படுவதில்லை. அங்கு, அதிகாரம் கட்டுப்பாடற்றதாகச் சர்வாதிகார முறையில் செலுத்தப்படுகிறது. வழக்கு விசாரணைகள் கிடையா. அவ்வாறு விசாரணைகள் இருந்தாலும் அவை இரகசியமாக இருப்பதுடன், விசாரணை நடைமுறைகள் வெளியிடப்படுவதில்லை. இவையனைத்தும் மக்களாட்சி முறைகளுக்கு நேர்மாறானவை.

இவையனைத்தும் இவ் விரண்டு முறைகளுக்கிடையேயுள்ள உண்மையான வேறுபாடுகளாகமாட்டா. மக்களாட்சி முறைகளிலும், போர் அல்லது உள்நாட்டில் அமைதியின்மை இருக்கும் போது வழக்கமான நீதி நடைமுறைகள் விலக்கப்பட்டு,அரசாங்கத்திற்குச் சிறப்பதிகாரங்கள் தரப்படுகின்றன. சாதாரண காலத்தில் கூட 'உள்நாட்டுப் பாதுகாப்'பின் பெயரில் காவல் துறைக்கும், சிறப்பு நீதிமன்றங்களுக்கும் அதிக அதிகாரங்கள் தரப்படலாம். இவ்விடத்தில் 'சட்டத்தின் ஆட்சியை'ப் பாதிக்கும் வகையில் செயலாற்றும் ஆட்சித்துறை நீதிமன்றங்களின் வளர்ச்சியையும் பணிகளையும் கவனத்தில் கொள்ள வேண்டும். எதேச்சாதிகார அரசு முறைகளிலும் முன்னதாகவே கணித்தறியக் கூடிய நீதி சம்பந்தப்பட்ட விதிகளும், சட்டப்படியான வழக்கு விசாரணை முறைகளும் (Due process of Law) இருப்பதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரஷ்யாவிலும், இதர ஐரோப்பிய நாடுகளிலுமிருந்த மிதவாத

மக்களாட்சி முறைகளில் இருந்த நீதித்துறை சம்பந்தப்பட்ட கொள்கைகள் மேற்கூறிய சாத்தியக் கூறுகளை நிரூபிப்பவைகளாக இருக்கின்றன எனலாம்.

நடுநிலை பிறழாமை, கணித்து முன்கூட்டிச் சொல்லும் தன்மைகள் சர்வாதிகார முறைகளில் இல்லையென்பது சில பகுதிகளைப் பொறுத்தமட்டிலும் உண்மையாக இருக்கலாம். திருட்டு, கொள்கை, பழி சுமத்தல், கடன்கள் போன்ற குற்றவியல் (Criminal), சிவில் சம்பந்தமான வழக்குகளில் மிதவாத மக்களாட்சி முறைகளில் நடத்தப்படுவதைப் போன்ற தன்மைகளே இங்கும் காணப்படுகின்றன. ஆனால், நிச்சயமற்ற தன்மை, உசிதம் போல நடத்தல், வேண்டியவர்களுக்குச் சாதகமாக இருக்கும் போக்குகள் 'அரசியல் சார்புடைய வழக்குகளில்' தான் (Political cases) காணப்படுகின்றன. சோவியத் யூனியனில் 1956-57ஆம் ஆண்டுகளுக்குப் பிறகு அரசியல் குற்றங்கள் என்று கருதப்பட்டவைகளில் நீதி நடைமுறைகளில் திடத்தன்மை வரவேற்கப்பட்டது.[1] ஆனால், மிதவாத மக்களாட்சி முறைகளில் காணப்படும் தத்துவங்களை மார்க்சீய-லெனினியத் தத்துவங்களில் (Marxist Leninist) ஊறியிருக்கும் சர்வாதிகார அரசுகளும், இவ்வகையைச் சேராத சர்வாதிகார அல்லது எதேச்சாதிகார ஆட்சிகளும் அவற்றின்படி நடக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது இயலாததாகும். மிதவாத மக்களட்ாசி முறைகளிலும், மார்க்சீயத்தை அடிப்படையாகக் கொள்ளாத சர்வாதிகார-எதேச்சாதிகார அரசுகளிலுமுள்ள நீதிமுறைகள் வகுப்பாட்சிச் (Class rule) சாதனங்களாகவும், முதலாளித்துவ ஆதிக்கத்தைப் போற்றிச் சட்டபூர்வமானதாக்கும் கருவிகளாகவும் பொதுவுடைமைக்காரர்களால் கருதப்படுகிறது. அரசின் வீழ்தலுக்கு (Withering away of the Sate) முன் நீதிமன்றங்களின் பணி, நிர்வாகத்திற்கொரு தடையாகவோ சிறுபான்மையோர் உரிமைகளைக் காப்பதாகவோ இல்லாமல் 'ஆட்சியிலிருக்கும் கட்சியின் விருப்பப்படி பெரும்பான்மையோரின் எண்ணத்தை நடைமுறைக்குக் கொண்டுவரும் சாதனமாகவே இருக்கிறதென அவர்கள் கருதுகிறார்கள்.[2] ஒரு கட்டத்திற்கும் மற்றொரு கட்டத்திற்குமிடைப்பட்ட மாற்றமேற்பட்டு வரும் காலத்தில் பல பிரச்சினைகளிருக்கின்றன. இக்காலத்தில் ஏற்படும் குற்றமெதுவும் தத்துவச் சவாலாக

[1]See. F. C. Barhoon, 'Politics in the U.S.S.R.' (Boston Mass., 1966) Ch : IX

[2]For a further Study of the basis of the Soviet Legal System, See H. J. Berma n Justice in the U.S.S. R.' (New York) 1963.

(ideological challenge)வும், அரசியல் முறையில் காணக்கூடிய பலவீனத்தை எடுத்துக்காட்டுவதாவு மிருக்கிறது. மேலும் ரஷ்யர் களிடையேயுள்ள குற்றங்கள் பலவகைப்பட்டவைகளாக இருக் கின்றன. அவைகள் மரணதண்டனை தரப்படக் கூடிய தன்மை வாய்ந்த பொருளாதாரக் குற்றங்களைப் (Economic Crimes) போன்ற வகைகளையும் உள்ளடக்கியவையாய் இருக்கின்றன.

ஆயினும், பொதுவுடைமை நாடுகளில் ஆங்கிலேய-அமெரிக்கச் சட்டவியல் அறிஞர்கள் காணும் நீதிமுறைபற்றிய பலதிறப்பட்ட நோக்குகளும், நீதிமன்றங்களின் பணிகளும் முழுக்கமுழுக்கக் கொள்கை வேறுபாடுகளின் விளைவல்ல. ஆனால், நீதி நடை முறைகளின் முரண்பாடான முன்னேற்றத்திலிருந்து எழுந்தவை. கிழக்கு ஐரோப்பிய பொதுவுடைமை அரசுகள் ஆங்கிலேய அமெரிக்கக் கொள்கைகளை ஒத்தில்லாமல் இதர ஐரோப்பிய நாடு களிலுள்ள நீதிக் கொள்கைகளை ஒத்தவையாக இருக்கின்றன. இவ்வாறு, விசாரணைக்கு முற்பட்ட நடைமுறைகள், விசாரணை யின்போது பின்பற்றப்படும் நடைமுறைகள், பிரதிவாதியின் வழக்குரைஞருக்குள்ளதோடு ஒப்பு நோக்கும்போது அரசு வழக் குரைஞர்களுக்குள்ள அதிகாரம், நடுநிலையாளராக இல்லாமல் புலன் விசாரணையாளராகவுள்ள நீதிபதியின் பணி, நீதிபதிக்குதவி யாகவிருக்கும் அறங்கூறுநர்கள் (Jury) இல்லாமை ஆகியவை யெல்லாம் ஐரோப்பாவிலுள்ள மிதவாத மக்களாட்சி, சர்வாதி கார, எதேச்சாதிகார அரசுகள் பலவற்றிலும் பொதுவாகக் காணப்படுபவைகளாகும். இந்த ஐரோப்பிய நடைமுறைகள் ஆங்கிலேய-அமெரிக்க நடைமுறைகளைப் போல 'குற்றம்சாட்டும்' (Accusatorial) தன்மையுடையவைகளாக இல்லாமல் புலன் விசாரணை (inquistorial)த் தன்மையுடையவைகளாக இருக்கின் றன. இது, ஆங்கிலேயே—அமெரிக்க முற்போக்கு மக்களாட்சி முறைகளில் பின்பற்றப்படும் 'சட்ட ஆட்சி'முறையை யொட்டி அமைந்திருப்பதாகக் கொள்வதற்கில்லை. எனவே, சர்வாதிகார, முற்போக்கு மக்களாட்சி நீதித்துறை முறைகளுக்கிடையே வேறு பாடுகள் இருக்கின்றன என்பது புலனாகும். ஆனால், ஆங்கிலேய அமெரிக்க நீதிமுறையினின்றும் மாறுபட்டிருப்பதாலேயே, மக்க ளாட்சிமுறை நாடுகளில் முக்கியமானவைகளாகக் கருதப்படும் நீதிக்கருத்துகள் இந் நாட்டில் கிடையாதென்பதாகாது.

பல நீதிமுறைகளைக் கொள்கையடிப்படையில் வகைப்படுத்திக் காட்டுவதற்கு எடுத்துக்கொள்ளப்படும் முயற்சியிலுள்ள இடர்ப் பாடுகளை மேற்கு ஜெர்மானிய கூட்டாட்சி அரசியற் சட்ட நீதி

மன்றம் விளக்குவதாக உள்ளது. அந்நீதி மன்றத்தைப் பற்றிப் பார்வையாளரொருவர் குறிப்பிட்டுள்ளதாவது :

ஜெர்மானிய நீதியியலின் இயல்பான மரபையொட்டிய கருத்தில் அரசியற்சட்ட நீதிமன்றங்கள் இருக்கவேண்டுமென்றோ, நடுநிலைமை 'அரசியல் சார்பில்லாமை' போன்றவற்றின் அரசு கருவிகளாக அவை இருக்கவேண்டுமென்றோ எப்போதும் எண்ணப்பட்டதில்லை. அம் மன்றங்களிலுள்ள நீதிபதிகள் சட்டக் கொள்கைகளை ஒரு சார்பில்லாது விளக்கியுரைக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டாலும், ஆட்சிக்கு (Regime) சாதகமாக வுள்ளார்கள். அதாவது, அரசியற்சட்ட நீதிமன்றங்களும், குறிப்பாகக் கூட்டாட்சி அரசியற்சட்ட நீதிமன்றமும் நடப்பி லுள்ள அரசியல் முறையைச் சட்ட பூர்வமானதென நிலைநாட்டி, பாதுகாக்கும் திட்டவட்டமான நீதித்துறை அமைப்புகளாகும்.[1]

கூட்டாட்சி அரசியற் சட்ட நீதிமன்றம் மேற்கு ஜெர்மனி யின் அரசியல் முறையைப் பாதுகாப்பதற்கு எந்தவகையிலும் இதுவரை தயங்கவில்லை. 1949-ஆம் ஆண்டு ஆதாரச் சட்டத்தின் (Basic Law) 21 (2)-ஆம் விதி கூறுவதாவது : கட்சிகள், அவற் றின் குறிக்கோளுக் கேற்ப அல்லது அவற்றின் உறுப்பினர்களின் நடத்தைக் கேற்ப, சுதந்திர ஜனநாயக ஆதார அமைப்பை அல்லது ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசைப் பயமுறுத்தி னாலோ, அழித்துவிட முயற்சித்தாலோ சட்ட விரோதமானவை களாகிவிடும். சட்ட விரோதத் தன்மையைக் கூட்டாட்சி அரசியற் சட்ட நீதிமன்றம் முடிவு செய்யும். இந்த அரசியலமைப்பு விதியின் ஆதாரத்தைக் கொண்டு இந் நீதி மன்றம் 1952-ல் புதிய நாசிக் கட்சியையும் (Neo-Nazi Party) 1956-ல் ஜெர்மானியப் பொதுவுடைமைக் கட்சியையும் (German Communist Party) சட்டவிரோதமானவை யென்று அறிவித்தது.

(இ) நீதிமுறையமைப்பும் ஆட்தேர்வும் : நீதிமுறை அமைப்புகள் மூலக்கூறுகள் (factors) பலவற்றிற்குத் தகுந்தாற்போல மாறு படுகின்றன. கூட்டாட்சியில் கூட்டாட்சிக்கெனவும், அதன் அங்கங்களுக்கெனவும் தனித்தனி நீதிமன்றங்கள் ஏற்படுத்தப் படுவதையும், நீதி வழங்கப்படுவதையும் காணலாம். சான்றாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சி நீதிமன்றங்கள் இராச்சிய அரசாங்கங்களின் நீதி மன்றங்களோடு ஊடுருவி ஏற்படுத்தப்படு கின்றன. ஆனால் இந்த இருவகை நீதிமன்றங்களுக்கும் உச்ச நீதி மன்றமே தலைமைமன்றமாக இருக்கிறது. அதேபோலச் சோவியத்

1. L. J. Edinger, Politics in Germany (Boston, Mass., 1968) p.p. 32

யூனியனிலும் ஐக்கிய, தன்னாட்சி குடியரசுகளிலுள்ள உச்ச நீதி மன்றங்களுக்குத் தலைமை மன்றமாக அந்நாட்டின் உச்ச நீதி மன்றம் அமைந்திருக்கிறது. ஆனால், இந்தியாவும், கானடாவும் கூட்டாட்சிகளாக இருப்பினும் அந்நாடுகளில் ஒரேவொருமுறை நீதிமன்றங்களே இருக்கின்றன.

சில நீதிமுறைகள் குறிப்பிட்ட துறை அல்லது அம்சத்தில் தனிச்சிறப்பை வற்புறுத்துகின்றன. மேற்கு ஜெர்மனியில், சிவில், கிரிமினல் வழக்குகளுக்காக முறையான நீதி மன்றங்களும், தனிப் பட்ட ஆட்சித்துறை நீதி மன்றங்களும், அரசியலமைப்பு நீதி மன்றங்களுமிருக்கின்றன. அங்குத் தனித்தனியாகக் கூட்டாட்சி இராச்சிய நீதிமன்றங்களுமிருக்கின்றன வென்றாலும், மேல் மட்டத் தில் அவையனைத்தும் ஒருங்கிணைக்கப்பட்டிருக்கின்றன. இங்கிலாந் தில் ஃபிரான்சைப் போல ஆட்சித்துறை. அரசியலமைப்பு நீதி மன்றங்கள் தனித்தனியாகக் கிடையாதென்றாலும், அடிமட்டத்தி லுள்ள நீதிமன்றங்களுக்கு மேற்பட்ட நீதி மன்றங்கள் தனித் தனியாக, அதாவது கிரிமினல், சிவில் நீதிமன்றங்கள் இருக்கின் றன. இவைகளுக்குத் தனித்தனி மேல்முறையீட்டு மன்றங்களு மிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் தலைமையாக விளங்குவது பிரபுக்கள் சபையாகும். இப் பிரபுக்கள் சபை, சட்டமன்றத்தின் ஒரு பகுதி யெனினும், தலைமை மேல் முறையீட்டு மன்றமாகவு மிருப்பது ஒரு சிறப்பம்சம் ஆகும். ஆனால் சட்ட வழக்காறு அடிப்படையில், சட்ட அறிவுடைய சிலரே (ஒன்பது பேர்கள்) மேல் முறையீட்டு வழக்குகளில் கலந்து கொள்ளலாம். பிரிவி கவுன்சிலின் நீதிக்குழு சில காமென்வெல்த் நாடுகளுக்கும் மேல் முறையீட்டு நீதிமன்றமாக இருக்கிறது.

மத்திய அரசாங்கத்தின் வளர்ந்துவரும் அதிகாரங்கள் சார்பு டைய விஷயங்களிலும், சிவில், ஆட்சித்துறை உரிமைகளைப் பாது காக்கும் விஷயங்களிலும், நீதி மன்றங்களின் சில பணிகளைப் பொறுத்த வரையிலும் நீதி முறையின் கட்டமைப்பு முக்கியமான தாகும். குறிப்பாக நீதித்துறைக்குச் செய்யப்படும் தேர்வுகளில் பின்பற்றப்படும் கொள்கைகள் முக்கியமானதாகும். நீதிபதி களைத் தேர்ந்தெடுத்தல், அவர்களைப் பதவியிலிருந்து விலக்கல் ஆகியவற்றில் பின்பற்றப்படும் நடைமுறைகளும், தேர்ந்தெடுக் கப்படுபவர்களின் தராதரங்களும், தகுதிகளும், நீதிபதிகளுக் கிருக்கும் சுதந்திரத்தின் தன்மையும், அளவையும், அவர்களின் அரசியல் நடத்தையும் ஆராய்ந்தறிவதற்குப் பயன்படும் தவிர்க்க முடியாத மூலக்கூறுகளாகும்.

நீதிபதிகள் அரசாங்கத்தினுல் நியமனம் செய்யப்படலாம். நேரிடையாகவோ மறைமுகமாகவோ தேர்ந்தெடுக்கப்படலாம். அல்லது சக நீதிபதிகளால் தேர்ந்தெடுக்கப்படலாம். அவர்களுக்குள்ள தகுதிகளின் தன்மையும், சட்டத்துறையிலுள்ள பயிற்சியும் மாறுபடுகின்றன. மேற்கு ஜெர்மனியும், ஃபிரான்சும் நீதிபதிகளுக்கான படிமரபுத்தன்மை வாய்ந்த தொழில் முறைமையை ஏற்படுத்தியிருக்கின்ற வகையில் சிறந்த நாடுகளாகும். இவ்விரண்டு நாடுகளிலும் சட்டக் கல்வியில் பட்டம் பெற்று, குறிப்பிட்ட காலத்திற்குப் பயிற்சிபெற்று, இறுதியில் கடுமையான போட்டித் தேர்வில் வெற்றி பெற்ற பிறகே அவர்கள் நியமிக்கப்படுகின்றுர்கள். இந்தியாவிலும் நீதிபதிகளாவதற்குச் சட்டக்கல்வியின் பட்டம் முக்கியமான தகுதியாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. மேலே கூறப்பட்ட ஐரோப்பிய நாடுகளில் இங்கிலாந்திலும், இந்தியாவிலுள்ளது போல் வழக்கறிஞர்களாக இருப்பவர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்படுவதில்லே. அதற்கு மாருக, அந் நாடுகளில் நீதிபதிகளாக வர விரும்புபவர்கள் பட்டப்படிப்பு நிலேயிலேயே நீதித்துறையில் பணியாற்றுவதற்கு முடிவு செய்து, அதற்கான கல்வியைப் பெற வேண்டும். அவ்வாறு ஆரம்பத்திலேயே நீதித்துறைப் பணியைத் தேர்ந்தெடுத்து, அதில் பணியாற்றுபவர்களுக்குப் பதவிக்காலம் உறுதி செய்யப்படுகிறது. தேர்ந்தெடுக்கப்படும் முறையும் பயிற்சியும் இருப்பதால், தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் பெரும்பாலும் உயர் நடுத்தர வகுப்புச் சூழ்நிலேயிலிருந்தே வருகிறுர்கள். இரண்டு நாடுகளிலும் அவர்கள் பொதுப்பணி ஊழியர்களுக்கேயுரிய நடுநிலேமைத் தன்மையையும், அரசின் நலம் என்ற கொள்கையை அடையச் செயலாற்றும் தன்மையையும் பெற்றுள்ளனர்.

இங்கிலாந்து நாட்டில் மாஜிஸ்டிரேட்டுகளுக்கு மேற்பட்ட நிலேயிலுள்ள நீதிபதிகள் வழக்குரைஞர்கள் தொழில் புரிபவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவதால் புராதனமாக இருந்துவரும் பழக்க வழக்கங்களில் பிடிப்புடைய நடுத்தர வகுப்பிற்கேயுடைய தன்மையுடையவர்களாக இருக்கின்றுர்கள். அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படும் இதர அமைப்புகளில் உள்ளவாறு இங்கும் நீதித்துறைக்கான நியமனங்களில் சிபாரிசுகளும் காணப்படுகின்றன. ஆங்கில நீதித்துறையின் பிறிதொரு சிறப்பம்சம் நீதிபதிகளின் பதவிக்காலம் உறுதியளிக்கப்பட்டுக் காப்பாற்றப்பட்டிருப்பது. உயர் மட்டங்களிலுள்ள நீதிமன்றங்களில் பணியாற்றும் நீதிபதிகள் தவறுன நடத்தைக்காகப் பாராளுமன்றத்தின் இருசபைகளின் தீர்மான அடிப்படையில்தான் பதவி நீக்கம் செய்யப்படலாம்; இவ்வாறு ஃபிரான்சு, மேற்கு ஜெர்மனி,

இந்தியா போன்ற நாடுகளிலுள்ளவாறு நீதிப்பணிக்கான பயிற்சி, தேர்வுமுறை, பதவிக்காலக்காப்பு ஆகியவைகளால் ஏற்படும் மதிப்பு, மரியாதையெல்லாம் அரசியல்முறை நிலையானதாக இருப்பதற்குதவுபவைகளாகும்.

நீதிபதிகள், தேர்தல் வாயிலாகத் தெரிந்தெடுக்கப் பட்டால் அவர்களுக்குத் தரப்படும் மரியாதை குறைந்து காணப்படும் என்று கருதுவதற்கிடமிருந்தாலும், நீதித்துறை வாக்காளர் தொகுதிக்கு அல்லது தேர்தலை நடத்திவைக்கும் குறிப்பிட்ட குழுக்களுக்குப் பொறுப்புடையதாக இருக்கும் என்பதைக் குறிப் பிடத்தான் வேண்டும். அமெரிக்காவில் சில இராச்சியங்களில் கீழ்மட்டங்களிலுள்ள நீதிபதிகள் இவ்வாறு தேர்ந்தெடுக்கப் படுவதால் அந்தந்த இராச்சியங்களில் அவ்வப்போது நிலவும் அரசியல் உணர்ச்சிக்குத் தகுந்தாற்போல அவர்கள் வளைந்து கொடுக்க வேண்டியிருக்குமென்பது மட்டுமல்லாமல் நீக்கிரோ உரிமைகள் போன்ற பிரச்சினைகளில் கூட்டாட்சி நீதிமன்றங் களுக்கும் இவர்களுக்குமிடையே பூசலைத் தோற்றுவிக்கவும் கூடும். சோவியத் யூனியனில் நீதிபதிகளனைவரும் நேர்முகத் தேர்தல் மூலமாகவோ, பொருத்தமாகச் சம்பந்தப்பட்ட சோவியத் யூனியனாலோ தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு இதர சில நாடுகளில் வற்புறுத்தப்படும் தகுதிகள் இன்றியமை யாதவையல்ல. எனவே, சோவியத் நீதிபதிகள் குறைந்த தர முடையவர்களாக இருப்பதோடு, தேர்வு முறைகளில் கட்சியின் குறுக்கீடும், ஆதிக்கமும் காணப்படுகிறது. ஆகையால், நீதித் துறை கட்சிக்கட்டுப்பாட்டிற்குட்பட்ட அரசாங்கத்திற்கு இயல் பான ஆதரவை நல்குவதாக இருக்கிறது.

அரசியலமைப்பு நீதிமன்றங்களும் (Constitutional Courts) தங்களுடைய பணிகளின் ஒருபகுதியாக நடுத்தீர்ப்புக் கூறும் (adjudication) அதிகாரங்களுடைய நீதிமன்றங்களும் நியமனங் களைப் பொறுத்தவரையிலும் அதிகமான அளவில் அரசியல் சார்புடையவைகளாக இருக்கின்றன. 1949-ல் பிரிவிக் கவுன்சி லுக்குப் பதிலாக மேல் முறையீடு வாயலாக வரும் வழக்குகளில் இறுதித் தீர்ப்பு வழங்கும் அதிகாரத்தோடு ஏற்படுத்தப்பட்ட கனேடிய உச்ச நீதி மன்றத்திற்கு நியமனம் செய்யப்படும் நீதிபதிகளில் குறைந்தபட்சம் மூவராவது இன, சமய, சமநிலை யைக் காக்கும் வகையில் கியூபெக்கை (Quebec)ச் சேர்ந்தவர் களாக இருக்க வேண்டும்.[1] மேற்கு ஜெர்மனியின் கூட்டாட்சி

1. See Donald E. Fout's Policy-making in the Supreme Court of Canada 1950-60. in Comparative judicial behaviour. ed. G. Sohubert and D. J. Damelski (Oxford 1969) Ch. 10.

அரசியற்சட்ட நீதிமன்ற நீதிபதிகள் பாராளுமன்றத்தினுல் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். அந் நீதிபதிகளில் அறுவர் கீழ் மட்டங்களில் நீதிபதிகளாகப் பணியாற்றுபவர்களிலிருந்து ஆயுட் காலத்திற்கும், இதர பதின்மா அரசியல் கட்சிகள் ஆட்சித்துறை. இதர மேற்குடியினர் போன்ற மிக முக்கியமான குழுக்களிலிருந்து எட்டாண்டுப் பதவிக்காலத்திற்கும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நீதிமன்றமெனும் உண்மையான தன்மையில்லாததும், ஆனுல், சட்டங்கள் அரசியலமைப்பிற் குட்பட்டவையா, அல்லவா என்பதை ஆய்வு செய்யும் அதிகாரம் பெற்றதுமான ஃபிரான்சு நாட்டு அரசியலமைப்பு நீதிமன்றம் நீதிபதிகள், மேற்கு ஜெர்மனியிலுள்ளவாறல்லாமல், முறைப்படியான ஆட்சித்துறை நீதி மன்றங்களில் பணியாற்றுபவர்களிலிருந்து நியமிக்கப்படுகிருர்கள். அதனுடைய உறுப்பினர்கள் நீதிபதிகளாகத் தொழிலடிப்படையில் பணியாற்றுபவர்களல்லர். ஆனுல் அவர்கள் குடியரசின் முன்னுள் தலைவர்களாவர். அவர்களில் மூவர் ஒன்பதாண்டுப் பதவிக் காலத்திற்குக் குடியரசுத் தலைவராலும், தேசிய சட்டசபையாலும், செனட்டாலும் நியமிக்கப்படுகின்றனர்.

அமெரிக்க உச்ச நீதிமன்ற நீதிபதிகள் செனட்டின் இசைவு பெற்று, ஆயுட்காலத்திற்கு அரசியல் கண்ணேட்டத்தோடு நியமிக்கப்படுகிருர்கள். இது உண்மையெனினும், இல்லையெனினும் இவ்வம்சத்திற்கு அதிக விளம்பரம் தரப்படுகிறதென்னவோ நடைமுறையில் எவரும் அறிவதாகும். இந் நீதிமன்ற நீதிபதிகளின் நியமனம் அரசியல் அடிப்படையில் செய்யப்படுகிறதென்பது யாவரும் அறிந்ததெனினும் அம் முறையை யாரும் எதிர்ப்பதில்லை. ஜான் சிமிதாசர் (John Schmidhauser) குறிப்பிடுவது போல அமெரிக்க உச்சநீதிமன்ற நியமனத்தில் வகுப்புப் பின்னணி முக்கியமானதாகும். அந் நீதிமன்ற நீதிபதிகளில் 88 விழுக்காட்டினர் வடமேற்கு ஐரோப்பிய இனக்குழுக்களிலிருந்து வருகிருர்கள். அது, அமெரிக்கக் கருத்துப்படி நடுத்தர மேல் வகுப்பைக் குறிக்கிறது. அந் நீதிமன்றத்தின் அனேகமாக எல்லா நீதிபதிகளும் நியமனம் செய்யப்படுவதற்கு முன்பு அதிக அரசியல் ஈடுபாடுடையவர்களாக இருந்திருக்கிருர்கள். இங்ஙனம் அவர்கள் வகுப்பு, அரசியல், பின்னணிக் காரணங்களுக்காகவும், அரசியல் சார்புடைமைக்காகவும் நியமிக்கப்பட்ட போதிலும், அண்மைக் காலங்களில் அந் நீதிமன்றம், இதர அரசியல் தன்மை வாய்ந்த நிலையங்களைக் காட்டிலும் குடிமையுரிமைகள், இனப்பிரச்சினை உள்ளிட்ட பல விஷயங்களில் அதிகமான அளவில் பரந்த நோக்கோடு செயலாற்றி வந்திருக்கிறது. 1953-ல் குடியரசுத் தலைவர் ஐசனேவரால் நியமிக்கப்பட்ட தலைமை நீதிபதி வாரன்

(Chief Justice Warren) இத் துறைகளில் பழமைப்போக்கை எதிரொலிப்பார் என்று எதிர்பார்க்கப்பட்டதற்கு மாறாக, அவர் 1968-ஆம் ஆண்டில் பதவியிலிருந்து ஓய்வுபெறும்வரை மக்களாதரவு பெற்ற பிரச்சினைகளுக்குப் பேராதரவு தருபவராக விளங்கினார். 1969-லும் 1970-லும் நீதிபதி ஃபோர்டாவின் (Justice Fortas) இடத்தில் ஒருவரை நியமிக்க, குடியரசுத் தலைவர் நிக்சனுக்கேற்பட்ட இடர்ப்பாடுகள் அப்போதிருந்த அரசியல் பிரச்சினைகளின் ஆழத்தை எடுத்துக்காட்டுபவைகளாக இருந்தன. கையின்ஸ்வொர்த் (Haynesworth), கார்ஸ்வெல் (Carswell) ஆகியவர்களின் நியமனத்தை செனட் நிராகரித்தது[1] இருபதாம் நூற்றாண்டில் இரண்டாவதும் மூன்றாவது தடவையுமேயாகும். எனவே நிக்ஸன், அமெரிக்காவின் தென் பகுதியிலிருந்து ஒருவரை நியமிக்கும் முயற்சியைக் கைவிட்டு, நிராகரிக்கப்பட்ட இருவரையும்விட, குடியுரிமையுள்ளிட்ட பல பிரச்சினைகளிலும், முற்போக்குக் கருத்துடையவராகக் கருதப்பட்ட மினசோட்டா (Minnesta)வைச் சேர்ந்த பிளாக்மன் (Blackmun) என்பவரைத் தேடவேண்டியதாயிற்று. இதைத் தொடர்ந்து செனட்டால் நிராகரிக்கப்பட்ட நீதிபதி கார்ஸ்வெல், அமெரிக்க நாட்டுச் செனட்டுக்குப் போட்டியிடும் தம் எண்ணத்தைக் குடியரசுக் (Republican) கட்சியின் ஃபிளாரிடா ஆரம்பக் கூட்டமொன்றில் அறிவித்தார்.

நீதிபதிகளின் பதவிக்காலத்திற்குள்ள உறுதிப்பாடு அரசாங்கம் அல்லது வாக்காளர் தொகுதிகளின் உந்துவிக்கும் சக்திகளிலிருந்து சுதந்திரமாக இயங்கும் தன்மையை நீதித்துறைக்கு அளிக்கிறதென்று திட்டவட்டமாகச் சொல்வதற்கில்லை. ஆனால் அது அரசியல் முறையின் திடத்தன்மையை எடுத்துக்காட்டும் அறிகுறியாகத் திகழ்கிறதெனலாம். அது அரசியல் முறையில் சக்திமிக்கவர்களாகவுள்ள மேல் மட்டத்தினரது அதிகார ஆதிக்கத்தை விளக்கும் ஆற்றல் மிக்கதோர் அறிகுறியாகவுமிருக்கலாம். அமெரிக்க உச்ச நீதிமன்றத்தைப் பற்றி இராபர்ட்தால் (Robert

[1] அமெரிக்கக் காங்கிரஸ் (சட்டமன்றம்) குடியரசுத் தலைவரைத் தோற்கடித்துப் பதவியிலிருந்து அகற்ற முடியாதென்றாலும், கூட்டாட்சி மட்டத்தில் நிர்வாகம் அதன் கொள்கைகளை மாற்றிக் கொள்ளுமாறு செய்யச் சில சமயங்களில் முடியும். இதற்கு எடுதத்துக்காட்டாக இவர்களின் நிராகரிப்பைக் காட்டலாம். இவர்களை செனட் நிராகரித்தற்கு இவர்களுடைய நீதித் தொடர்புகளும், இனக்கொள்கையும் காரணங்களாகும். இவ்விரு தோல்விகளும் நிக்சனின் கன்சர்வேடிவ் கொள்கைகளுக்குக் கிடைத்த சம்மட்டி அடிகளாகும்; எனவே, அவை அரசியல் தோல்விகளாகும். கொள்கையை மாற்றிக்கொள்ளுமாறு செய்வதற்குள்ள அதிகாரம் நியமன அதிகாரத்திற்கும் மேலானதெனச் சொல்லப்படுகிறது.

Dahl)குறிப்பிடுவதாவது:[1] அது வல்லமை மிக்க தேசியக் கூட்டணியின் தவிர்க்க முடியாத வேரர் அங்கமாக இருக்கிறது. அரசியல் தன்மையின் ஓர் அங்கம் என்ற வகையில் அந் நீதிமன்றம் அக் கூட்டணியின் பெருங்கொள்கைகளுக்கு ஆதரவு அளிக்கிறது. இது திடமான அரசியல் முறைகளில் காணப்படும் உண்மையாகும். வளர்ந்து வரும் நாடுகளில் நீதித் துறையில் காணப்படும் தலையீடுகள் அரசியல் முறை திடத்தன்மையைப் பெற்றில்லாததைக் குறிப்பிடும் அறிகுறிகளாகக் கொள்ளப்பட வேண்டுமே யல்லாது, நீதித் துறை அரசியல் நடப்பில் தானுக ஈடுபாடு கொண்டிருப்பதாக ஆகாது.

அரசியல் முறையில் எந்த அளவிற்குத் தனிப்பட்ட துறைகளில் திறமை தேவைப்படுகிறதோ அதற்குத் தகுந்தாற்போல நீதிமன்றங்கள் பலவகைப்பட்ட பணிகளைச் செய்கின்றன. ஆட்சித் துறை நீதிமன்றங்களுடையவும், முறைப்படியான நீதிமன்றங்களுடையவுமான பணிகளைப் பற்றிய கருத்துகள் இந் நூலின் இதர பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறமையால், இவ்வத்தியாயத்தில் அரசியல் சட்ட நீதி மன்றங்களின் பணிகள் அல்லது எங்கு இத்தகைய நீதிமன்றங்கள் இல்லையோ அங்கு நீதிமன்றங்கள் எத்தகைய அரசியற் சட்ட சார்புடைய பணிகளைச் செய்யவேண்டியவையாக இருக்கின்றன என்பதைச் சுருக்கமாகக் காணலாம் இத்தகைய நீதிப் பொறுப்பை ஆய்வதற்கு உதவியாக நான்கு தெளிவான பணிகளை இவ்விடத்தில் குறிப்பிடலாம்: (1) நீதிப்புனராய்வும் அரசியலமைப்பு விளக்கமும்; (2) அரசியல் நடப்பிலுள்ள தனித்தனி நிறுவனங்களுக்கிடையே தோன்றும் வழக்குகளில் தீர்ப்பு; (3) நடைமுறையிலிருக்கும் அரசியல் முறைக்கு அளிக்கப்படும் பொதுவான ஆதரவு; (4) தனி நபர் உரிமைகள் பாதுகாப்பு.

சட்டங்கள் முடிவுகளின் அரசியலமைப்புக்கு உட்பட்ட அல்லது உட்படாத தன்மை பற்றிய புனராய்வு அதிகாரம் பலவாறாக வேறுபடுகிறது. பிரிட்டனில் பாராளுமன்றத்திற்குள்ள இறைமையும், எழுதப்பட்ட அரசியலமைப்பொன்று இல்லாததும், சட்டங்கள் அவற்றை இயற்றியவர்களின் நோக்கங்கள் என்னவென்பதை அறிந்து அதற்குத் தகுந்தாற்போல அவை நீதிமன்றங்களால் பரிசீலனை செய்யப்பட்டு முடிவுகள் வெளியிடப்படுகின்றன. இது, அமெரிக்க நாட்டில் படிப்படியாக உச்ச நீதிமன்றம் பெற்று வந்துள்ள நீதிப்புனராய்வு அதிகாரத்திற்கு எந்த

1. R. A. Dahl, Pluralist Democracy in the United States (Chicago 1967) pp. 167-8.

வகையிலும் சமமானதாகாது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் 1803ஆம் ஆண்டின் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற மார்பரிக்கும், மடிசனுக்கும் (Marbury V. Maadis n) இடையிலான வழக்கில், நீதிமன்றத்தால் அரசியலமைப்பிற்குத் தரப்பட்ட விளக்கத்திற்கு மாறுபட்டதாகக் கருதப்படும் எந்தச் சட்டமும், அரசியலமைப்பிற்கு அப்பாற்பட்டது, மாறானது, விரோதமானது என்று தீர்ப்பளிப்பதற்கு நீதிமன்றத்திற்குள்ள உரிமை நிலைநாட்டப்பட்டது. பொதுவாக, நீதிமன்றம் அமெரிக்க அரசியல் நடப்பில் வலிமை வாய்ந்த சக்திகளை எதிரொலிக்கும் வகையில் நடந்து வந்திருக்கிறது. 1930ஆம் ஆண்டில் குடியரசுத்தலைவர் ரூஸ்வெல்ட் அவர்களின் புதுநோக்குத் திட்ட (New Deal)த்தின் கீழ்க் கொண்டுவரப்பட்ட சட்டங்களில் பலவற்றை அரசியல் சட்டப்படி செல்லத்தகாதவை என்று நீதிமன்றம் அறிவிக்கும் வரை நீதிப் புனராய்வு அதிகாரம் அரசியல் முறையில் தீவிர முரண்பாடுகளைத் தோற்றுவிக்கவில்லை. குடியரசுத் தலைவர், பெரும்பான்மையான அமெரிக்க மக்களின் விருப்பங்களென்று தாம் கருதியவைகளுக்கு நீதிமன்றம் இணக்கமாக நடக்கவேண்டுமென்பதற்காக அதன் விவகாரங்களில் தலையிட முயற்சி செய்தார். இம்முயற்சியில் அவர் தோல்வியடைந்தாரென்றாலும், 1937ஆம் ஆண்டுக்குப் பிறகு நீதிமன்றம், கூட்டாட்சி அரசாங்கத்தால் கொண்டுவரப்பட்ட பொருளாதார ஒழுங்கு முறைகள் அரசியலமைப்பை மோசமாகப் பாதிக்காது எனக் கருதியது. எனவே, இத்தகைய சட்டங்கள் இதுகாறும் எதிர்க்கப்படவில்லை.

மேற்கு ஜெர்மனியின் கூட்டாட்சி அரசியற் சட்ட நீதிமன்றம் ஒன்றுதான் ஐரோப்பிய அரசுகளில் அமெரிக்க மாதிரிக்குச் சற்றேறக்குறைய சமமானதாக இருக்கிறது. நீதிப் புனராய்வு பற்றிய மிக விரிவான அதிகாரங்கள் வைமார் குடியரசிற்கு (Weimar Republic) ஏற்பட்ட கதி கூட்டாட்சி குடியரசிற்கும் ஏற்பட்டு விடாமல் காப்பாற்றுவதற்காக 1949ஆம் ஆண்டு அரசியலமைப்பில் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. அதாவது, வைமார் குடியரசு அரசியலமைப்பிற்குத் தீவிர பங்கம் ஏற்படாத வகையில் ஹிட்லர் பதவிக்கு வந்ததும், அதன் பிறகு அவர் சர்வாதிகாரியானதும் அவ்வமைப்பில் இருந்த குறைபாடுகளினால் சாத்தியமாயிற்று என்று கருதப்படுகிறது என்பதாகும். முக்கியமாக அதிகாரம், வலதுசாரி, இடதுசாரிக் கட்சிகளை அடக்கியொடுக்குவதற்குப் பயன்படுத்தப்பட்டதென்பது குறிப்பிடத்தக்கதாகும். இதே மாதிரியான வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த காரணங்களுக்காக இத்தாலிய, ஆஸ்திரிய உச்ச நீதி மன்றங்களுக்கு நீதிப் புனராய்வு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறதெனினும், அந் நீதி

மன்றங்களின் அதிகாரங்கள் விரிவானவையல்ல.[1] 1958-ஆம் ஆண்டில் ஐந்தாவது குடியரசு அரசியலமைப்பின்படி ஃபிரான்சில் ஏற்படுத்தப்பட்டுள்ள அரசியலமைப்புக் கழகம் (Constitutional Council) தேசிய சட்டசபையால் ஆதிக்கம் செலுத்தப்பட்ட, இதர்கு முற்பட்ட குடியரசு அரசியலமைப்பில் காணப்பட்ட முறையினின்றும் பெருமளவிற்கு மாறுபட்டு, அதிக அதிகார முடையதாக இருக்கிறதென்றாலும், அதனுடைய நீதிப்புனராய்வு அதிகாரங்கள், சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையைப் பரிசீலனை செய்வதற்கு அரசாங்கத்தின் இதர நிலையங்களின் துவக்கத்தின் பேரில்தான் செலுத்தப்பட முடியுமாதலால், அவ்வதிகாரங்கள் வரையறை செய்யப்பட்டிருக்கின்றன என்பது தெளிவாகும்.

எல்லா அரசியற் சட்ட நீதிமன்றங்களும் பல்வேறு வகைப்பட்ட அரசியல் நிலைகளுக்கிடையே அவை கூட்டாட்சி மாநில அரசாங்கங்களாக இருந்தாலும், அல்லது நிர்வாகத்துறை-சட்டத் துறையாக இருப்பதாலும் தீர்ப்பளிக்கும் முக்கியமானபணியைச் செய்கின்றன. அமெரிக்க ஆரம்பகால வரலாறு, இராச்சியங்களின் அதிகாரங்களுக் கெதிரான தேசிய அரசாங்கத்தின் உரிமைகளை உச்ச நீதி மன்றம் வற்புறுத்தியதாக எடுத்துக் காட்டுகிறது. 1821-ல் மக்கல்லோ-மேரிலாந்து (Maculloh V. Maryland) வழக்கில் கூட்டாட்சி வங்கியொன்றை ஏற்படுத்துவதற்கு காங்கிரசுக்குள்ள உரிமையை எதிர் வழக்காடும் வகையில் வரியொன்றை விதிப்பதற்கு இராச்சியங்களுக்கு அதிகாரம் கிடையாதென்று உச்ச நீதி மன்றம் தீர்ப்பளித்தது. கூட்டாட்சி அரசியல் நிலையங்களின் அதிகாரங்கள் இவ்வாறு சாதிக்கப்பட்டதானது தேசிய ஒருமைப்பாட்டின் வளர்ச்சிக்கு வழிகோலியதோடல்லாது நிர்வாகத்துறையின் அதிகாரங்கள் வளர்ச்சி யடைவதற்கும் உதவியது.

மைய இராச்சிய அரசாங்கங்களுக்கிடையே தீர்ப்பு வழங்கும் இத்தகைய முயற்சிகள் மேற்கு ஜெர்மனிக் கூட்டாட்சி அரசியற் சட்டமன்றத்தின் குறுகிய கால வரலாற்றிலும் காணப்படுகின்றன. 1958-ஆம் ஆண்டில், ஹாம்பர்க் (Hamburg) பிரமன் (Bremen) அணு ஆயுத வழக்குகள் அரசியலமைப்பிற்கு முரணானவையென்று கூட்டாட்சி அரசியற் சட்ட மன்றம் தீர்ப்பளித்தது, மேற்கு ஜெர்மானிய கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரத்தை நிலைப்படுத்துவதற்காகும்.

[1] For details on these courts see Taylor Cole, Three Constitutional Courts; A Comparison, American Political Science Review, L. 114.

இருப்பினும், அரசியற் சட்ட நீதிமன்றங்களின் முடிவுக ளெல்லாம் கூட்டாட்சி அமைப்புகளில் கூட்டாட்சி அரசாங்கத்தை வலுபடுத்தும் நோக்கத்தோடுதான் இருக்கின்றன என்று சொல் வதற்கில்லை. அங்ஙனமே, அத் தீர்ப்புகள் பிரதிநிதித்துவ மன்றங்களுக்கு எதிராகச் செயல்புரியும் நிர்வாகத் துறைக்கு ஆதரவாக இருப்பதாகவும் கருதுவதற்கில்லை. எனினும், இருபதாம் நூற்றுண்டில் தேசிய அரசாங்கங்களுக்கு அதிகமான சிக்கல் நிறைந்த பணிகள் அளிக்கப்பட்டு, அவை நிறை வேற்றப்பட வேண்டுமெனும் இயக்கம் வலுப்பெற்றிருப்பதால் அரசியல் நடப்பின் ஒரு பகுதியாக விளங்கும் அரசியற் சட்ட நீதி மன்றங்கள் இவ்வியக்கத்தைப் பிரதிபலிப்பவைகளாகத் திகழ் கின்றன.

இவ்வாறு அரசியல் சட்ட நீதிமன்றங்கள் நடைமுறையி லிருக்கும் அரசியல் முறையைப் பலப்படுத்தி ஆதரிக்கும் முக்கிய மான பணிகளைச் செய்வதுடன், மையக்குவிப்புப் போக்கிற்குச் சாய்காலாவுமிருக்கின்றன எனலாம். எந்த அளவிற்கு நீதி மன்றங்கள் இவ்வகையில் பணி புரிய வேண்டுமென்பது ஆங்காங் குள்ள அரசியல் பண்பாட்டைப் பொறுத்ததாகும். மேற்கு ஜெர்மனியிலும், இத்தாலியிலும் இறுதி நோக்கங்கள், அரசாங்கக் கூட்டமைப்பு ஆகியவற்றில் இங்கிலாந்திலுள்ளதை விடக் குறைவான ஒப்புதல் இருப்பதால் அங்கெல்லாம் நீதி மன்றங்கள் ஆற்ற வேண்டிய பணிக்கு மிகுந்த அரசியல் முக்கியத்துவமிருக்கிறது. இவ்வாறு அரசியல் துறையில் கொள்கை முடிவில் நீதிமன்றங்கள் ஈடுபாடுடையவைகளாக இருப் பினும், அவற்றின் நடுநிலைமைத் தன்மையினின்றும் பிறழாமல் இருக்கின்றன என்பதை வற்புறுத்த வேண்டியது அவசியமாகிற தென்பதோடு, அவற்றின் முடிவுகளுக்குத் தரபபட வேண்டிய மரியாதை அதிகரிக்கப்படவேண்டுமென்பதையும் குறிப்பிட வேண்டியது முக்கியமாகிறது. இவ்விடத்தில் 1937ஆம் ஆண்டில் அமெரிக்க உச்ச நீதிமன்றத்தின் அமைப்பை (Composition) குடியரசுத் தலைவர் ரூஸ்வெல்ட் எவ்வாறு மாற்றியமைக்க முயன்று தோல்வியுற்றுர் என்பதை (அதிலும் குறிப்பாக மக்களின் பேராதரவைப் பெற்றிருந்தும்) குறிப்பிடாமல் இருக்க முடிய வில்லை. அவர் இம் முயற்சியில் தோற்றதற்கான காரணம், முக்கிய மாக நீதிமன்றம் அரசியலுக்கப்பாற்பட்டதாக இருந்ததென்பதும், குடியரசுத் தலைவர் விரும்பிய முறையில் நீதிமன்ற அமைப்பில் கை வைப்பது அரசியல் ரீதியாகப் பார்த்தாலும் அமெரிக்க அரசியலில் காணப்படும் திடத்தன்மைக்கு ஊறுவிளைவிக்கக் கூடுமென்பது மாகும். பூசலுக்குக் காரணமாக இருந்த கொள்கையை மாற்றிக்

கொண்டதன் மூலமாக நீதிமன்றம் தனக்கிருந்த அரசியலைப் புரிந்து கொள்ளும் திறமையை நன்குணர்த்திவிட்டது

அரசாங்கங்களின் செயல்களையும் முடிவுகளையும் நியாயமானவைகளாகவும், சட்டபூர்வமானவைகளாகவும் செய்வதற்கு நீதிமன்றங்கள் அவசியமானவைகளாகும். அதே சமயத்தில், அவைகள் பழமைக் கருத்தை (Conservative Opinion) பிரதிபலிப்பவைகளாக இருக்க வேண்டியதும் அவசியமாகிறது. இதற்கு, பெரும்பான்மை மக்களின் விருப்பங்களை அவை எதிரொலிக்க மாட்டா என்றோ, மக்களாட்சிக் கொள்கைகளுக்கு எதிராக இருப்பவை என்றோ பொருளாகாது. ஆனால், நீதிமன்றங்கள் பெரும்பான்மை மக்களின் கருத்துகளை எதிரொலிக்கும் போது மிக எச்சரிக்கையாக நடந்து கொள்கின்றன. 1966ஆம் ஆண்டு முதல் அமெரிக்க உச்ச நீதிமன்றம் இன ஒதுக்கல் (Segregation) பிரச்சினைகளில் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்கிறதென்றால், அது நீதிமன்றத்தின் அமைப்பில் திடீரென்று ஏற்பட்ட மாறுதல்களின் விளைவால் அல்ல. ஆனால், சிறுபான்மையாக இருந்த தென் இராச்சியங்களின் பிரச்சினையாக இல்லாமல், தொழில் துறையில் முன்னேற்றமடைந்திருந்த இராச்சியங்களில் முக்கியமான பிரச்சினையாக அமெரிக்க அரசியலில் அமைதியற்ற நிலைமையைத் தோற்றுவித்திருந்ததால் எனலாம். எந்த அளவிற்கு அரசியல் நடப்பிற்கும் நீதிமன்றத்திற்கும் தொடர்பிருக்கிறதென்பதற்கெடுத்துக் காட்டாக, குடியரசுத் தலைவர் ஜான்சன், நீதிபதி ஃபோர்டாவை, தலைமை நீதிபதியாக அறிவித்ததும், அதைத் தொடர்ந்து அவரது நிதி ஈடுபாடுகள் குறித்து வெளியான தகவல்கள் காரணமாக அவர் பதவியைத் துறக்க நேரிட்டதும், அதனால் நீதிமன்றத்திற்கு ஏற்பட்ட பேரையும் குறிப்பிடலாம்.

மேற்கூறப்பட்ட காரணங்களால், தனி மனிதனுடைய உரிமைகளைக் காக்கும் நான்காவது பணியில் நீதிமன்றங்கள் மிகுந்த எச்சரிக்கையுடனிருக்கின்றன. "சமூகப் பொருளாதார, தனி மனித உரிமைகள் பற்றிய பிரச்சினைகளில் மேற்கு ஜெர்மானிய நீதிமன்றம் புதுமைமிக்கதாக இருப்பதற்குப் பதிலாக பழைமை போற்றுவதாகவும், ஒரு சார்புடைய சச்சரவுகளு கப்பாற்பட்டதாகவும் இருக்கிறது என்று லீவிஸ் எடிங்கர் (Lewis Edinger) என்பவர் கருத்துத் தெரிவித்திருக்கிறார். தொனால்டு ஃபவுட்டு (Donald Fouts) என்பவர், கனேடிய உச்ச நீதிமன்றம் சிவில் உரிமைகளுக்கு எதிரான போக்கைப் பின்பற்றுவதாகக் குறைகூறியுள்ளார். ஆனால், குடிமக்களின் உரிமைகள் பாதுகாப்புக்கு இதர வழிகளும் இருக்கின்றன

என்பதை மறந்து விடுவதற்கில்லை. இங்கிலாந்தில் உரிமைகள், சுதந்திரங்களின் பாதுகாப்புக்கு அரசியலமைப்பு உத்திரவாதமில்லை. எனினும் அவை, பாராளுமன்றத்தால் இயற்றப்பட்டுள்ள சட்டங்களுக்குக் கட்டுப்பட்ட நிலையில் பொதுச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்ட நீதித் தீர்ப்புகளால் நிலை நாட்டப்பட்டுக் காப்பாற்றப்படுகின்றன.[1] 1936ஆம் ஆண்டு அரசியலமைப்பில் உரிமைகள் பற்றிய நீண்டதோர் பட்டியலிருப்பினும், குடிமக்கள் சுதந்திரத்தையும் உரிமைகளையும் காப்பாற்றும் வகையில் சோவியத் நீதி மன்றங்களின் பணி அமையவில்லை. அங்கு, குடியாட்சி அரசு முறையுடைய நாடுகளில் நீதிமன்றங்களுக்கு எத்தகைய பணிகள் இருக்கின்றனவோ, அதற்கு மாறான பணிகளையே நீதிமன்றங்கள் பெற்றிருக்கின்றன. இதற்கு அங்குக் குடியாட்சி முறை நாடுகளிலுள்ள உரிமைகள் தத்துவம் ஏற்றுக் கொள்ளப்படாததே காரணமாகுமெனலாம்[2].

இருப்பினும், 1937-லிருந்து அமெரிக்காவில் சிவில் உரிமைகள் பற்றிய உச்ச நீதிமன்றத்தின் முடிவுகள் ஏராளம். அதாவது உடைமை பற்றிய உரிமைகள் நீங்கலாக அமெரிக்க உச்ச நீதிமன்றத்தால் கவனிக்கப்பட்ட வழக்குகளில் 45 விழுக்காட்டு வழக்குகள் சிவில் உரிமைகள் சம்பந்தப்பட்டவைகளாகும் என்று ஆப்ரஹாம் என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[3] சிவில் உரிமைகள் பற்றிய வழக்குகளில் நீதிமன்றம் பரந்த மனப்பான்மையுடன் நடத்து கொண்டதென்றாலும், இரு முக்கியமானப் பிரச்சினைகளைக் கவனிக்க வேண்டியதாக இருந்தது. அவைகளில் முதலாவது, சட்டம் ஒழுங்கு பற்றியதாகும். இரண்டாவது, கம்யூனிசவாதிகளால் உள்நாட்டுப் பாதுகாப்புக்கு ஆபத்து என்பதாகக் கருதப்பட்டதைப் பற்றியதாகும்.

சிவில் சுதந்திரங்களில் அமெரிக்கத் தலைமை நீதிமன்றத்தை அரசியல் நடப்பில் அதிகமாக ஈடுபட வைத்தது இனச் சுதந்திரமெனலாம், குறிப்பாக நீக்ரோக்களுக்குக் கல்வி, அரசியல் போன்ற துறைகளில் தரப்படவேண்டிய உரிமைகள் முக்கியத்துவம் பெற்றன. எந்த அளவிற்குத் தலைமை நீதிமன்றம் இந்தப் பிரச்சினை

[1] For a brief-discussion on civil liberties in Britain See. A. H. Brich The British System of Government (London, 1967) Ch. 15.

[2] See Peter Reddaway. The Soviet Treatment of Dissenters and the Growth of a Civil Rights Movement in Rights and Wrongs, Some Essays, in Human Rights, ed. Christopher Hill (London, 1969)

[3] H. J. Abraham. Freedom and the Government : Civil Rigthts and Liberties in the United States (New York, 1967)

களில் ஆர்வமும், ஈடுபாடும் உடையதாக இருந்ததோ அந்த அளவிற்கு நிர்வாகமும் (Presidancy) சட்டமன்றமும் (Congress) ஆதரவளித்து வந்தன. என்வே இராபர்ட்டு மக்கிளாஸ்கி (Robert Mc Closky) என்பவர் 1953 முதல் 63 வரையிலான பத்தாண்டுக் காலத்தில் ஜனதிபதி அல்லது காங்கிரசுக்குப் பதிலாக உச்ச நீதி மன்றமே முக்கியமான புதுப்புதுக் கொள்கையை உருவாக்கி உதவியது என்று குறிப்பிடுகிருர்[1].

இந்த நான்கு துறைகளில், நீதிமன்றங்கள் ஆற்றக்கூடிய பணிகளோடு வேறு சில பணிகளும் இருக்கின்றன. அவைகளில் நிர்வாகம் அவசர கால அதிகாரங்களை மேற்கொள்வது, தேர்தல் தொகுதிகளை நிர்ணயிப்பது, தேர்தல் முடிவு குறித்தெழும் சச்சரவு களைத் தீர்த்துவைப்பது சார்ந்த பணிகளை முக்கியமாகக் குறிப்பிடலாம். ஆனல், இவைகளெல்லாம் முன்னல் நாம் விவாதித்துள்ள நான்கு வகைப் பணிகளுள் அடங்கும் என்பதை எளிதில் அறியலாம். எனினும் இவ்விடத்தில் இவை தொடர்பாக நாம் அறியவேண்டியது, நீதிமன்றங்கள் கொள்கைகளை உருவாக்குபவைகளாகவும் செயலாற்றுகின்றன என்பதாகும். இத் துறையில் நீதிமன்றங்களின் பங்கு முக்கியமானதாகும் என்பதோடு வழக்கமான கொள்கைகளை உருவாக்கும் நிலையங் களாக நாம் கருதுபவற்றின் பணிகளினின்றும் நீதிமன்றங்களின் பணி செய்முறை மாறுபட்டதாகுமென்பதைக் கவனிக்கவேண்டும். ஆனல் அரசியல் முறை எவ்வாறு இயங்குகிறதென்பதைப் புரிந்து கொள்ளுவதற்கு இது இன்றியமையாததாகும். இதை அறிந்து கொள்ளும்முறையில், நீதித்துறைமேலுள்ள கட்டுப்பாடுகளைப் பற்றிய சில கருத்துகள் அடுத்துக் கூறப்படுகின்றன.

(ஈ) **நீதித்துறைமேலுள்ள கட்டுப்பாடுகள் (Controls on the Judiciary)** நீதி மன்றங்கள் பெற்றுள்ள சுதந்திரத்தின் அளவு, தன்மை பற்றிய குற்றச்சாட்டுகள் பலவும் கொள்கையை உருவாக்குவதில் நீதி மன்றங்களின் பணியைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் ஏற்பட்டதெனக் குறிப்பிடலாம். ஆயினும், சில சமயங்களில், நீதித்துறையின் குடியாட்சித் தன்மையற்ற செயல் களை ஆதரிக்கும் மேல் மட்டத்திலுள்ள அரசியல்வாதிகளுக்கு எதிராக அவை இருக்கின்றன என்பது உண்மையாகும். நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படுதல், அவர்களுடைய சமூகப் பொருளாதாரப் பின்னணி, அனுமதேயத் தன்மையுடைய அவர்களது முடிவு, பதவியிலிருந்து எளிதில் விலக்கப்பட முடியாதிருத்தல் ஆகிய பல

[1] R. G.Mc Closkey, 'Reflections on the Warren Court', Virginia Law Review, LI (NOV. 1965) 1250-1.

அம்சங்களும் குடியாட்சித் தன்மையுடைய அரசாங்க அமைப்பில் அவர்கள் பொருந்தாதவர்களாக எண்ணப்படுமாறு செய்கின்றன. இருப்பினும், நீதித்துறை சமூகத்தின் விருப்பு வெறுப்புகளுக்குத் தகுந்தாற்போல அவசியமானபோதெல்லாம் தவறவில்லையென்பதை மறுத்துரைக்க முடியாது. இத்தகைய போக்கிற்கு நீதித்துறை தன்னைத் தானே தயாராக்கிக் கொள்வது ஒருபுறமிருக்க, மறுபுறம் சமூகமும், அரசியல் நடப்பும் அப் போக்கில் நீதித்துறை செயலாற்றுமாறு செய்கின்றன என்பதையும் குறிப்பிடவேண்டியதாயிற்று.

இவைகளுக்கு அப்பால் நிலையங்களடிப்படையில் எழும் கட்டுப்பாடுகள் பல இருக்கின்றன. சட்ட மன்றங்கள் நீதித்துறையின் எதிர்ப்பைப் புதுச்சட்டங்களை இயற்றுவதன் வாயிலாகத் தவிர்க்கலாம். நீதிபதிகளைப் பதவியினின்றும் விலக்கும் அதிகாரத்தில் பங்கு பெறலாம். அரசியல் அமைப்புச் சட்டங்கள் திருத்தியமைக்கப்படலாம் அல்லது மீண்டும் வரையப்படலாம். அரசியல் முறைக்கும், நடப்புக்கும் தகுந்தாற் போல நடக்கும் வண்ணம் நீதிப்பணிகள் சிறப்பானவைகளாகவும், குறிப்பானவைகளாகவும் பிரிக்கப்பட்டு, அவை அரசியற் சட்ட அல்லது ஆட்சித்துறை நீதிமன்றங்கள் போன்றவைகளிடம் ஒப்படைக்கப்படலாம். இவ்வாறு பல வகைகளிலும் நீதித்துறைமேல் விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் முக்கியமானவைகளாகும். சான்றாக வழக்கறிஞர் கழகம் (Procuracy) நீதித்துறைமேல் செலுத்தும் அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் குறிப்பிடலாம். இவ்வழக்கறிஞர் கழகம் கட்சியிலுள்ள முக்கியத் தலைவர்களோடு பிணைக்கப்பட்டிருக்கிறதென்பதோடு, சோவியத் யூனியனிலுள்ள இரகசியக் காவற்படைக்கு (Soviet Police namely K.G.B.) அடுத்தபடியாக முக்கியத்துவமுடையதாக இருக்கிறது. இவ்விடத்தில் இக்காவற்படைதான் சட்ட, நீதிமுறை தொடர்புடைய நடைமுறைகளைக் கட்டுப்படுத்துகிறதென்பதை அறிதல் அவசியமாகும். 1958ஆம் ஆண்டு ஃபிரெஞ்சு அரசியலமைப்பு, ஒழுங்கு, பதவி உயர்வு, தேர்ந்தெடுத்தல் ஆகிய உயர்கழகத்தின் (Conseil Superieur de la Magistrature அதாவது High Council) அதிகாரத்தைக் குறைத்து, சட்ட நீதித்தொழில் சம்பந்தப்பட்ட இவ் விஷயங்களில் குடியரசுத் தலைவருக்கு அதிகமான அதிகாரங்களை வழங்கியது. அனேகமாக எல்லா அரசியல்முறைகளிலும், நீதித்துறைக்குப் பொறுப்பேற்கும் அமைச்சர்கள், செலவினங்கள், புதுச்சட்டங்களைக் கொணர்தல், தண்டனைகளை ஒழுங்குபடுத்துதல், நீதித்துறையில் மேல் மட்டத்திலுள்ளப் பதவிகளுக்கு நியமனஞ் செய்தல் போன்ற நிர்வாக

விஷயங்களில் போதுமான அளவிற்குக் கட்டுப்படுத்தும் அதிகார முடையவர்களாக இருக்கின்றார்கள்.

நிர்வாகத்திடமுள்ள முக்கியமான ஆயுதம் அதன் ஒத்துழைப்பு. அதாவது நிர்வாகத்தின் ஒத்துழைப்பில்லாமல் நீதித்தீர்ப்புகள் நடப்பிற்குக் கொண்டுவரப்பட முடியாது என்பதாகும். இது எந்த அளவிற்கு உண்மை யென்பது அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றிலிருந்து புலனாகும். எடுத்துக்காட்டாக, 1954ஆம் ஆண்டு அமெரிக்க உச்ச நீதி மன்றம் பொதுக் கல்விக் கூடங்களில் இனப்பாகுபாடு அகற்றப்பட வேண்டுமென்று பிரௌன் வழக்கில் தீர்ப்பளித்தது. தென்பகுதி இராச்சியங்கள் அத்தீர்ப்பை எதிர்த்ததால், கூட்டாட்சி அரசாங்கம்தான் அத் தீர்ப்பை அமலுக்குக் கொண்டு வர நடவடிக்கைகள் எடுக்க முடியும். ஆனால் குடியரசுத் தலைவர் ஐசனோவர் தயங்கினார். இதைப் போன்ற நிகழ்ச்சிகள் அமெரிக்காவில் மட்டுமல்லாமல், இதர நாடுகளிலும் ஏற்பட்டிருக்கின்றன வெனலாம்.

நீதிமன்றங்களுக்கு விதிக்கப்படும் இக் கட்டுப்பாடுகள் கொள்கை ஆதிக்கத்தில் அவைகளுக்குள்ள அதிகாரத்தை அகற்றிவிடுவதாகவோ, குறைத்து விடுவதாகவோ சொல்வதற்கில்லை. இவ்வதிகாரம், குறிப்பிட்ட பிரச்சினைகளில் நீதிமன்றங்களை ஆதரிக்கின்ற அல்லது எதிர்க்கின்ற அரசியல் குழுக்களின் சக்திக்குத் தகுந்தாற்போல அமையும். நீதிமன்றங்கள் அரசியல் முறையின்—நடப்பின் ஒரு பகுதியாகும். ஆகையால் எந்த அளவிற்கு அம் முறையிலுள்ள நிலையங்களுக்கிடையே சச்சரவு அல்லது பூசல் காணப்படுகிறதோ, அந்த அளவிற்குக் கூட்டுழைப்புத் தேவை என்பதை வற்புறுத்துவது அவசியமாகும். இந் நிலையங்களனைத்தும் ஒன்றையொன்று சார்ந்து, இணைந்து உரிமையுடன் செயலாற்றுபவைகளாகும். இத்தகைய கூட்டுறவு, அரசாங்கத்தின் இந்த நிலையங்களிடையே ஏற்படாமற் போகுமானால் ஒவ்வொன்றும் மற்றவற்றிற்கு, சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் கட்டுப்பட்டு நடக்க வேண்டிவரும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

# 3. சட்டமும் அதன் வகைகளும்

நீதிமன்றங்களின் பணிகளும் கடமைகளும் சட்ட அடிப்படையில் சட்டத்தை ஒட்டியே அமைந்திருக்கின்றன வெனலாம். எனவே, நீதிமன்றங்களைப் பற்றி அறிய முற்படும் போது சட்டத்தைப் பற்றிய சில கருத்துகளைத் தெரிந்து கொள்ளுவது பொருத்தமாகும்.

(அ) சட்டமும் வளர்ச்சியும் (Law and Development) :

குடிமக்களுக்குச் செய்யும் நன்மைகள் அடிப்படையில் அரசின் தன்மை மதிப்பீடு செய்யப்படவேண்டுமானால், தேவையான மாற்றங்களை ஏற்படுத்துவதற்கான கருவியாக அது கருதப்பட வேண்டும். அரசியல் வளர்ச்சி அரசின் நோக்கங்கள் அடையப்படுவதைப் பொறுத்திருக்கிறது. அந் நோக்கங்கள் நிறைவேற நினைக்கின்ற அல்லது விரும்புகின்றவாறு முன்னேற்றம் ஏற்படுவதைப் பொறுத்திருக்கிறது. மாற்றங்கள், மெதுவாக அல்லது விரைவாக ஏற்பட்டாலும், எப்போதும் ஏதாவதொரு வகையில் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. மாற்றம் வேண்டாமெனச் சொல்வதும் ஒருவகையில் பார்க்கும் போது மாற்றம் வேண்டுமென்பதாகத் தோன்றுகிறது. சீர்திருத்தம், திட்டமிடுதல் பற்றிய கருத்துகளெல்லாம் வளமான வாழ்க்கைக்குத் தேவையான வாய்ப்புகளையும் சூழ்நிலைகளையும் தோற்றுவிப்பதற்கு அறிந்து செய்யப்படும் முயற்சிகளின் அடிப்படையில் எழுந்தவை யெனலாம். திட்டமிடுதலின் வாயிலாக முன்னேற்றமடைய விழையும் கருத்து மேலோங்கியிருக்கும் காலத்தில் நாம் வாழுகின்றோம். இத் துறையில் அரசின் பணி எத்தகையது என்பது இப்போது நிலை நாட்டப்பட்டிருப்பதாகும்.

பெருமளவிலான முன்னேற்றத்திற்கும் வளர்சிக்கும் மக்களுடைய மனப்பூர்வமான ஒத்துழைப்புத் தேவை. அத்தகைய ஒத்துழைப்பு இல்லாவிட்டாலும் குறைந்த பட்சம் அவர்களது

உடன்பாடாவது தேவையாகும். உலகாயதச் சூழ்நிலையில், மிக அதிகமான மக்களுக்கு வாழ்க்கை வசதிகளும் வாய்ப்புகளு மேற்படு மாதலால், முன்னேற்றத்திற்கான தேவை எளிதில் ஏற்றுக் கொள்ளப்படும். ஆனால், பொருளாதார மாற்றம் எளிதாக ஏற்றுக்கொள்ளப்பபடாத சமூக மாற்றத்தையும் ஏற்படுத்துகிறது. வரலாற்று அடிப்படையில் பார்க்கின்றபோது, அரசு, சமூகத் திடத்தன்மையை நிலைநாட்டப் பாடுபட்டு வருகிறதென்பது தெரியவரும். இதற்கேற்படும் எதிர்ப்பைச் சமாளிக்க அது பலாத்காரத்தைப் பயன்படுத்துகிறது. எனவே பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த பகுத்தறிவு வாதிகளான சிந்தனையாளர்கள் அறிவு வளர்ச்சியையும், அவ்வறிவு வளர்ச்சி பரந்து பலருக்கும் கிட்டுவதையும் விரும்பினார்கள். அல்லாமலும், நல்வாழ்க்கைக்கான சாதனமாகச் சட்டம் இயற்றப் படவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஆனால் இருபதாம் நூற்றாண்டிலோவெனில் முன்னேற்றத்தை மையமாகக் கொண்ட நிர்வாகம் இன்றியமையாததாகக் கருதப்படுகிறது.

மேற்கூறப்பட்ட சட்டம், நிர்வாகம் ஆகியவைகளின் துணையைக் கொண்டுதான் அரசு தன் நோக்கங்களை அடைய முயற்சிசெய்கிறது. அமைதி வழியில் மாறுதல் ஏற்படுவதற்குச் சட்டம் முக்கியமானதொரு சாதனமாகும். அது சமூகத்தில் நீதி ஏற்படுவதற்கும் ஆதாரமாக இருப்பதாகும். எனவே தான் சில சிந்தனையாளர்கள் சட்டத்தை அரசின் சாரம்சமாகக் கருதுகின்றனர். மாக் ஐவர் என்பார், 'அரசு சட்டத்தின் குழந்தையாகவும் பெற்றோராகவும் இருக்கிறது' என்கிறார். சட்டம் அரசை ஆளுகிறது (அதாவது அரசியலமைப்புச் சட்டம்); அரசு சட்டத்தின் துணைகொண்டு ஆளுகிறது. உண்மையில், தற்காலத் தொழில் சமுதாயம், சட்டம், நீதிமன்றங்களின் துணையில்லாமல் இயங்க முடியாதென உறுதியாகக் கூறலாம். எனவே தான் மாக் ஐவர் சட்டமில்லாமல் அமைதியில்லை. அமைதியில்லாமற்போனால் மனிதர்கள் எங்கே போகிறார்கள் என்பதோ, என்ன செய்கிறார்களென்பதோ அவர்களுக்குத் தெரியாது, என்றுரைக்கிறார்.

(ஆ) சட்டத்தின் பொருள்: சட்டம் என்னும் சொல் பல பொருள்களில் பயன்படுத்தப் படுகிறது. பருப்பொருள் உலகில் அது காரணத்தையும் விளைவையும் முறைப்படி விளக்குவதாக இருக்கிறது. எடுத்துக் காட்டாக அலைகள், புவியீர்ப்புப் பற்றிய சட்டங்களைக் குறிப்பிடலாம். அச் சட்டங்கள், குறிப்பிட்ட சூழ் நிலைகளில் ஏற்படும் சில போக்குகளையும்

முடிவுகளையும் காட்டுகின்றன. அத்தகைய பருப்பொருளிய லான சட்டங்களைப் பற்றியல்லாமல், மனிதர்கள் நடத்தை சம்பந்தப்பட்ட சட்டங்கள் அல்லது விதிகளைப் பற்றியவைகளைக் குறித்தே நாம் இங்கு அறிய முற்படுகிறோம்.

சட்டமென்பதற்கு நேரிடையான பொருள் 'திணிக்கப்படுவது' என்பதாகும். ஆனால் பரந்த அடிப்படையில், அது நடவடிக்கை அல்லது சொல் பற்றிய விதி என்று பொருள்படும். எனினும் சட்டத்தின் பொருள் என்ன என்பதைத் திட்டவட்டமாகக் கூற முடியாது. எவ்வாறு காலத்தைப்பற்றி அறிந்தவர்கள் காலம் என்பதற்குப் பொருள் சொல்ல முடியாதோ, அங்ஙனமே சட்டத்திற்கும், சட்ட வல்லுநர்களும் சட்ட மாணவர்களும் பொருள் கூற முடியாமல் தவிக்கின்றார்கள். பொதுவாக, சட்டம் பற்றிய நூல்கள் மற்ற எந்தவொரு பொருள் பற்றியும் இருக்கும் நூல்களையும்விட, பலமடங்கு அதிகமானவை யென்பதில் யாருக் கும் ஐயமில்லை. இருப்பினும், சட்டம் என்றால் என்ன? அல்லது சட்டத்தின் தன்மை என்ன? என்ற வினாக்களுக்கு விடையிறுப்பது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை என்பது அறிஞர்களின் கருத்து. இவைகளைப் பற்றி பல நூல்கள் எழுதப்பட்டிருப்பினும் அவை களுள் ஹெச். எல். எ. ஹார்ட்[1] என்பவரால் எழுதப்பட்டுள்ள நூல் சட்டம் பற்றிய பல நுணுக்கமான கருத்துகளை ஆராய் கிறது. எனவே விளக்கம் வேண்டுபவர் அந் நூலைப் படித்து மேற் கொண்டு செய்திகளைத் தெரிந்து கொள்ளலாம். இங்கு நாம் சட்டம் பற்றி வழக்கமாகத் தரப்பட்டுள்ள விளக்கத்தைக் காணலாம்.

**விளக்கம் :** அரசால் கொண்டுசெலுத்தப்படும் சட்டத்திற்குப் பல விளக்கங்கள் தரப்படுகின்றன. அவைகளுள் ஒரு சிலவற்றை மட்டும் இங்குக் காணலாம். ஹாலந்து என்பார் 'இறைமை அதிகாரமுடைய அரசியல் மேலாண்மையாளர் அல்லது குழுவினால் கொண்டுசெலுத்தப்படும் மானிடர்களின் புற நடத்தையைப் பற்றிய ஒரு பொதுவிதியே சட்டம்' என்று கூறுகிறார்.[2] வில்லபி என்பவர் 'நடத்தை பற்றிய இதர எல்லா விதிகளினின்றும் தனித்து நின்று சிறப்புப் பெற்றுச் சமூகத்தில் வாழும் மக்களின் கிட்டதட்ட ஒருமித்த ஆமோதிப்பைப் பெற்று, அரசின் அதிகாரத் தால் செலுத்தப்படும் தகுதியுடையதே சட்டம்' என உரைக் கிறார். 'அரசாங்கத்தின் மேலாண்மை அதிகாரத்தால் ஆதரிக்கப் படுபவையும் எல்லோரும் பின்பற்றக்கூடிய தகுதியுடையதாகக்

[1] H.L.A. Hart, The Concept of Law.
[2] Elements of Jurisprudence, tenth ed. Oxford 1906, P.40.

கருதப்படுபவையுமான பொதுவிதிகளே, சட்டங்கள்' என்று உட்ரோவில்சன் கருதுகிறார்.

மேற்சொல்லப்பட்டவற்றிலிருந்து சட்டம் அரசினால் கொண்டு செலுத்தப்படுகிற தென்பது புலனாகும். தற்கால அரசில் சட்ட மன்றமோ, சட்டம் இயற்றுவதற்கு அதிகாரம் பெற்ற நிலையங்களோ, எல்லாச் சட்டங்களையும் இயற்றுவதில்லை. அரசு தோன்றுவதற்கு முன்பே சட்டங்கள், வழக்கங்கள் உருவில் இருந்தன. அவ் வழக்கங்களில் பல இன்னும் சட்டங்களின் பகுதி களாக அல்லது தனியாக இருந்து வருகின்றன. இதனால் எல்லாச் சட்டங்களும் அரசால் ஆக்கப்படவில்லை யென்பது விளங்கும். சில பழக்க வழக்கங்கள் அரசால் ஏற்றுக் கொள்ளப்படும்போது சட்டங்களின் தன்மைகளைப் பெறுகின்றன. நீதித் துறைகளாலும் அவ்வாறே கருதப்படுகின்றன. அரசாலும், நீதிமன்றங்களாலும் ஏற்றுக் கொள்ளப்படுவதுதான் சட்டங்களின் தன்மையாகும். எனவேதான் கெட்டல் என்பவர் அதனை 'தன் சொந்த எல்லைக்குள் சட்ட பூர்வமாக இயங்கும் அதிகாரம் பெற்ற அரசாங்க அங்க மொன்றின் கட்டளை'[3] என்று குறிப்பிட்டுள்ளார். வழக்கங்கள் அரசால் ஏற்றுக் கொள்ளப்படாமலோ, சட்டங்களின் பகுதி களாக ஆக்கப்படாமலோ இருப்பின் அவைகளை அரசு கொண்டு செலுத்தாது. நீதி மன்றங்களும் அவைகளை ஏற்பதற் கில்லை.

சட்டம் பொதுவாகப் பொது நிலைமைகளைப் பற்றியதாக, கொள்கைகளுக்கு உருவம் தருவதாக, பரந்த நோக்கம் உடைய தாக, நாட்டு மக்கள் அனைவரையும் கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும். ஆனால் அது தனி நபர் வாழ்க்கையின் எல்லா அம்சங் களையும் ஒழுங்குபடுத்துவதாக இருக்கக் கூடாது. அரசின் நோக்கம் பொதுநலன், ஆதலால் சமூக வாழ்க்கையின் பொது அம்சங்களையும், நிலைமைகளையும் மட்டுமே சீர்படுத்துவதாக இருக்க வேண்டும்.

சுருங்கச் சொல்ல வேண்டுமானால், சட்டம் அரசின் கரத்தைப் பலப்படுத்துவதாகும்; அரசால் கொண்டு செலுத்தப்படுவதாகும்; மனிதர்களின் புற வாழ்க்கையோடு மட்டும் தொடர்புடைய தாகும்; கொண்டு செலுத்தப்படும் தன்மையில் எல்லோருக்கும் பொதுவானதாகும்; சட்டம் மீறப்பட்டால், அது தண்டனையில் போய் முடியும்; சட்டத்தின் நோக்கம், தனி நபரினுடைய, சமூகத்தினுடைய பொது நன்மையாகும்.

[3] Gettel, 'Introduction to political Science', P.12.

**(இ) சட்டத்தின் வகைகள்:**—சட்டம் பல வழிகளில் வகைப் படுத்தப்படுகிறது. உறவுகளை (தொடர்புகளை)ச் சரிப்படுத்து வதற்குச் சட்டம் முற்படும் அடிப்படையில் அதனை ஹாலந்து என்பவர் உள் நாட்டுச் சட்டம் (Municipal Law), பன்னாட்டுச் சட்டம் (International Law) என்று இரு வகையாகப் பிரித்திருக் கிறார். உள் நாட்டுச் சட்டம் தனிப்பட்டவர்கள் ஒருவருக் கொருவர் கொள்ளும் தொடர்புகளையும், தனிப்பட்டவர்கள் அரசோடு கொள்ளும் தொடர்புகளையும் ஒழுங்குபடுத்துகிறது. ஆனால், பன்னாட்டுச் சட்டம் அரசுகள் பலவும் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்புகளைப் பற்றியதாக இருக்கிறது. பன்னாட்டுச் சட்டம், உள் நாட்டுச் சட்டத்தைப் போல இறைமை அதிகாரமுடைய சட்டமன்றத்தால் ஆக்கப்பட்டதன்று. எனவே, அதைக் கொண்டு செலுத்தும் திறம்படைத்த தனியொரு அர செதுவும் கிடையாது. அது பின்பற்றப்படாவிட்டால் தண்டனை யெதுவும் கிடையாது.

உள் நாட்டுச் சட்டம், பொதுச் சட்டமென்றும் தனிச் சட்ட மென்றும் மேலும் இருவகையாகப் பிரிக்கப்படுகிறது. பொதுச் சட்டம் அரசுக்கும் தனிப்பட்டவர்களுக்கு மிடையே உள்ள தொடர்புகளை ஒழுங்குபடுத்துகிறது. அது அரசின் அமைப் பையும் பணிகளையும் விவரிப்பதோடு, குடிமக்களுக்கும் அரசுக்கும் இடையே காணப்படும் தொடர்புகளையும் வரையறை செய்கிறது. அது குடிமக்களின் உரிமைகளையும், எந்த அளவிற்கு அரசு அவைகளைத் தடை செய்யலாம், வழங்கலாம் என்பதையும் எடுத் துரைப்பதாக இருக்கிறது. பொதுச் சட்டத்தின் அடிப்படையில் சட்டத்தால் அனுமதிக்கப்படும் உரிமைகளைப் பொறுத்த வரை யிலும் உள்ள கட்சிக்காரர்களில் குடிமக்களோடு அரசும் ஒன்றாக இருக்கிறது, தனிச் சட்டம், இயற்கை செயற்கை பாற்படும் தனி நபர்களின் தொடர்புகளை ஒழுங்குபடுத்துகிறது. அது மற்ற வர்களோடு தனிமனிதனின் நடத்தையை ஏற்படுத்துகிறது. கடமைகளையும், உரிமைகளையும் ஏற்படுத்தித் தனி மனிதன் உரிமை களை அனுபவிப்பதை மற்றவர்கள் பறித்துவிடாதபடி பார்த்துக் கொள்கிறது; உடைமை, ஒப்பந்தம், கூட்டமைப்பு, குற்றம் போன்ற இதர சட்டங்களையும் உள்ளடக்கியதாக இருக்கிறது. தனிச் சட்ட அமலைப் பொறுத்த வரையிலும், அரசு தனிப்பட் டோருக்கு மேல் நின்று, நடு நிலைமையைக் கடைபிடிக்கிறது.

பொதுச் சட்டத்தை ஹாலந்து என்பவர், (1) அரசிய லமைப்புச் சட்டம் (2) ஆட்சித் துறைச்சட்டம் (3) குற்றவியல் சட்டம் (4) குற்றவியல் நடைமுறை, என்று பல வகைகளாகப்

பிரித்திருக்கிறார். ஆனால், சட்டம் பொதுவாகப் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகிறது.

(1) அரசியலமைப்புச் சட்டம் (Constitutional Law): அரசியலமைப்புச்சட்டம், அரசின் அமைப்பை விவரித்து, அரசாங்கத்தின் அதிகாரத்தின் தன்மையையும் எல்லையையும், அரசாங்கத்திற்கும் குடிமக்களுக்கு முள்ள தொடர்ச்சிகளையும், இதர பல இன்றியமையாத அம்சங்களையும் கோடியிட்டு வரையறை செய்கிறது. அது எழுதப்பட்டோ, எழுதப்படாமலோ இருக்கலாம். அரசியல் நிர்ணய சபை போன்ற சிறப்பாக நிறுவப்படும் சட்ட மன்றத்தால், குறிப்பிட்ட காலமொன்றில், ஒரே சமயத்தில் தரப்படலாம் அல்லது காலப் போக்கில் இயற்கையாக வழக்காறுகள் உருவத்தில் ஏற்படலாம். இங்கிலாந்தின் அரசியலமைப்பு இவ்வாறு எழுந்ததால், அது வழக்காறுகளையும், பழக்கங்களையும், நீதித் தீர்ப்புகளையும் கொண்டதாக, பெருமளவில் எழுதப்படாததாக இருக்கிறது. இருப்பினும் கடந்த ஐம்பது ஆண்டுக் காலத்தில் அதன் மிக முக்கியமான பகுதிகள் எழுதப்பட்டு வருகின்றன.

(2) பட்டயச் சட்டம் (Statute Law): தற்காலத்திலுள்ள சட்டங்களின் பெரும் பகுதி பட்டயச் சட்டமாகும். அதாவது சட்ட மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டமாகும்.

(3) அவசரச் சட்டம் (Ordinance): அவசரச் சட்டங்கள் அரசாங்கத்தின் ஓர் அங்கமாகிய நிர்வாகத்தினால் பிறப்பிக்கப்படுபவையாகும். அவைகள் பெரும்பாலும் நிர்வாகச் சௌகரியத்தை முன்னிட்டுப் பிறப்பிக்கப் படுபவையாகும். அவை வழக்கமாகத் தற்காலிகமானவைகளாகவே இருக்கின்றன.

(4) நீதி மன்றங்களால் தரப்படும் சட்டம் (Case Law): நீதி மன்றங்கள் தங்களிடம் வரும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லும் போது அறியாமலோ அறிந்தோ இங்கிலாந்து அமெரிக்கா போன்ற நாடுகளில் சட்டங்களை இயற்றுகின்றன. அதாவது, நடைமுறையில் இருக்கும் சட்டங்களை விளக்குவதன் வாயிலாகவோ, சில அம்சங்களில் சட்டங்களில் ஆதாரம் இல்லாமலிருக்கும் போது சமூகத்திலுள்ள வழக்கங்களின் அடிப்படையில் தீர்ப்பு வழங்கும் போதோ புதுச் சட்டங்களைத் தோற்றுவிக்கின்றன.

(5) பன்னாட்டுச் சட்டம் (International Law): பன்னாட்டுச் சட்டம் உலகில் உள்ள பல நாடுகளும் ஒன்றோடொன்று தங்களு

டைய உறவை ஏற்படுத்திக் கொள்ளவும், தங்கள் அலுவல்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளவும் துணையாக இருப்பதாகும்.

**(6) ஆட்சித்துறைச் சட்டம் (Administrative Law) :** ஆட்சித் துறைச் சட்டம் அரசாங்கத்தில் ஊழியம் புரிபவர்களுக்கு எதிராகச் சாட்டப்படும் குற்றங்களை விசாரிக்கவும், குற்றங்கள் நிரூபிக்கப்படுமானால் தண்டனை வழங்கவும், அவ்வாறில்லாமல் போனால் அவர்களுக்குப் பாதுகாப்பு வழங்கவும் துணையாக உள்ளதாகும். இத்தகைய சட்டம் ஃபிரான்சு நாட்டில் தான் ஆரம்பத்தில் இருந்து வந்தது. ஆனால் இதர நாடுகளிலும் இப்போது அது வெகுவாக ஏற்பட்டு வருகிறது. இந்த ஆட்சித் துறைச் சட்டம் பற்றிய விளக்கத்தை ஐந்தாம் அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்.

மேற்கூறப்பட்ட சட்ட வகைகளோடு இங்கிலாந்தில் தோன்றி வளர்ந்து அங்குப் பின்பற்றப்பட்டு வரும் பொதுச் சட்டம் (Common Law) அறச்சட்டம் (Equity Law) ஆகிய இரண்டு வகைச் சட்டங்களைப் பற்றியும் இவ்விடத்தில் சுருக்கமாக அறிந்து கொள்வது அவசியமாகும். பிரித்தானிய முறையில் பொதுச் சட்டம் மிக முக்கியமான அடிப்படை அம்சமாக இன்னும் விளங்குகிறது. பொதுச் சட்டம் ஆரம்ப காலத்தில் இருந்தது போல இன்றும் நீதிபதிகளால் ஆக்கப்பட்ட சட்டமாகவே இருந்து வருகிறது. பொதுச் சட்டத்தின் விதிகள் பாராளுமன்றத்தால் எப்போதுமே சட்டமாக்கப்பட்டதில்லை. பெரும்பாலும் வழக்காறுகளை அடிப்படையாகக் கொண்டிருப்பதால் அது வழக்கச் சட்டம் (Customary Law) என்று அழைக்கப்படுகிறது. பொதுச் சட்டம் எழுதப்படாததென்று கருதப்படுகிறதெனில் அதற்குக் காரணம், அது பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களிலிருந்து தோன்றாததேயாகும், எனினும், அதன் பல அம்சங்களும், நீதிபதிகளின் தீர்ப்புகளில் இடம் பெற்றிருக்கின்றன வென்பதை மறந்து விடுவதற்கில்லை. எனவே நீதிபதிகளால் ஆக்கப்பட்ட சட்டமெனப்படுகிறது. பொதுச் சட்டம், ஒப்பந்தங்கள், அத்து மீறுதல், சிறுசிறு பிழைகள் சம்பந்தப்பட்டதாக இருக்கிறது.

அறச்சட்டம் முழுமையான சட்டமன்று. அது பல கொள்கைகளின் சேர்க்கையாகும். அக் கொள்கைகள் ஒன்றோடொன்று தொடர்புடையவையுமல்ல. ஆனால் அதன் கொள்கைகளுள் ஒவ்வொன்றும் பொதுச் சட்டத்தின் கொள்கை ஒவ்வொன்றையும் விட மேம்பட்டதாகும். பொதுச் சட்டக் கொள்கைகளில் ஆதாரமில்லாதபோதோ, அவைகளின் அடிப்

படையிலும், இதரச் சட்டங்கள் அடிப்படையிலும் நீதி கிடைக்காத போதோ அறச் சட்டம் உதவியாக இருக்கிறது. இச் சட்டம், தங்களிடம் விண்ணப்பித்துக் கொண்டவர்களுக்கு அரசர்கள் நேரிலோ அவர்களுடைய பிரதிநிதிகள் மூலமாகவோ தீர்ப்புகள் வழங்கி நீதியை நிலை நாட்டிய அடிப்படையில் தொன்று தொட்டு இருந்து வருவதாகும். இதற்கு ஆதாரம், அந்தக் காலத்தில் அரசர் நீதியின் உறைவிடமாகக் கருதப்பட்டதேயாகும் எனச் சொல்லப்படுகிறது.

இதுவரையிலும், சட்டத்தின் பலவகைகளைப் பற்றிக் கண்டோம். ஆனால் சட்டம் சார்ந்த முறைகள் (legal systems) என்று வரும் போது உரோமானியச் சட்டம், சிவில் சட்டம், பொதுச் சட்டம், சோவியத் சட்டம் சார்ந்த முறை என்று பல முக்கிய முறைகள் இருக்கின்றன.

இதர அடிப்படைகளில் சட்டமுறை, சட்ட ஆட்சி, ஆட்சித் துறைச் சட்டம் என்று இரு முறைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது முன்னதாகச் சொல்லப்பட்ட முறை இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்க நாடுகள், கானடா, இந்தியா போன்ற நாடுகளிலும், இரண்டாவதாகச் சொல்லப்பட்ட முறை ஃபிரான்சு நாட்டிலும், இதர ஐரோப்பிய நாடுகளிலும் காணப்படுகின்றன. சட்ட ஆட்சி, பொதுச் சட்டங்களின் தன்மை, அவற்றின் அம்சங்கள் யாவும் அத்தியாயம் நான்கில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

# 4. சட்ட ஆட்சியும் பொதுச் சட்டமும்

**சட்ட ஆட்சி** (**Rule of Law**) : இங்கிலாந்து நாட்டு அரசியலமைப்பு வளர்ச்சியில் ஆரம்பம் முதல் கடைசிவரை 'சட்ட ஆட்சி' என்ற சொற்றொடர் நிரவிஞற் போல அடிக்கடி தோன்றுகிறது. ஐரோப்பிய பண்பாட்டின் பல கட்டங்களிலும் அது காணப்படுகிறது. எனவேதான் தனியாள் ஒருவனின் ஆட்சிக்கு, சட்டத்தின் ஆட்சி எவ்வளவோ மேல் என்றும், விரும்பத்தக்கதென்றும் அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கலானார்கள். இடைக் காலத்தில் (**Middle Ages**) அது, நிலனுள் அரசர்கள் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமென்று வற்புறுத்திய, இறைத்தன்மையுடைய, முழு மொத்தமான சட்டத்தோடு இணைந்திருந்தது. பதின்மூன்றும் நூற்றாண்டில் இக் கருத்து இங்கிலாந்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தது. ஆனுல் பதிஞரும் நூற்றாண்டில், சட்டத்தின் உயர்வு (**Supremacy of law**) பற்றிய இக் கருத்து, தெளிவில்லாத முழு மொத்தமான சட்டத்திற்குப் பதிலாக, பொதுச்சட்டம் (**Common law**) தான் மேலானது என்று பொருள்படும் அளவுக்கு இங்கிலாந்தில் மாற்றமடைந்தது. பதினேழாம் நூற்றாண்டில், வழக்குரைஞர்கள் அனைவரும் சேர்ந்து அரசு முடிக்கு (**Crown**) எதிரான போராட்டத்தில் பாராளுமன்றத்தை ஆதரித்தனர். அதனுல், அவர்கள் தங்களுடைய கருத்துகளைப் பாராளுமன்றத்தின் வாதத்திற்கேற்ப மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. அதாவது பாராளுமன்றந்தான் உச்ச அதிகாரம் உடையதென்ற பாராளுமன்ற வாதம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அது முதல், எந்த நீதிமன்றங்களால் நடைமுறையில் கொண்டு செலுத்தப்பட்டாலும், பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் முதல் எல்லாச் சட்டங்களுக்கும் உச்ச தன்மையுண்டு என்ற வாதம் வலியுறுத்தப்பட்டது. சரித்திர பூர்வமான இந்த மாற்றத்தின் நிகழ்முறை விளைவு, சட்ட ஆட்சி என்பது எதேச்சாதிகாரமாக இல்லாமல் சட்டப்படி அரசு முடி, அதாவது அரசர்

நாட்டை ஆளவேண்டுமென்பதாகும். அது சம்பிரதாய பூர்வமான கட்டுப்பாடாகும். ஏனெனில், பாராளுமன்றம் உச்ச அதிகாரமுடையதாகும். அதனுல் அது தனக்கு விருப்பமான சட்டமெதையும் நிறைவேற்றித் தனக்குத் தேவையான அதிகாரங்களை அரசு முடிக்குத் தர முடியும். இருப்பினும், அரசாங்கம் அதன் இயக்கம், நடவடிக்கைகளைப் பொறுத்த சில ஆதாரமான கட்டுப்பாடுகளை நேர்மை அடிப்படையில் ஏற்றுக்கொண்டு நடக்க வேண்டுமென்று சூசகமாகக் குறிப்பிடுவதாகச் சில கொள்கை விளக்கங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

சட்ட ஆட்சி எந்த அளவிற்கு ஆங்கில அரசியலமைப்போடு பொருந்துகிறதென்பதை விளக்கப் பல முயற்சிகள் நடந்திருக்கின்றன. சட்ட ஆட்சி யென்பது தெளிவற்ற வொரு கருத்து. அதற்குப் பல தெளிவுரைகள் தரப்படுகின்றன. அவைகளில் பிரசித்தி பெற்ற தெளிவுரை ஏ. வி. டைசி என்பரால் 'அரசியலமைப்புச் சட்டம்' (Law of Constitution) என்ற நூலில் தரப்பட்டிருக்கிறது. அந் நூல் முதலில் 1885-ல் வெளியிடப்பட்டது. அதனில் காணப்படும் அத் தெளிவுரை, ஆங்கில அரசியலமைப்புப் பற்றிய கருத்துகளை வெகுவாக அதன் பக்கம் ஈர்த்திருக்கிறது. அரசியமைப்பில் ஊடுருவிச் செல்லும் பல வழி காட்டும் கொள்கைகளில் சட்ட ஆட்சியும் ஒன்ருகும் என்பது டைசியின் சாதனை. அவருடைய கருத்துப்படி சட்ட ஆட்சிக்கு மூன்று பொருளுண்டு.

(1) முதலில் அது, எதேச்சாதிகார சக்தியை ஏற்றுக் கொள்வதில்லை. அதை எதிர்க்கிறது. ஆனுல் முறைப்படியாக இயற்றப்படும் சட்டத்தின் ஆதிக்கம் அல்லது அதன் முழுமையான உச்சத்தன்மையை ஏற்றுக் கொள்கிறது. அரசாங்கத்தையும் அதன் அடிப்படையில் செலுத்தக் கூடிய எதேச்சாதிகாரத் தன்மையுடைய அதிகாரத்தையும் அது ஏற்றுக்கொள்ளவில்லை. ஆங்கிலேயர்கள் சட்டமொன்றினுல் மட்டுமே ஆளப்படுகிருர்கள். ஒரு மனிதன் சட்டப்படி நடக்காததற்காக அல்லது சட்டத்தைப் புறக்கணித்ததற்காகத் தண்டிக்கப்படலாமே ஒழிய, செய்யாத தவறுக்காகத் தண்டிக்கப்பட முடியாது. எந்த மனிதனும் நிரூபிக்கப்பட்ட குற்றமொன்றிற்காகச் சாதாரண நீதி மன்றங்களில் சாதாரண சட்டங்களின் அடிப்படையில்தான் தண்டிக்கப்பட முடியுமேயல்லாது இதர வழிகளிலல்ல.

சட்ட ஆட்சி எந்த அளவிற்கு இக் காலத்திற்குப் பொருத்தமானதாக இருக்கிறதென்பதில்தான் நாம் இவ்விடத்தில் அக்கறையுள்ளவர்களாக இருக்கிறேம். மேற் கூறப்பட்ட விளக்கத்தின் பிற்பகுதி கடைசி காலத்தில் எவ்வாறு ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்ததோ அவ்வாறே இப்போதும் நீதிபதிகளால் ஏற்றுக் கொள்

ளப்பட்டிருக்கிறது. சட்டத்தை மீறிச் செய்த குற்றத்திற்காகத் தான் தண்டிக்கப்பட வேண்டும் என்ற கருத்து இப்போது நிலை நாட்டப்பட்டுவிட்டதோடு, அது மிகவும் எச்சரிக்கையுடன் நீதி மன்றங்களால் போற்றிப் பாதுகாக்கப்படுகிறது. இருப்பினும் இவ் விடத்தில் இரு முக்கிய அம்சங்களைக் கவனிக்க வேண்டியது அவசிய மாகிறது. முதலாவதாக, 'சட்டத்தைப்' பற்றி டைசி குறிப் பிட்டபோது, அவர் பொதுச் சட்டத்தையும், சட்டமன்றத் தினல் இயற்றப்படும் சட்டத்தையும்தான் சட்டமென்று கருதினர். ஆனல், தற்போது சட்டங்களின் பெரும்பகுதி சட்டஞ்செய்வதற்கு நிர்வாகத்திற்குத் தரப்பெறும் அனுமதி (delegated legislation) யினல் ஏற்படுபவைகளாகும். இரண்டாவ தாக, டைசி, 'சாதாரண நீதிமன்றங்கள்' 'சாதாரண முறையில்' வழக்கு விசாரணை செய்வதைக் குறிப்பிட்டார். இன்று, நீதித்தன்மை வாய்ந்த முடிவுகள் நீதிமன்றங்களோடு மட்டுமல்லாமல் ஆட்சித்துறை மன்றங்களால் (Administrative Tribunals) சாதாரண நீதி முறையை விலக்கிய வகையிலும் அளிக்கப்படுகின்றன. இம் மாறுதல்கள் டைசியின் சட்டம், நீதி முறை பற்றிய கொள்கைகளுக்கு மாறுனவை. எனவே, டைசியின் சட்ட ஆட்சிக் கொள்கைபற்றிய அம்சம் நடைமுறை முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில் அவருடைய கொள்கை ஆட்சித்துறை சட்டமுறை ஏற்படுவதைத் தடை செய் வதை நோக்கமாகக் கொண்டது. அடுத்தபடியாக ஆட்சித்துறை மன்றங்களும், அவை சார்ந்த முறைகளும் ஏற்படுவதை வழக்குரை ஞர்கள் குறை சொல்வதற்கும், கண்டிப்பதற்கும் டைசியின் கோட்பாடு இடந்தருவதாக அமைந்திருந்தது. எனவே, சட்ட ஆட்சியையும் பிற்காலத்தில் எழுந்த இம் மாறுதல்களையும் எவ்வாறு இணைப்பதென்பதை அமைச்சர்கள் அதிகாரங்கள் பற்றிய 1931-ஆம் ஆண்டின் தொனுகுவே (Donague) குழுவும், 1957-ஆம் ஆண்டின் ஃபிராங்கு (Franc) குழுவும் ஆராய்ந்து கருத்துகளைத் தெரிவித்திருக்கின்றன.

மேற்சொல்லப்பட்ட விளக்கத்தின் முற்பகுதி அதாவது முறையான சட்டத்தின் முழு உச்சதன்மைக்குத் தரப்படும் அழுத்தமும், அரசாங்கத்திற்கு உசித அதிகாரம் தரப்படக் கூடா தென்பதும் ஆங்கில அரசியலமைப்பின் தற்காலக் கொள்கைகளாக இருக்க வேண்டுமென்பது பரிசீலிக்கப்பட வேண்டியதாகும். இக் கால அரசாங்கங்கள், டைசி காலத்தில் இருந்தவைகளைக் காட்டி லும் நாட்டின் ஆக்க வாழ்வில் உடன்பாடுடைய உயர்ந்த பல பணி களைச் செய்து வருகின்றன. எனவே, இப் பணிகள் சம்பந்தப்பட்ட அரசாங்கத்தின் கொள்கைகளை நிறைவேற்றுவதற்குத் தேவையான

விரிவான அதிகாரங்கள் அமைச்சர்களுக்கு இயல்பாகவே வழங்கப்பட்டவேண்டியதாகிறது. இத்தகைய மாறுதல் டைசிக்கு வேப்பங்காயைப்போன்றதாகும். அமைச்சர்களுக்குத் தரப்பட வேண்டிய உசித அதிகாரம் அவர்களுக்குத் தரப்படக்கூடாதென்னும் டைசியின் தயக்கத்தை ஐவர் ஜென்னிங்சு குறை கூறியுள்ளார். ஐவர் ஜென்னிங்சு இவ் வதிகாரம், டைசியின் காலத்தில் இப்போதுள்ளவாறு அல்லாமல், குறைவாக இருந்ததென்றும், ஆனல் அதை டைசி அறிந்தும், அறியாதவர் போல விட்டு விட்டாரென்றும் கூறுகிறார்.

(2) இரண்டாவதாக, அது சட்டத்திற்கு முன் எல்லோரும் சமம், அல்லது, சாதாரண நீதி மன்றங்களால் நடைமுறைப் படுத்தப்படும், சாதாரணச் சட்டங்களுக்கு எல்லாப் பிரிவினரும் உட்பட்டவர்கள் என்று பொருள்படும்.

டைசியின் இக் கருத்தால் புலப்படும் உண்மை எவரும் சட்டத்திற்கு மேம்பட்டவர்கள் அல்லர் என்பதாகும். ஆனல் அதற்கு ஒரே வகைப்பட்ட சட்டங்களுக்கு ஒவ்வொருவரும் கட்டுப்படுத்தப்படுகிறார் என்பது பொருளன்று. அதாவது, தனியொருவரின் அதிகாரங்கள் அரசதிகாரியொருவரின் அதிகாரங்களுக்கு நிகரானவையல்ல. இருப்பினும், சட்ட ஆட்சி அதிகாரிகளின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுத் தெளிவாக்கப்பட வேண்டுமென்றும், அத்தகைய வரம்புகளை மீறி, அதிகாரிகள் செயலாற்றுவார்களானல் சாதாரண மக்கள் எவ்வாறு சாதாரண நீதிமன்றங்களுக்குக் கட்டுப்பட்டவர்களாக இருக்கின்றார்களோ அவ்வாறு அவ் வதிகாரிகளும் கட்டுப்பட வேண்டுமென்கிறது. இதை டைசி ஃபிரான்சி நாட்டிலுள்ள ஆட்சித் துறைச் சட்டம், அதைப் பின்பற்றி இயங்கும் நீதிமன்றங்களின் அதிகார வெல்லைகள் போன்றில்லாமல் மாறுபட்டதென எடுத்துக் காட்டுகிறார். ஆட்சித் துறைச் சட்டம் போன்ற அமைப்பு இங்கிலாந்து நாட்டு மரபுகளுக்கும் வழக்காறுகளுக்கும் முரணனது என்பது டைசியின் கருத்தாகும்.

இங்கிலாந்து நாட்டுச் சட்டங்கள், நீதி முறையின் சில அம்சங்களின் கருத்துக் குவியல் என்றமட்டில் டைசியின் சட்ட ஆட்சி பற்றிய இரண்டாவது பொருள் பரந்த நோக்கில் இப்போதும் உண்மையாகும். எனினும் அப் பொருள் பற்றி நிலவும் மூன்று கருத்துரைகளை இங்குக் குறிப்பிடுவது அவசியமாகும். முதலாவதாக, பல்வேறு வகை நபர்களுக்கு உரிமைகளும், விலக்குகளும் தரப்பட்டிருக்கின்றன. பேராசிரியர் ஹெச். பிலிப்சு

என்பார் 'சட்டப்படி எல்லோரும் சுய உரிமைகளையும் கடமைகளையும் உடையவர்களாவர் என்னும் கோட்பாட்டிற்கு விலக்குகள் பல இக் காலத்தில் தரப்பட வேண்டியிருப்பதால், டைசியின் சட்ட ஆட்சி பற்றிய இரண்டாவது விளக்கம் சந்தேகத்திற்கிட முடையதாகிறது' என்று கூறுகிறார்.[1] இரண்டாவதாக ஃபிரெஞ்சு முறையோடு ஒப்பு நோக்கிக் கூறும் டைசியின் வாதத்திலுள்ள வலிமை கேள்விக்குரியதாகும். இங்கிலாந்தில் தனி ஆட்சித் துறை நீதிமன்றங்களில் அரசாங்க அலுவலர்கள் விசாரிக்கப்படும் முறை இல்லாததால் அவர்களுக்கு விசேஷ விலக்குகள் கிடையாது. எனவே இங்கிலாந்து முறை உயர் தன்மையுடையதாகும் என்று டைசி சொல்லுகிறார். ஆனால் அவர் கருதுவது போல ஃபிரெஞ்சு ஆட்சித்துறை நீதி, அரசாங்க அலுவலர்களுக்கு விலக்குத்தர வேண்டும் என்ற எண்ணத்தோடு ஏற்றுக் கொள்ளப்படாமல், அதற்கு மாறாக ஆட்சித் துறை அதிகாரிகளின் தவறான அதிகார உபயோகத்தினால் தனி மனிதர்கள் பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்படுவதற்காக ஏற்பட்டதாகும். இங்கிலாந்தில் இத் துறையில் தனிமனிதர்களுக்குத் தரப்பட்டிருக்கும் பாதுகாப்பு ஃபிரெஞ்சு முறையாலுள்ள அளவுக்குப் போதுமானதாக இல்லை. அல்லாமலும் ஒரே நீதிமன்றங்களினால் நிர்வாகம் செய்யப்படுவதாலேயே இங்கிலாந்தில் ஆட்சித் துறைச் சட்டம் இல்லையென்று மறுப்பதற்கில்லை. ஆட்சித்துறையதிகாரிகளைக் கட்டுப்படுத்துவதற்கு ஃபிரான்சில் ஒரு முறையும் இங்கிலாந்தில் வேறு முறையும் இருக்கிறதென்று சொல்வதானது, இங்கிலாந்தில் ஆட்சித் துறைச் சட்டத்திற்குப் பதிலாகச் சட்ட ஆட்சி இருக்கிறதென்று வற்புறுத்துவதற்குக் கூறப்படும் விசித்திரமான காரணமாகும். மூன்றாவதாக, டைசியின் இரண்டாவது பொருள், சட்ட ஆட்சியின் ஓர் அம்சம் என்று சொல்லக் கூடிய அளவுக்கு உயர்த்தப்பட முடியுமா என்று ஜென்னிங்சு என்பார் ஐயப்படுகிறார். 'சட்டத்தின்முன் அனைவரும் சமம், என்பதை விளக்கும் போது டைசி, அரசாங்க அலுவலர் குற்றமிழைக்கும் போது சாதாரண நீதி மன்றங்களின் அதிகார எல்லைக்குக் கட்டுப்படுபவராகிறார் என்று கூறுவது, ஒரு சிறு கருத்து. அது 'சட்ட ஆட்சி' என்ற உயர்ந்த பெயருக்கு—அதிலும் குறிப்பாக அப் பெயர் வேறொரு கருத்தில் பயன்படுத்தப் படும் போது—அடிப்படையாக அமைய முடியுமா என்பது ஜென்னிங்சின் ஐயம்.

(3) இறுதியாக, சட்ட ஆட்சி, அரசியலமைப்புச் சட்டத்தையும் (law of the Constitution) அரசியலமைப்புச் சட்ட விதி

[1]Hood Philips, Constitutional and Administrative Law, P. 38.

களையும் ஒழுங்கு படுத்திக் கூறும் வாய்பாடாகக் கருதப்பட வேண்டும். அரசியலமைப்புச் சட்டமும், அதன் விதிகளும், இதர நாடுகளிலுள்ளவாறு மக்களுடைய உரிமைகளின் பிறப்பிடமாக அல்லாமல் அவற்றின் விளைவாக, அதாவது நீதிமன்றங்களால் விளக்கியுரைக்கப்பட்டு, அவைகளால் செலுத்தப்படும் அடிப் படையில் எழுந்தவைகளாகும். சுருங்கச் சொல்லின் இங்கி லாந்திலுள்ள தனிச்சட்டங்கள் (**Private Laws**) அரசு, அரசு ஊழியர்களின்நிலமையைத் தீர்மானிக்கப் பாராளுமன்றத்தாலும், நீதிமன்றங்களாலும், எடுக்கப்பட்ட நடவடிக்கைகளின் விளை வாகும். எனவே, அரசியலமைப்பு நாட்டின் சாதாரணச் சட்டத் திலிருந்து ஏற்பட்டதாகும்.

இவ்விடத்தில் டைசி, இயற்றப்பட்ட சட்டங்கள் வழங்கும் உரிமைகள் பலவற்றைக் குறிப்பிடாமல் பேச்சுரிமை, கூட்டங்கள் கூடுவதற்குள்ள உரிமை போன்ற பல வகைப்பட்ட தனி மனிதர் களுக்குள்ள அரசியல் சுதந்திரங்களைப் பற்றிக் கூறுகிறார். இன்றும் இந்தச் சுதந்திரங்கள் அனைத்தும் பெரும்பாலும் நீதித் தீர்ப்புகளின் அடிப்படையில் அமைந்திருக்கின்றனவென்பது உண்மையாகும். இந் நிலைமை, அரசியலமைப்பு எழுதப்படாமலிருப்பதின் விளை வாகும். அரசியலமைப்போடு தொடர்புபடுத்தப்படும். இந்த சுதந்திரங்களெல்லாம் நவீன அரசியலமைப்புகளின் ஒரு சிறு பகுதியேயாகும். மேலும், சட்டமும், அரசியலமைப்பும் தனித் தனியாகப் பிரிக்கப்பட முடியுமா என்ற வினாவையும் ஜென்னிங்சு எழுப்புகிறார்.[1]

ஜென்னிங்சு, டைசியின் சட்ட ஆட்சி பற்றிய கொள்கையை (**Theory of the Rule of law**) பொருத்தமற்றதென்று நிராகரிக் கிறார். அவர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அரசியல் கட்டுப் பாடற்ற வாணிகக் கோட்பாட்டின் (**laissez—faire**) தனியாள் சித்தாந்த காலத்தில் அது எழுந்ததென்றும், இருபதாம் நூற் றாண்டில் கூட்டுப் பொறுப்படிப்படையில் பலருக்கும் நன்மைகள் வழங்கவும், கிட்டவும் அரசாங்கம் இயல்பாக எடுத்துக்கொள்ளக் கூடிய முயற்சிகளைப் புரிந்து கொண்டு உதவி செய்வதற்கு மாறாகக் கெடுபிடிகளை ஏற்படுத்தித் தடுப்பதாக இருப்பதென்றும் வாதாடு கிறார். சட்ட ஆட்சி பற்றிய டைசியின் தெளிவுரை வாசகர் களைத் தெளிவுபடுத்தத் தவறுகிறதென்றும் ஜென்னிங்சு சாதிக் கிறார். கடுமை மிக்க அரசாங்கங்களையும் உள்ளிட்ட நாகரிக நாடுகளின் பண்பு எனப்படும் சட்டம், அமைதி (**Law and order**) ஆகியவை போன்றதே சட்டத்தின் ஆட்சி எனப்படுமானால், அது

1. **Jennings, The Law and the Constitution, P. 313.**

இங்கிலாந்து அரசியலமைப்பிற்கேயுரிய, சிறந்தவோர் அம்ச மன்று. இல்லாவிட்டால், அது அரசாங்கத்தின் இயங்குமுறை, தன்மை ஆகியவற்றின் விளக்கமாக அமையாது, அக்கொள்கை வாதியின் சாதாரணக் கூற்றேயாகும் எனக் கொள்ளாலம். சட்ட முற்போக்கு ஆட்சி பற்றிய ஆராய்ச்சி மேற்கொள்ளப்படுமே யானால், அதனால் அரசாங்கக் (liberal democratic Government) கொள்கைளைப் பிரதிபலிக்கும் தெளிவற்ற எண்ணங்களாகச் சட்ட ஆட்சியின் கருத்துகள் தோன்றும். ஆகையால் சட்ட ஆட்சியைப் பற்றித் தனியாகக் குறிப்பிடவேண்டியதில்லை. 'சர்வாதிகார ஆட்சி யினின்றும் மக்களாட்சி அல்லது சட்ட பூர்வமான அரசாங்கத்தை வேறுபடுத்திக்காட்டும் சொற்றொடராக மட்டுமே அது இருக்கு மானால், மேற்காட்டியவாறு அதைக் குறிப்பிடுவதே அறிவுடைமை யாகும்.'

டைசியின் சட்ட ஆட்சி பற்றிய கருத்துகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பரந்து மேலோங்கிக் காணப்பட்ட முற்போக்குக் கொள்கையின் (Liberalism) எதிரொலியாகுமே தவிர, இக் கால அரசாங்க நடப்பின் உட்கருத்தை அறிந்து கொள்வதற்கு அவை உதவா. அவருடைய கருத்துகளில் ஒரு சில இக் காலத்திற்குப் பொருந்தக் கூடியவை எனினும், பொதுவாக அவை அவ்வளவு பயன் தரக்கூடியவை அல்ல. அவை சட்டப்படி இயங்கும் அரசாங்க நடப்பை அடிப்படையாகக் கொண்டவை என்பதைக் காட்டிலும் உயர்ந்த குறிக்கோளொன்றை அவை சுட்டிக் காட்டுவ தாகக் கொள்ளலாம். அவை, ஆங்கிலக் கூட்டுச் சமுதாயத்திலும், அரசாங்கத்தாலும் சில துறைகளில் மானிட உரிமைக்கு ஆபத் துகள் ஏற்படுவதைத் தவிர்க்க அவ்வப்போது பயன்படுகின்றன. வளர்ந்து வரும் அரசாங்க நடவடிக்கைகளால் மானிட உரிமைக்கு ஏற்படக் கூடிய உலகெங்கும் பரந்து காணப்படும் இந்த அபாயம் பற்றிய கவலை, சட்ட ஆட்சி பற்றிய கருத்துகளைத் தெரிந்து கொள்வதற்கு 1945-ஆம் ஆண்டு முதல் மக்களிடையே ஓர் ஊக்கத்தையும் அக்கறையையும் தோற்றுவித்திருக்கிறது. எனவே, சட்ட ஆட்சிக் கருத்து ஐக்கிய நாடுகள் கழகத்தின் (United Nations) ஓர் அங்கமாகிய பொது மன்றத்தின் (General Assembly) 1948-ஆம் ஆண்டு மானிட உரிமைகள் பிரகடனத்தில் (Declaration of human rights) சிறப்பிடம் பெற்றிருக்கிறது. இந்தச் சட்ட ஆட்சி பற்றிய விளக்கம் 1959-ஆம் ஆண்டில் பிரபல பன்னாட்டுச் சட்ட நிபுணர்களின் டெல்லி பிரகடனத்தில் (Declaration of Delhi) தரப்பட்டிருக்கிறது. 1950-ஆம் ஆண்டில் ரோமில் (Rome) நடைபெற்ற ஐரோப்பிய மன்றமும் மானிட உரிமைகள், ஆதாரச் சுதந்திரங்களை எடுத்துக் கொடுத்தது. அதை 1951 ஆம்

ஆண்டில் இங்கிலாந்து நாடு ஏற்றுக் கொண்டது. அதனை ஏற்றுக் கொண்ட இதர ஐரோப்பிய நாடுகளும் தங்கள் ஆட்சி எல்லைக்குட்பட்ட பகுதிகளில் மானிட உரிமைகளை வழங்கவும், பாதுகாக்கவும், உத்தரவாதமளிக்கவும், எங்குத் தகுந்த சட்டங்கள் இல்லையோ அங்கு, தேவையான சட்டங்களை இயற்றவும் உறுதியளிக்கின்றன.

சட்ட ஆட்சி பற்றிய திறனாய்வுக் கருத்துகளும், குறைகளும் ஏராளம். எனினும், இக் காலத்திலும் இங்கிலாந்து நாட்டு அரசியலமைப்பின் முக்கியமான கொள்கைகளில் ஒன்றாக அது இருக்கிறதென்பதைப் பலரும் ஏற்பர்.

(ஆ) பொதுச் சட்டம் (Common law) : இங்கிலாந்து நாட்டு நீதி, சட்ட முறைகளில் கூட ஆட்சிக்கு எத்தகைய சிறப்புண்டோ அத்தகைய சிறப்பு, பொதுச்சட்டத்திற்குமுண்டு. இப் பொதுச் சட்டம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாகும். சாக்சேனியர்கள் (Saxons) காலத்தில் ஏற்பட்ட சில சட்ட நீதி வழக்கங்களும், பயிற்சிகளும் இராச்சியத்தின் பெரும்பாலான பகுதிகளால் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. இவ் வழக்கங்களின் ஒரு பகுதி சிலருடைய அல்லது அவரது அறிஞரவையுடைய (Witan) எழுதப்படாத தீர்ப்புகளும், சட்டங்களுமாகும். இவைகளெல்லாம் எழுதப்படாமலிருந்த போதிலும், முறைப்படியாக, ஒழுங்காக ஏற்பட்டவை. நார்மானிய வெற்றியைத் தொடர்ந்து இவ் வழக்கங்கள் முன்னினும் வேகமாக வளர்ச்சியடைந்தன. இதற்கு அரசரது வலிமை மிக்க ஆட்சி காரணமாகும். குறிப்பாக, நிதி, நீதித்துறைகளில் அரசர் அதிகாரங்களை மத்தியில் குவித்து ஆட்சி செய்ததாகும். படைமானிய, வட்டார நீதி மன்றங்களுக்குப் பதிலாக அரசருடைய நீதி மன்றங்கள் (King's Courts) ஏற்பட்டு அரசரால் நியமிக்கப்பட்ட நீதிபதிகள் இராச்சியத்தின் பல பாகங்களுக்கும் சென்று அரசர் பெயரால் நீதி வழங்கலானார்கள்.

குறிப்பிட்டவோர் இடத்திலிருந்து அதிகாரத்தைப் பெற்றதாலும், பணியாட்கள் ஒருமுகமாக இருந்ததால் ஏற்பட்ட ஒன்றிய போக்காலும், செய்தியையும் கருத்துகளையும் தொடர்ந்து பரிமாறிக் கொண்டதாலும் மக்களிடையே வேரூன்றியிருந்த வழக்கங்களைக் கண்டுபிடித்து, தங்கள் முன் வந்த வழக்குகளில் அவைகளை அந் நீதிபதிகள் கடைப்பிடித்ததன் வாயிலாக நாடு முழுவதும் நடப்பில் கொண்டு வந்தார்கள். ஒருவருடைய முடிவுகள் இதரர் பின்பற்றுவதற்கு முன் மாதிரிகளாக அமைந்தன. இவ்வாறு நீதிபதிகளால் உருவாக்கப்பட்டுச் செல்

வாக்குப் பெற்ற தீர்ப்புகள் காலப்போக்கில் பொதுச்சட்டமாகி, பதின்மூன்ரும் நூற்ருண்டு வாக்கில் இங்கிலாந்து நாட்டின் நீதி முறையின் சிறந்தவொரு பகுதியாக விளங்கியது. எனவே பொதுச் சட்டமென்பது நீதிபதிகளால் ஆக்கப்பட்ட விதிகளே யல்லாமல், அரசராலோ, சட்டமன்றத்திஞலோ ஏற்பட்டவையல்ல. இருப்பினும், அச் சட்ட விதிகளுக்கு அரசதிகார ஆதரவிருந்ததோடு எவ்வெவ்வகையில் கருதிஞலும், அவ்வவ்வகையில் சட்டங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, எங்கெல்லாம் அரசரது நீதி மன்றங்கள் ஏற்பட்டுப் பணி புரிந்தனவோ, அங்கெல்லாம் அவை பின்பற்றப் பட்டன.

பொதுச் சட்டமென்று இப்போது அறியப்படும் பெரிய முறையின் வளர்ச்சியில் இதர பல கூறுகளும் நுழைந்து விட்டன. அதாவது உரோமானியச் சட்டம் (Roman Law), திருச்சபை அல்லது சமயச் சட்டம் (Church or Canon Law) வணிகச் சட்டம் ஆகியவை வழங்கிய சில அம்சங்களோடு கூட, சட்ட நிபுணர் களும், திறனய்வாளரும் அதுவரை பெரும் வகையில் உதவி புரிந் தனர். நீதித்துறை வல்லுநர்களுக்குக் கொள்கைகளாலும், நடைமுறைகளாலும் பரந்து கிடக்கும் இச் சட்டத்தின் பகுதிகளை விளக்கியுரைப்பதென்பது ஓர் அறை கூவலாகும் எனலாம். இரண்டாம் ஹென்றி அரசரின் தலைமை நீதிபதி (Chief Justice) முதல், 'இங்கிலாந்து நாட்டுச் சட்டங்களின் தெளிவுரை' என்ற நூலின் ஆசிரியரான பிளாக் ஸ்டோன் (Black Stone) வரை பலரும் அவ்வப்போது நிலவி வந்த பொதுச் சட்டத்தின் பல பகுதிகளையும் திரட்டித் தந்துள்ளனர். அதோடு அவர்கள் தங்களுடைய கருத்துரைகளைக் குறிப்பிட்ட வழக்குகளின் அடிப்படையில் நல்கியதானது, அதனை வரைமுறைக்குக் கட்டுப்பட்ட வகையில் அமைக்க முடிந்ததோடு, எதிர்காலத்தில் அதன் வளர்ச்சிக்குச் சிறந்ததோர் வரிவடிவம் தருவதற்கும் ஏதுவாயிற்று.

பொதுச் சட்டம் இங்குமங்குமாகப் பல புதுப்புது கருத்துகளையும், கொள்கைகளையும் பெற்றுச் சீராக வளர்ந்து கொண்டே வந்தது. இவ் வளர்ச்சி நம்முடைய காலத்திலும் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. எனவேதான், பொதுச் சட்டத்தை யாவரும் உயிரோட்டமுள்ள சட்டமுறை யென்று கூறுகின்றனர். அதனுடைய வளர்ச்சி வரலாற்றில் தடையொன்று ஏற்பட்டதே இடையாது, அரசாங்க அமைப்பில் ஏற்படும் மாறுதல்கள் அதனை முன்னினும் பலம் மிக்கதாகவே செய்தன—செய்து வருகின்றன.

பதினேழு, பதினெட்டு நூற்றாண்டுகளில் ஆங்கிலேயர்கள் தங்களுடைய தாய்த்திரு நாட்டை விட்டு உலகின் பல்வேறு பகுதிகளில் குடியேறிய போது, பொதுச்சட்டத்தைத் தங்களுடைய விலை மதிப்பற்ற மாணிக்கமாக உடன் எடுத்துச் சென்றனர்.

பொதுச் சட்டத்தை ஒருவர் எங்குக் காணலாம்? அது வரிவடிவம் தரப்படாமல் வளர்ந்தது; இன்றுவரை அது எந்தவொரு தனிச் சட்டத்திலும் (code) முழுமையாகச் சேர்க்கப்படவில்லை. எனவே, அதனை விளக்கும், விவாதிக்கும் நூல்கள் பல இல்லையென்பது அதற்குப் பொருளாகாது. ஏதேனும் ஒரு வகையில் பொதுச்சட்டத்தின் பகுதிகள் அனைத்தும் எழுதப்பட்டோ, அச்சடிக்கப்பட்டோ இருக்கின்றன. அதனுடைய முதன்மையான ஆதாரம், நீதிபதிகளின் தீர்ப்புகளாகவே நெடுங்காலம் இருந்துவருகிறது. முதலாம் எட்வர்டு அரசர் காலம் முதல், இருநூற்றாண்டுகளுக்குப் பெயர் தெரியாத வழக்குரைஞர்களால் ஆண்டு நூல்களில் (Year Books) அதன் பகுதிகள் பதிவு செய்யப்பட்டன. அதன் பிறகு மற்றவர்கள் அவைகளைச் சட்ட அறிக்கைகளில் (Law Reports) தங்களுடைய சொந்தப் பெயர்களில் வெளியிட்டு வந்தனர். பொதுச் சட்ட விதிகளின் சிறப்பான ஆதாரங்களாக, அச் சட்டத்தின் கொள்கைகள் — அக் கொள்கைகள் எந்த வழக்குகளிலிருந்து பெறப்பட்டனவோ— அவைபற்றிய சட்ட வல்லுநர்களின் கருத்துரைகளென்றே கூறலாம். எனவே பொதுவாக, பொதுச்சட்டம் எந்தவோர் இயற்றப்பட்ட சட்டத்திலும் முழுமையாகக் காணப்படவில்லை என்ற கருத்தில் எழுதப்படாத சட்டமாகவே இருந்து வருகிறது. உண்மையில் அதன் சில பகுதிகள் இயற்றப்பட்ட சட்டத்தில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் கூட்டாளி பற்றிய சட்டம் (the law of partnership), விற்பனைகள் பற்றிய சட்டம் (law of sales), மாற்றுண்டிகளைப் பற்றிய சட்டம் (bills of exchange), அறக்கட்டளைகள் பற்றிய சட்டம் (the law of trusts) முதலியவை குறிப்பிடத்தகுந்தவைகளாகும்.

**(இ) இயற்றப்படும் சட்டமும் பொதுச் சட்டமும்:** ஒரு பக்கம் பொதுச் சட்டம் உருவாகிக் கொண்டு வந்த போது பிறிதொரு சட்டம் இயற்றப் படுவதன் (enactment) வாயிலாக நடப்பில் வந்து கொண்டிருந்தது. அதுதான் இயற்றப்படும் சட்டம். அச் சட்டம் சட்ட மன்றத்தாலோ, அரசராலோ இயற்றப் பட்டுத் தரப்பட்டது. பல நூற்றாண்டுகள் வரையிலும், அரசர் தம்முடைய ஆலோசகர்கள் உதவியினாலும், அறிவுரையாலும் சட்டங்களை அறிவித்தார். பாராளுமன்றம் ஏற்பட்ட பிறகு,

அதன் இரு மன்றங்களாலும் ஏற்கப்பட்ட சட்டங்கள் தோன்றின. பாராளுமன்றம் சட்டமியற்றத் தொடங்கி இப்போது அறுநூறு ஆண்டுகளுக்கு மேலாகிறது. ஓரிரண்டு நூற்றுண்டுகள் முன்பு வரையிலும் அவ்வாறு பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களின் எண்ணிக்கை அவ்வளவு அதிகமாக இருக்கவில்லை. ஆனால் பதினெட்டாம் நூற்றுண்டின் மத்தியிலிருந்து சமூக் பொருளாதார நிலைமைகளில் மாறுதல் ஏற்பட வாரம்பித்தது முதல் சட்ட மியற்றும் அதிகாரம் தாராளமாகப் பின்பற்றப் பட்டது. இப்போது ஒவ்வோரர்ண்டும் அரசாங்கப் பொதுச் சட்டங்களின் **(Public General Acts)** எண்ணிக்கை வளர்ந்து கொண்டே வருகிறது.

இவ்வாறு இயற்றப்படும் சட்டங்களில் சில பொதுச் சட்டத்தால் கவரப்படாத பொருள்களைப் பற்றியவைகளாக இருக்கின்றன. ஆனால் அவைகளில் பல பொதுச் சட்டத்தால் ஏதாவதொரு வகையில் கவரப்பட்ட பகுதிகளைப் பற்றியனவாக இருக்கின்றன. எனவே, பொதுச் சட்டம் அவ்வப்போது தொடர்ந்தாற் போல இயற்றப்படும் சட்டத்தால் விளக்கப்படுகிறது, தொகுக்கப்படுகிறது, அல்லது திருத்தியமைக்கப்படுகிறது, அல்லது விலக்கப்படுகிறது. எவ்வளவுதான் பொதுச் சட்டம் போற்றப் பட்டாலும் பாராளுமன்றத்தின் அதிகாரத்திற்கு எதிராகத் தனிச் சலுகையோ, விலக்குகளோ அதற்குத் தரப்படுவதில்லை. பாராளுமன்றம் விரும்பினுல் அதனுடைய கொள்கைகளையோ விதிகளையோ எப்போது வேண்டுமானாலும் திருத்தலாம் அல்லது முற்றிலும் நிராகரிக்கலாம். பொதுச் சட்டத்திற்கும் பாராளுமன்றச் சட்டத்திற்குமிடையே மோதல் ஏற்படுமானால் பின்னது தான் மேலோங்கி நிலைபெறும். பொதுச் சட்டத்தில் ஏற்படும் எந்தப் புதிய முன்னேற்றமும் பாராளுமன்றத்தால் இயற்றப் படும் சட்டத்தைச் செல்லாததாக ஆக்கமுடியாது.

மேற்கூறப்பட்டதிலிருந்து ஒரு சிலர் முற்றிலும் தவறுன எண்ணத்தைக் கொள்ளக் கூடுமாகையால், குற்றவியல் சட்டம் நீங்கலாக இன்றும் சிவில் சட்டம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் பொதுச்சட்டம் பெருமளவிற்கு முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறதென்பதைக் குறிப்பிட வேண்டியதவசியமாகிறது. இப்போதுள்ள நிலைமையில், இது இன்னும் பல காலத்திற்குத் தொடர்ந்து இருந்து வரும் என்று தோன்றுகிறது. இயற்றப்படும் சட்டங்கள் பொதுச்சட்டத்தின் இடத்தைப் பிடித்துக் கொண்ட போதிலும், பொதுச்சட்டத்தோடு தொடர்பில்லாதபோது

அவற்றிற்குப் பொருளேதும் இருக்காது. 'இயற்றப்படும் சட்டங்களெல்லாம் விலக்கப்பட்டுவிட்ட நிலையிலும் அங்குச் சட்டமுறையொன்று இருக்கும். ஆனால் பொதுச் சட்டம் அகற்றப்பட்டு, இயற்றப்படும் சட்டம் இருக்குமாயின், அப்போதும் விதிகள் பல இருக்கும். ஆனால் அவைகள் ஒன்றோடொன்று சம்பந்தமில்லாது போவதோடு முக்கியத் தொடர்புகள் அறுந்து காணப்படும்' என்று ஓர் ஆங்கில அறிஞர்[1] குறிப்பிட்டுள்ளதை இங்கு நினைவிலிறுத்தல் அவசியமாகும்.

[1]W.M. Geldart, Elements of English Law (Holt London, 1912), P.9.

# 5. ஆட்சித்துறைச் சட்டம்

சென்ற அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட சட்ட ஆட்சி ஐரோப்பிய நாடுகளில் நடைமுறையில் இல்லை. அதற்குப் பதிலாக ஆட்சித்துறைச் சட்டமுறைதான் பின்பற்றப்படுகிறது. உண்மையில், ஐரோப்பிய நீதியியல் உரோமானியச் சட்டத்தை அடிப்படையாகக்கொண்டது. அதன்படி அரசு ஊழியர்கள் நடத்தப்படும் விதத்தில் தனிமுறைச் சலுகைகள் தரப்படுகின்றன. எனவே, தவறு செய்தவர்கள் அல்லது தவறு செய்திருக்கக்கூடும் என்று கருதப்படுகிற அதிகாரிகள் பற்றி விசாரணை செய்து தண்டிக்கத் தனி நீதி மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவர்கள் அலுவலர்கள் என்ற முறையில் செய்த அல்லது செய்ததாகக் கருதப்படும் குற்றங்களுக்காகச் சாதாரணச் சட்டங்கள் அடிப்படையில் சாதாரண நீதி மன்றங்களின் அதிகார வரம்பிற்குட்பட்டவர்கள் அல்லர்.

ஆட்சித்துறைச் சட்டம் முதன் முதலில் ஃபிரான்சில் தோன்றியது. பெரும் புரட்சிகளினால் ஏற்பட்ட சமூகப் பொருளாதார மாறுதல்களில் நீதித்துறையில் தலையிடக் கூடுமென்ற பயம் புரட்சிக்காரர்களுக்கு இருந்ததால், அவர்கள் நிர்வாகம் சரிவர இயங்க முடியாமற்போகக்கூடும் என்று கருதினர். அதனால் அவர்கள் நீதித் துறையை நிர்வாகத்துறையினின்றும் பிரித்துத் தனியாக வைத்தனர். எனவே, புரட்சிக்குப் பிறகான காலத்தில் இயற்றப்பட்ட சட்டங்கள் நிர்வாகத்துறை அலுவலகங்களில் நீதித்துறை தலையிட முடியாதவாறு நிறைவேற்றப்பட்டன. அலுவலர்களால் தனியாட்களுக்கு இழைக்கப்பட்ட தீங்குகளைக் கவனிப்பதற்கும், ஆவன செய்வதற்குமெனப் புதுவகை நீதிமன்றம் நிறுவப்பட்டது. அவைகளே ஆட்சித்துறை சார்புடைய நீதிமன்றங்களெனப்பட்டன. ஃபிரான்சில் ஏற்பட்ட இவ்வகை நீதிமன்றங்கள் இதர ஐரோப்பிய நாடுகளிலும் ஏற்பட்டன. இம்முறையில், அமெரிக்க

ஐக்கிய நாடுகள். இந்தியா போன்ற நாடுகளிலுள்ள நீதிப்புன ராய்வுக்கு இடம் கிடையாது என்பது தெளிவாகும்.

**ஆட்சித்துறைச் சட்டத்தின் தன்மை:** ஆட்சித்துறைச் சட்டத்தின் தன்மை அரசியல் மாணவர்களிடையே பெருத்த சர்ச்சையைத் தோற்றுவித்திருக்கிறது. உண்மையில் டைசிதான் ஆட்சித்துறைச் சட்டம் பற்றிய தவருன விளக்கத்திற்குப் பொறுப்பாளியாவார். 'குடிமக்களுக்கு எதிராக அரசு அதிகாரத்தைத் தவருன வழியில் பயன்படுத்தும் அலுவலர்களைக் காப்பாற்றுவதற்கான விதிகளே ஆட்சித்துறைச் சட்டம்' என்று டைசி கூறுகிருர். இக் கருத்துத் தவருன போக்கையுடையது. குட்நோ (Goodnow) என்பவர் 'ஆட்சித் துறைச் சட்டமென்பது ஆட்சித் துறை அதிகாரிகளின் தகுதியுடைமையையும், (அமைப்பையும்) நிர்ணயிக்கும் அர சாங்கச் சட்டத்தின் ஒரு பகுதியே யாகும். அது தனிமனிதர்களின் உரிமைகள் மீறப்படுமாலுல், அதற்கான தனிப் பரிகாரங்களைக் கோடியிட்டுக் காட்டுகிறது' என்று கூறுகிருர். ஸ்ட்ராங்கு என் பவர் 'தனிக் குடிமக்களுக்கும் ஆட்சித்துறை அதிகாரிகளுக்கு மிடையே இருக்கவேண்டிய உறவையும், அரசாங்க அலுவலர்களின் நிலைமையையும், அரசாங்க ஊழியர்கள் சம்பந்தப்பட்டவைகளில் தனிநபர்களுக்குள்ள உரிமைகளையும், கடமைகளையும், இவைகள் எவ்வாறு நிறைவேற்றப்படுகின்றன வென்பதையும் ஒழுங்கு படுத் தும் விதிகளைக் கொண்டதே ஆட்சித் துறைச் சட்டம்' என்று கூறு கிருர். டயிள்யூ. பி. மன்ரோ என்பார் 'அலுவலர்கள் என்ற முறையில் தாங்கள் செய்த குற்றங்களுக்காகச் சாதாரண நீதி மன்றங்களுக்குக் கட்டுப்படாமல் செய்யவும், ஆனுல் அதேபோது அவர்களுடைய கடப்பாட்டுடைமையை நிலைநாட்டவும் எழுந்த நீதி முறையே அது' என்றுரைக்கிருர். அவருடைய கருத்துப்படி அது தனி நபர்களுக்கு இழைக்கப்பட்ட தீங்கில் அரசு, அதன் ஊழியர்களின் பங்கையும் பரிகாரத்தையும் பற்றியதாக இருப்ப தோடு, ஆட்சித்துறை பிறப்பிக்கும் உத்தரவுகளின் செல்லுபடி யாகும் தன்மையையும், சட்ட வரம்பற்ற செயல்களுக்குப் பொது மக்களுக்குக் கிடைக்க வேண்டிய பரிகாரத்தையும், அதற்கான முறைகளையும், அதிகாரிகளின் சொந்த நடத்தை-பொது நடத்தை பற்றிய தெளிவையும், இன்னும் இவை போன்ற பலவற்றையும் எடுத்துரைக்கிறது.

மேற்கூறப்பட்ட கருத்துகளை நுணுக்கமாக ஆராயும் போது ஆட்சித்துறைச் சட்டம் பின்வரும் அம்சங்களை உடையதாக இருக்கிறது. (1) அரசாங்க ஊழியர்கள் என்ற முறையில் அலுவலர்களைச் சாதாரண நீதி மன்றங்களின் அதிகார எல்லையி

னின்றும் விலக்குகிறது. (2) அரசு ஊழியர்கள் அலுவலர் என்ற முறையில் செய்த குற்றங்களுக்காக அவர்கள் மேல் தனிப்பட்ட குடிமக்கள் வழக்குத் தொடரும்போது அவர்களை விசாரிப்பதற்காகத் தனி நீதிமன்றங்கள் அமைக்கப்படுகின்றன. (3) அது ஆட்சித்துறை உத்தரவுகள் செல்லுபடியாகுமா வென்பதைப் பரிசீலனை செய்கிறது. (4) பாதிக்கப்பட்டவர்களுக்குப் பரிகாரம் கிடைக்கப் பின்பற்ற வேண்டிய வழிவகைகளை அது எடுத்துரைக்கிறது. (5) அது அரசின் எதேச்சாதிகார நடவடிக்கைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நட்ட ஈடு தருகிறது. (6) அது அலுவலர்கள் அலுவர் என்ற முறையிலும் தனிப்பட்ட முறையிலும் செய்யும் காரியங்களை வேறுபடுத்திக் காட்டுகிறது. (7) அது தனிப்பட்டவர்களுடையவும் அதிகாரிகளினுடையவுமான உறவுகளை ஒழுங்குபடுத்துகிறது. (8) அது ஆட்சித்துறை அதிகாரிகளினுடைய தகுதியுடைமையை நிர்ணயிக்கிறது. (9) அது அரசினுடைய நிலைமையையும் ஊழியர்களுடைய நிலைமையையும், தனிப்பட்ட குடிமக்களுடைய கடமைகளையும், பொறுப்புகளையும் நிர்ணயிக்கிறது. (10) இந்த உரிமைகளையும், பொறுப்புகளையும் நிறைவேற்றுவதற்கான நடைமுறைகளையும் அது வகுக்கிறது.

ஆட்சித்துறைச் சட்டம் ஒருதலை முடிவானது அல்லது பொறுப்பற்றதென்னும் டைசியின் வர்தம் முற்றிலும் தவருனதென்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது.

ஆட்சித்துறைச் சட்டமுறை, ஊழியர்களுக்கும் தனிப்பட்ட குடிமக்களுக்கும் நீதி வழங்குவதில் தவறவில்லை. உண்மையில், ஆட்சித்துறை நீதிமன்றங்களுக்கெல்லாம் தலைமையாக விளங்கும் ஃபிரெஞ்சு அரசுக் கழகம் (French Council of State) ஃபிரெஞ்சுக் குடிகளின் சுதந்திரங்களைப் பாதுகாக்கும் சிறந்த மன்றமாகத் திகழ்கிறது. அது உயர்ந்த நடுநிலை மரபுகளை நிலைநாட்டி வந்திருக்கிறது சொல்லப்போனல் ஃபிரெஞ்சு நாட்டு மக்கள், ஆட்சித்துறை நீதி மன்றங்களிடமிருந்து இங்கிலாந்து நாட்டு மக்களைக் காட்டிலும் உண்மையான பரிகாரங்களைப் பெற்றிருக்கின்றனர். கார்னர் (Garner) சொல்வதுபோல ஃபிரான்சு நாடு ஒன்றில்தான் தனிப்பட்ட மக்கள், ஆட்சித்துறைக் கேடுகளால் விளையும் அபாயங்களிலிருந்து செவ்வனே பாதுகாக்கப்படுகிருர்கள். நஷ்ட ஈட்டைப் பொறுத்தவரையிலும், அந் நாட்டு மக்களுக்கு இந் நீதிமன்றங்களின் தீர்ப்புகளில் நம்பிக்கையுண்டு. வேறு எந்த நாட்டிலும் இவ்வளவு நம்பிக்கை மக்களிடம் இல்லை யெனலாம்.

மக்களின் சுதந்திரங்கள் பாதுகாக்கப்படுவது ஒருபுறமிருக்க, ஆட்சித்துறைச் சட்ட நீதிமன்ற முறை எளிமையுடையதாகவும்,

அதிக செலவில்லாததாகவு மிருக்கிறதென்பது மிகவும் முக்கிய மாகும். சாட்சி பற்றிய, வருத்தி எடுக்கும் விதிகள் இங்கு வற்புறுத்தப்படாததால் நீதி மன்றங்களின் தீர்ப்புகள் காலதாமத மில்லாமல் விரைவாக வழங்கப்படுகின்றன. இம்முறை மிகத் திறமையாக நடைபெறுகிறது. இதற்குக் காரணம் அந் நீதி மன்றங்களில் ஆட்சித்துறைப் பணிகள் பற்றிய சிறந்த அறிவுடைய வர்கள் நீதிபதிகளாகப் பணியாற்றுவதாகும். எனவே, அவர்க ளுடைய தீர்ப்புகள் நிபுணர்களின் முடிவுக்கு நிகரானவைகளாக இருக்கின்றன. மேலும், சாதாரண நீதிபதியொருவர் ஆட்சித் துறை சம்பந்தப்பட்ட நுணுக்கங்களையும், சிக்கல்களையும் அறிந் திருக்க முடியாதாகையால், அவரிடமிருந்து சரியான தீர்ப்பை எதிர்பார்க்க முடியாது என்பது, ஒரு வாதம் என்பதை இவ் விடத்தில் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். ஆட்சித்துறைச் சட்டம் தொகுக்கப்படாதிருப்பதால், அது நெகிழ்ச்சியையும், சூழ்நிலைமைக்குத் தகுந்தாற்போலப் புதியனவற்றையும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்கிறது. ஆட்சித்துறை நீதிமன்றங் களும் முன்னால் வழங்கப்பட்ட தீர்ப்புகளைக் கோடியாகக் கொள்ள வேண்டியதில்லை. அவைகள் முந்தைய தீர்ப்புகளினின்றும் விலகி மாறுபட்ட தீர்ப்புகளை அனுபவ அடிப்படையிலும் வழங்கலாம். இதனால் நீதிபதிகளுக்குள்ள சுதந்திரம் நன்கு தெரிகிறது.

ஃபிரெஞ்சுக்காரர்களும் இதர ஐரோப்பிய நாட்டுக் குடி களும் ஆங்கில-சாக்சேனிய நாடுகளிலுள்ள சட்ட ஆட்சி முறையை விடத் தங்களுடைய முறை எவ்வளவோ மேலானது என்று கூறு கிறார்கள். அமெரிக்க இங்கிலாந்து நாடுகளிலுள்ள குறை கூறுவோரும் இந்த முறையைக் கடுமையாகத் தாக்குவதை இப் போது வெகுவாகக் குறைத்துக் கொண்டுவிட்டனர். அதற்கு மாறாக, அந்த நாடுகளிலுள்ளவர்களெல்லாம் ஆட்சித்துறைச் சட்டத்தைப் போற்றி வருகின்றனர். அதற்குக் காரணம் அந்த நாடுகளிலும் இப்போது ஆட்சித்துறைச் சட்டம் ஏற்பட்டிருப் பதனாலிருக்கலாம். அவர்கள் தங்களுடைய நாடுகளில் ஆட்சித் துறை நீதிமன்றங்களுக்குள்ள பல அம்சங்களும் பண்புகளும் கொண்ட பல செயலிகள் விரைவாக ஏற்பட வேண்டுமென்று விரும்புகின்றனர்.

ஆட்சித்துறை நீதிமன்றங்கள் தற்போது இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியா போன்ற நாடுகளிலும் ஏற்பட்டு வருகின்றன வென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இதுகாறும் விவரிக்கப்பட்ட பொதுச்சட்டம், ஆட்சித்துறைச் சட்டம் ஆகிய இரண்டு சட்ட முறைகள்தாம் பொதுவாக மேற்கு

நாடுகளிலுள்ளவைகளாகும். ஆங்கில மொழி பேசப்படும் நாடுகளிலெல்லாம் பொதுச் சட்டத்தை ஆதாரமாகக் கொண்ட நீதித்துறை ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பிய கண்டத்திலுள்ள நாடுகள் பலவும், இலத்தீன் அமெரிக்க நாடுகளும் ஃபிரெஞ்சு முறையைப் பின்பற்றித் தங்களுடைய நீதித்துறையை அமைத்துக் கொண்டிருக்கின்றன

அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், ருஷியாவும் இராச்சியமும், ஃபிரெஞ்சு முறையை ஏற்றுக் கொண்டிருக்கிறது. இந்த இரண்டு முறைகளையும் பொதுவுடைமைக் கொள்கையையும் பின்பற்றும் நாடுகளில் நீதித்துறை அமைக்கப்பட்டுச் செயலாற்றி வரும் முறைகள் இந் நூலின் இரண்டாம் பாகத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன.

# 6. சோவியத்-சீன நீதிமுறை

(அ) சோவியத் நீதிமுறை: சோவியத் நீதிமுறை தனித் தன்மை வாய்ந்தது. அம்முறை தேசியச் சூழ்நிலை சமுதாயத்தின் உலகாயத நிலைமைகளின் விளைவாகத் தோன்றியதாகக் கருதப்படும் சட்டத்தை ஆதாரமாகக் கொண்டது. 'சட்டத்தின் சாராம்சம் பற்றிய தெளிவான விளக்கத்தை மார்க்சீய-லெனினிசம் (Marxism Leninism) தருகிறது. அது நீதித் தொடர்புகள் மக்களுடைய வாழ்க்கை நிலைமைகளில் வேரூன்றி யிருக்கிறதெனவும், சமூகத்தில் எந்த வகுப்பு ஆதிக்கம் செலுத்துகிறதோ, அதனுடைய விருப்ப மாகச் சட்டம் இருக்கிறதெனவும் போதிக்கிறது.'[1] விஷின்சிகியின் கருத்துப்படி, 'முதலாளித்துவம், சமூகத்தில் மேலோங்கி யுள்ள சுரண்டல் காரர்களுடைய நன்மைகளைப் பாதுகாக்கவும், உறுதிப்படுத்தவும் உதவுகிறது. சோவியத் சட்டம், முதலாளித் துவத்தை ஒழிக்கவும், பொதுவுடைமைச் சமுதாயத்தைச் சமைக் கவும் உதவுகிறதென்று' அவர் சாதிக்கிறார். சுருக்கமாக, சோவியத் சட்டம் சோஷலிசத்தை அடைவதற்கான போராட் டத்தின் ஒரு சாதனமாகக் கருதப்படுகிறது. 'இவ்வாறாகச் சோவியத் நீதிக் கொள்கையில் இரு கொள்கைகள் காணப்படு கின்றன. உழைப்பாளி வர்க்கத்தினரின் எதிரிகளுக்குச் சர்வாதி கார விதிகளும், உழைப்பாளிகளுக்கு ஜனநாயகச் சட்டங்களும் ஆக, இரண்டு முறைகள், அங்கு இருக்கின்றன. எல்லோருக்கும் சமநீதி என்னும் தத்துவம் அங்குக் கொள்கையளவிலும் சரி, நிகழ் முறையிலும் சரி ஏற்றுக் கொள்ளப்படவில்லை. எனவே, நீதித் துறை அரசாங்கத்தின் ஒரு பிரிவாக இருந்தாலும் தனித்தியங்குவ தாக, நடுநிலைமைத் தன்மையைப் பின்பற்றுவதாக இல்லாமல் அரசரதிகாரத்தின் பிறிதோர் அமைப்பாக இருக்கிறது. சட்டம் அதன் சாராம்சத்தில் சமூகப் புரட்சியை வளர்ப்பதாகத்தான் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. லெனின்

[1] Andrew Y. Vyshinky. The Law of the Soviet State. P. 13.

கூறுவதாவது 'சட்டம் அரசியலாகும்; சட்டம் அரசியலின் கருவி.' லெனின், ஸ்டாலின் ஆகியவர்களின் கருத்துப்படி, சோவியத் அரசுக்கும், சோவியத் மக்களுக்கும் சோவியத்தின் பகைவர்களோடு போராடுவதற்கும், புதிய சோவியத் முறையைப் பலப்படுத்துவதற்கும், உழைப்பாளி மக்களிடையே புதிய சோவியத் ஒழுக்கத்தை நிலை நிறுத்துவதற்கும் நீதிமன்றங்கள் தேவையாகும்'[1] எனவே, சோவியத் நீதியில் சுதந்திரச் சட்டக் கருத்து (Independent Idea of law) என்னும் கொள்கையை அடியோடு நிராகரிக்கிறது என்பது விளங்கும். சட்டமென்பது, அரசின் விருப்பம்; அவ்வரசின் உலகாயத வாழ்க்கையின் விருப்பம்; வகுப்புவாதம் நிறைந்தவொரு சமூகத்தில் அது ஆட்சியிலிருக்கும் வகுப்பினரின் விருப்பம். சட்டம், நிர்வாகம், சட்ட மன்றம், பொதுவுடைமைக் கட்சியின் தலைமை ஆகியவைகளினின்றும் தனித்து நிற்கும் சுதந்திரமான சக்தியாகக் கருதப்படவில்லை என்று பைனர் (Finer) என்பவர் கூறுகிறார்.[2] ஹசார்டு என்பவர், 'சோவியத் யூனியனில் நீதி மன்றங்கள் பொதுவுடைமைக் கட்சியின் பிரிவுகளாகும். அவை அக் கட்சியின் கொள்கைகளை நிறைவேற்ற வேண்டும். சோவியத் சட்ட நிபுணர்கள் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை' என்றுரைப்பதும் கவனிக்கத் தக்கதாகும்.[3] இவ்வாறு நீதிபதிகளெல்லாம் கொள்கையடிப்படையிலும், நடைமுறைப்படியும் நிர்வாகத்தின் ஒரு பகுதியாக இருப்பதோடு, அவர்களை நிர்வாகம் மேற்பார்வை செய்யும் முறையும் நிலவுகிறது. சோவியத் யூனியனிலுள்ள உச்ச நீதி மன்றம் மைய அரசாங்கத்தின் ஒரு பகுதியாகவே அமைக்கப் பட்டிருக்கிறது.

(ஆ) சீன நீதிமுறை: சீன நீதிமுறை ஏறத்தாழச் சோவியத் முறையைப் போன்றதேயாகும். நீதிமன்றங்கள் அங்குக் குற்றவியல், சிவில் சட்டங்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரணை செய்யும் போது மக்கள் ஜனநாயக சர்வாதிகாரத்தைப் பலப்படுத்தும் வகையில் அதை நடத்த வேண்டும்; புதிய ஜனநாயகச் சமூகப் பிரிவுகளை நிலைநிறுத்த வேண்டும்; மக்களுடைய புரட்சியின் விளைவாக ஏற்பட்ட பயன்களைப் பாதுகாக்க வேண்டும்.

உண்மையைப் போன்று, நீதி பற்றிய கொள்கை (Concept of Justice) சீனக் கம்யூனிஸ்ட்டுக் கட்சியினுடைய குறிக்கோள்களை

[1]V. Korpinsky. The Social and State Structure of the U.S.S.R. P. 133.

[2]H. Finer, The major Governments, of Europe, P. 649

[3]John N. Hazard. The Soviet system of Government P. 193.

அடைய உதவி செய்கின்றபோது தவிர இதர சமயங்களில் அர்த்த மற்றதாகும். சட்டங்களும், நீதிமன்றங்களும், கம்யூனிஸ்ட்டுக் கட்சியினுல் மக்களுடைய நன்மைகள் என்று குறிப்பிடப்பட்டுள்ள வைகளை அடைய உதவும் வகையில் அங்கு ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு சோவியத் யூனியனிலும், சீனுவிலும் நீதிமன்றம் வகுப்பு நீதியையும் அரசியல் சார்புடைய கொள்கைகளேயும் நிறைவேற்றும் கருவியாகப் பயன்படுகிறது. மேற் கூறப்பட்டவற்றிலிருந்து கம்யூனிச நாடுகளிலுள்ள சட்டம் நீதி பற்றிய கருத்துகளும் முறைகளும் இதர நாடுகளிலுள்ளவற்றினின்றும் மாறுபட்டவை யென்பது தெளிவாகும்.

# 7. நீதிப்புனராய்வு

**(ஆ) நீதிப்புனராய்வு என்றால் என்ன ? :** 'அரசாங்கத்தின் பிரிவுகளான நிர்வாகத்துறை, சட்டத்துறை ஆகியவற்றின் நடவடிக்கைகள் அரசியலமைப்பின் விதிகளுக்கு மாறுபட்டிருக்குமானாலோ, அவற்றோடு மோதும் தன்மையனவாக இருக்குமானாலோ அவைகள் செல்லத் தகாதனவென்று அறிவிப்பதற்கு நீதிமன்றங்களுக்குத் தரப்படும் அதிகாரமாகும். அது சில சமயங்களில் நீதி மறுப்பாணை (**Judicial Veto**) எனப்படுகிறது. ஏனெனில் நீதிமன்றங்களுக்கு அவ்வாறு 'இல்லை'யென்று மறுக்கும் அதிகாரம் இருப்பதாலாகும். இதையே வேறுவிதமாகச் சற்று மாற்றிக் கூற வேண்டுமானால் அது நீதித் துறைக்குள்ள உச்ச அதிகாரமெனப் பொருள்படும். பின்னால் சொல்லப்பட்டதானது, ஆங்கிலப் பாராளுமன்றத்தினுடைய அதிகாரத்திற்கு நிகரானதோர் அதிகாரம் நீதிமன்றங்களுக்கிருக்கிறதென்னும் எண்ணம் ஏற்படக் கூடிய வகையில் அமைந்துள்ளது. ஆனால் இவ் வெண்ணம் சரியான தன்று. ஏனெனில் நீதிப்புனராய்வு என்பது எதிர்மறை அதிகாரமே (**Negative Power**) யாகும். நீதி மன்றங்கள் சட்டங்கள் இயற்றவோ, வரிகள் விதித்து வசூல் செய்யவோ, இராணுவத்தையமைக்கவோ முடியாது'[1] எளிமையாகச் சொல்ல வேண்டுமானால், சட்டங்களும் செய்யப்படும் காரியங்களும் அரசியலமைப்புச்சட்டப்படி சரிதானா என்று பரிசீலனை செய்யும் முறையே நீதிப்புனராய்வு என்பதாகும். பர்த் என்பவர் 'மேல் மட்டத்தில் இறுதியாகவுள்ள நீதிமன்றம் பிறிதோர் அரசாங்கச் செயலில் அதன் எல்லைக்குள் செய்யும் காரியங்களை அரசியலமைப்புச் சட்ட ஆதார அடிப்படைகளில் செயல்படுத்த முடியாதவாறு செய்வதற்குள்ள அதிகாரமாகும் அது' என்று கூறுகிறார்.[2]

நீதிப்புனராய்வு முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஏற்பட்டு, பிறகு இதர, குறிப்பாகக் கூட்டாட்சி அரசியலமைப்புகளுள்ள

[1] **R.W.** Brewster, Government in Modern Society P. 63.
[2] **L. P. Berth, The Constitution and the Supreme Court P. 16.**

நாடுகளிலும் பரவி, பின்பற்றப்பட்டு வருகிறது. நீதிப்புனராய்வு பின்பற்றப்படுவதும், பின்பற்றப்பட்டதுமான இருவகைப்பட்ட நாடுகளுக்கிடையேயுள்ள சிறப்பைப்பற்றி ஃபைனர் (Herman Finer) என்பவர் பின்வருமாறு கூறுகிறார்.

'இங்கிலாந்திலும் (ஓரளவுக்கு ஃபிரான்சிலும்) பாராளுமன்ற இறைமை ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் அமெரிக்காவிலோ எனில் அவ் விறைமைத் தன்மை அரசியலமைப்புக்குத் தரப்பட்டிருக்கிறது. அதாவது அரசியலமைப்புதான் எல்லாவற்றிற்கும் மேலானதாகக் கருதப்படுகிறது. இவ் வரசியலமைப்பின் உச்ச தன்மை நீதி மறு ஆய்வு அதிகாரத்தால் நிலைநாட்டப்படுகிறது. அமெரிக்கப் பாராளுமன்றமான காங்கிரஸ் அரசியலமைப்பு விதிக்கும் அதிகார எல்லைகளுக்கும், வரம்புகளுக்கும் உட்பட்டுச் செயலாற்ற வேண்டும். இவைகளுக்கு அப்பாற்பட்ட நிலையில் காங்கிரஸ் செயல்படுமானால் அதைத்தடுத்து அரசியலமைப்பைக் காப்பாற்ற வேண்டியது உச்ச நீதி மன்றத்தின் தலையாய பொறுப்பாகும்'.

இப்பொறுப்பை எவ்வாறு எந்த அடிப்படையில் அமெரிக்க உச்ச நீதிமன்றம் நிறைவேற்றுகிறதெனச் சிந்திக்கும் போது நீதிப்புனராய்வைப்பற்றி சட்டவியல், நீதித்துறை அறிஞர்கள் நமக்கு எடுத்துக்காட்டுகிறார்கள். நீதிப்புனராய்வைப் பற்றிய சிறந்த கருத்துகள் அமெரிக்க உச்ச நீதிமன்ற நீதிபதிகளால் அவ்வப்போது எடுத்துக்கூறப்பட்டிருக்கின்றன. அவைகளையும், இதர பல அம்சங்களையும் பற்றிக் கீழே விவரிக்கக் காணலாம்.

**(ஆ) அமெரிக்காவில் நீதிப்புனராய்வு :** அரசியலமைப்பின் சட்டப்பண்பு, நீதிப்புனராய்வு முறையைத் தோற்றுவித்திருக்கிறது. சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையை நீதிமன்றங்கள் தாமாகவே எடுத்துக் கொண்டு தீர்மானிப்பது கிடையாது. அவற்றின் செல்லுபடியாகும் தன்மை பற்றி ஐயப்பாடுடையவர்கள் அவைகளை நீதிமன்றங்களின் பரிசீலனைக்கு எடுத்துச் செல்லும்போதுதான், நீதிமன்றங்கள் அவைகளை விசாரணைக்கு எடுத்துக்கொண்டு, அரசியலமைப்புச் சட்டபடி, தங்களுடைய தீர்ப்புகளை அளிக்கின்றன.

அமெரிக்க முறையில், அரசியலமைப்புச் சட்டம் எது என்பதை இறுதியாகத் தீர்மானிக்கும் அதிகாரம் நீதிபதிகளுக்குத்தான் இருக்கிறதே தவிர சட்டமன்ற உறுப்பினர்களுக்கன்று. ஆனால்

[1]H. Finer, Theory and Practice of Modern Government, p. 139.

இங்கிலாந்தில் இந்த அதிகாரம் பாராளுமன்றத்திற்குத் தானிருக்கிறது. பாராளுமன்றத்தின் விளக்கத்தை நீதிபதிகள் ஏற்றுக்கொள்ளவேண்டும். சட்ட நீதி முறைப்படி ஆங்கிலப் பாராளுமன்றம் சர்வ வல்லமை படைத்தது. அமெரிக்காவிலோ ஜனாதிபதியும், இராச்சியங்களிலுள்ள ஐம்பது கவர்னர்களும் நிர்வாக உத்தரவுகளைப் பிறப்பிப்பதன் மூலமாக அரசியலமைப்பை விளக்குகிறார்களெனினும், அவைகளை யெல்லாம் மாறுபட்ட விளக்கங்களைத் தருவதன் மூலமாக நீதி மன்றம் செல்லாதவைகளாக்கிவிட முடியும்.

இவ்வாறு, அரசியலமைப்பு, சட்டப்படி 'நீதிபதிகள் இதுதான் என்று கூறுகிறபடி இருக்கிறது'. இந்த நீதிபதிகளின் கூற்று அந்தச் சமயத்திற்கு மட்டும்தான். நீதி மன்றமே பிறகு அதன் முடிவுகளை மாற்றியமைக்கலாம். அல்லது, அரசியலமைப்புக்குத் திருத்தமொன்றைக் கொண்டு வந்து நிறைவேற்றுவதன் மூலமாக நீதிமன்றத்தின் முடிவை மக்கள் மாற்றிவிடலாம். அரசியலமைப்புக்குக் கொண்டுவரப்பட்ட பதினோராவது, பதினாறுவது மாற்றங்கள் இறுதியதிகாரம் மக்களுக்கு இருக்கிறதென்பதை எடுத்துக் காட்டுகின்றன.

நீதிப்புனராய்வுக்குச் சிறந்த வொரு முன் எடுத்துக்காட்டாக இருப்பது மார்பரிக்கும், மாடிசனுக்குமிடையே நடைபெற்ற பிரசித்திப்பெற்ற வழக்காகும். இவ்வழக்கில் 1789-ஆம் ஆண்டு கூட்டாட்சி நீதித்துறைச் சட்டத்தின் ஒரு பகுதி அரசியலமைப்புப்படி செல்லாததென்று நீதிமன்றம் அறிவித்தது. 1801-ஆம் ஆண்டு ஜனாதிபதி ஆடம்சு (President Adams) பதவியிலிருந்து விலகுவதற்கு முன்பாக அறுபது கூட்டாட்சிவாதிகளை (Federalists) புதிதாக அனுமதிக்கப்பட்ட நீதித்துறைப் பதவிகளுக்கு நியமனம் செய்தார். அவர்களில், கொலம்பியா மாவட்டத்திற்காக அமைதிகாண் நீதிபதியாக நியமிக்கப்பட்ட வில்லியம் மார்பரி (William Marbury) என்பவர் ஒருவர். மார்பரியினுடைய நியமனத்தை செனட் ஆமோதித்து, நியமனம் சம்பந்தப்பட்ட பத்திரங்களிலும் கையெழுதிடப்பட்டு, முத்திரைவைக்கப்பட்டு அவருக்கு அனுப்பப்படுவதற்குத் தயாராக இருந்தது. ஆனால், ஆடம்சுக்குப் பிறகு ஜனாதிபதியாக வந்த ஜெபர்சனுக்கு இராச்சிய செயலாளராக (secretary of state) இருந்த மாடிசன் (Madison) என்பவர், மார்பரிக்கும் மற்றவர்களுக்கும் நியமன உத்தரவுகளை அனுப்ப மறுத்து விட்டார். இதற்குச் கூட்டாட்சிக் கட்சியினர் நீதிமன்றங்களில் தங்களுடைய ஆதரவாளர்களையும் அனுதாபிகளையும் நியமித்து நீதிமன்றங்களைத் தங்களுடைய கோட்டை

களாக ஆக்க அவர்கள் கடைசி நேரத்தில் முயன்றார்கள் என்பதை மாடிசன் சுாரணமாகக் காட்டினார். இதையறிந்த மார்பரி, தனக்கு நியமன உத்தரவை மாடிசன் அனுப்ப வேண்டுமென்னும் ஆணையை உச்ச நீதிமன்றம் பிறப்பிக்க வேண்டுமென்று நேரிடை யாக அம்மன்றத்திடம் வழக்குத் தொடர்ந்தார். தலைமை நீதிபதி யாக இருந்த மார்ஷல் கூட்டாட்சிக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்ததால் மார்பரி உச்சநீதிமன்றத்திடம் நேரிடையாகவழக்குத் தொடர்ந்தது முறையானதும் சரியானதுமாகுமென்று அறிவித் தார். மூலஅதிகார எல்லையில் இத்தகைய ஆணைகளைப் (Writ of Mandamus) பிறப்பிக்க உச்ச நீதிமன்றத்திற்கு 1789-ஆம் ஆண்டின் கூட்டாட்சி நீதித்துறைச் சட்டம் அனுமதி வழங்குயிருந்தது. இவ்வாறு ஆட்சித்துறையைச் சாடிய பிறகு, வியக்கத்தகும் வகையில் அவர் நீதித்துறைச்சட்டமே அரசியலமைப்புக்கு முரண்பட்டதென்னும் கருத்தை வெளி யிட்டார். உச்சநீதிமன்றத்தின் முதல்நிலை மூல அதிகாரங்கள் அரசியலமைப்பிலேயே தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருப்பதால் அதிகாரங்களை விரிவாக்கக் காங்கிரசுக்கு அதிகாரம் கிடையா தென்றும், எனவே அச் சட்டத்தின் நீதிமன்றத்திற்கு ஆணைப் பிறப் பதற்கு (Writ of Mandamus) அதிகாரம் தரும் பகுதி அரசியல மைப்புப்படி செல்லாதென்றும் கூறி, நீதிமன்றத்திற்கு மார்பரியி னுடைய விண்ணப்பத்தைப் பரிசீலனை செய்ய அதிகாரமில்லை யென்று கருதியதன் பேரில் நீதிமன்றம் அவ் விண்ணப்பத்தைத் தள்ளுபடி செய்துவிட்டது.

இருப்பினும், மார்பரிக்கும் மாடிசனுக்குமான வழக்கில் அரசியலமைப்பை விளக்க முற்பட்ட தலைமை நீதிபதி மார்ஷல் உச்சநீதிமன்றத்திற்கு உச்ச அதிகாரம் கிடைக்குமாறு செய்ய முயற்சி செய்தாரெனச் சொல்வதற்கில்லை. நீதி மறு ஆய்வு பற்றிய அவருடைய வாதம் முற்றிலும் நியாயமானதாகும். அரசிய லமைப்பு நாட்டின் உச்சசட்டமாகுமானால், சட்டப்படி சச்சரவு களைத் தீர்த்து வைப்பது நீதிமன்றத்தின் பணியாகுமானால், சாதாரணச் சட்டத்திற்கும் அரசியலமைப்புச் சட்டத்திற்கு மிடையே மோதல் ஏற்படும்போது, அதை அரசியலமைப்புச் சட்டத்திற்குச் சாதகமாக முடிவு செய்ய வேண்டியது நீதி மன்றத் தின் கடமையாகும். மார்ஷலினுடைய, அரசியலமைப்புச் சட்டத் திற்கு மாறுபட்ட சாதாரணச் சட்டமெதுவும் செல்லாதது என்னும் கருத்து எழுதப்பட்ட அரசியலமைப்புகளில் காணப்படும் இன்றியமையாத கொள்கையாகும்.

மார்ஷலின் இக் கருத்து அவருக்குச் சொந்தமானதன்று, அது (The Federalist) கூட்டாட்சியில் வெளியிடப்பட்ட ஹாமில்டனின்

(Hamilton) கருத்துகளுக்கு ஏற்புடையதாகும். அரசியலமைப்பை இயற்றியவர்கள் நீதிமறு ஆய்வதிகாரத்தைத் தெள்ளத் தெளிவாக அரசியலமைப்பில் எடுத்தெழுதா விட்டாலும், அத்தகையை அதிகாரம் நீதித்துறைக்கு இருக்கவேண்டுமெனக் கருதினுர்கள் எனத் தோன்றுகிறது. ஆங்கிலேயர்கள் ஆண்டுவந்த காலத்தில், குடியேற்ற சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களை, பிரித்தானிய பிரிவிகவுன்சில் மறுபரிசீலனை செய்யும் வழக்கத்தை ஏற்படுத்தியது. இதே போன்ற அதிகாரத்தை மிகச் சக்திவாய்ந்த முறையில் 1803க்கு முன்பு பத்து இராச்சியங்களைச் சேர்ந்த நீதிமன்றங்கள் செலுத்தி வந்திருக்கின்றன. கீழ்மட்டத்திலிருந்த கூட்டாட்சி நீதிமன்றங்கள் கூட இராச்சிய, கூட்டாட்சி சட்டங்களை மறு ஆய்வு செய்திருக்கின்றன. காங்கிரஸ் இயற்றிய சட்டமொன்று அரசியலமைப்புப்படி செல்லாததென்று உச்ச நீதிமன்றம் முதன் முறையாக அறிவித்தது, மார்பரிக்கும் மாடிசனுக்குமான வழக்கில் தான்.

நீதி மறு ஆய்வு அதிகாரம் மிக நிதானத்துடனும் அபூர்வமாகவும் பயன்படுத்தப்படுகிறது. மார்பரி வழக்குக்குப்பிறகு காங்கிரஸ் இயற்றிய எந்தச் சட்டத்தையும் மார்ஷல் அரசியலமைப்புக்குமாறுனதென அறிவிக்கவில்லை. இன்னும் சொல்லப் போனுல், உள்நாட்டுப்போர் ஏற்படும் வரை—அதாவது திரெட் ஸ்காட் வழக்கில்[1] முப்பதாண்டுக் காலத்திற்கு நடைமுறையிலிருந்த மிசௌரி சமரசம் (Missouri Compromise) செல்லுபடியாகாதென்று தலைமை நீதிபதி தானே (Taney) அறிவிக்கும் வரை —வேறு எந்தக் சட்டமும் செல்லத்தகாததென அறிவிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனுல், இராச்சிய சட்டங்களை உச்ச நீதிமன்றம் அடிக்கடி செல்லத்தகாதவையென அறிவித்திருக்கிறது. எனினும், இராச்சியங்கள் ஆண்டுதோறும் பல நூறு சட்டங்களை இயற்றுவதை மனதில் கொள்ளும்போது, நீதிமன்றங்களால் செல்லாதவையென்று அறிவிக்கும் சட்டங்களின் எண்ணிக்கை குறைவு என்பதும், அதனுல் நீதிமன்றங்கள் சட்டத்தை இயற்றுபவர்களை மீறி நடப்பதில்லை யெனக் கூறலாம். எது எவ்வாருயினும், நீதிமன்றங்களுக்குச் சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களை அவசியமாகும் போது செல்லாதவையென அறிவிக்கும் அதிகாரமிருக்கிறதென்பதை மறுக்க முடியாது. எனவே, சட்ட மியற்றுபவர்களும் சட்டங்கள் இயற்றும்போது அவைகளின் முக்கியத்தை விட, செல்லுபடியாகக் கூடியவையா வென்பதைச் சிந்திக்கவேண்டியவர்களாக இருக்கிருர்கள். இக் கருத்துகளையும், இதர பல கருத்துகளையும் சீர்தூக்கி ஆராய்கின்றபோது, நீதி

[1]. Dred Scott V. Sandford, 19 How. 393 (1857).

மன்றம் நீதி மறு ஆய்வில் இறங்கும் போது ஒவ்வொரு வழக்கிலும் அது அரசியலமைப்பால் உந்தப்பட்டுத் தீர்ப்பளிக்கிற தென்பது கட்டுக் கதையாகத் தோன்றும். இதிலிருந்து நீதி மன்றம் நீதி மறு ஆய்வில் ஈடுபடும் போது நடை முறையில் அது பொதுக் கொள் கையை (Public Policy) நிர்ணயிக்கிறது. அதாவது அரசியல் முடிவு களைச் செய்கிறதெனலாம்.

(இ) இதர நாடுகளில் நீதிப்புனராய்வு : இது காறும் விவரிக்கப்பட்டதிலிருந்து நீதிப்புனரார்ய்வு முறை அமெரிக்க அரசியலமைப்புச் சட்ட அடிப்படையில் ஏற்பட்ட தென்பது தெளிவர்கும். அங்கு நீதி மறு ஆய்வு அதனுடைய முழுப் பொருளில் இருக்கிறது. இந்திய அரசியலமைப்பும் கூட்டாட்சி அரசியலமைப்பாகும். இங்கு யூனியன் பாராளுமன்றமும், இரர்ச்சிய சட்ட மன்றங்களும் இயற்றும் எல்லாச் சட்டங்களையும் பரிசீலனை செய்யும் அதிகாரம் உச்ச நீதி மன்றத்திற்கும் இராச்சியங் களிலுள்ள உயர் நீதி மன்றங்களுக்கும் இருக்கிற தென்பது இது வரையிலும் நீதி மன்றங்கள் குறிப்பர்க உச்ச நீதி மன்றம் செயலாற்றி வந்திருப்பதிலிருந்தும், அரசாங்கத்தின் இதர அங்கங் களான நிர்வாக, சட்டத்துறைகள் அதை ஏற்றுக்கொண்டிருப்பத னுலும் அறியக் கிடக்கிறது.

இந்தியாவில், அரசியலமைப்புதான் மேலான சட்டம் என்பது அரசியலமைப்பின் எப் பகுதியிலும் தெளிவாகச் சொல்லப்பட வில்லை. ஏனெனில், அரசியலமைப்பைத் தயாரித்தவர்கள், கூட்டாட்சி, இராச்சிய அரசாங்கங்களின் எல்லா அங்கங்களும் அரசியலமைப்பால் ஏற்படுத்தப்பட்டு, அதனிடமிருந்து அதிகாரங் களைப் பெற்றன எனப்படுவதாலும், அதன் 368ஆம் விதியில் கூறப் பட்டிருக்கிறபடிதான் அதனைத் திருத்தவோ, மாற்றவோ முடியுமெனப்படுவதாலும், அரசியலமைப்பின் உச்ச தன்மை குறிப்பால் உணரவகையிருப்பதால் அவ் வுச்சதன்மையைப் பற்றி திட்டவட்டமாகக் கூறவில்லையெனக் கருதப்படுகிறது.

இவ்வாறே நீதிமன்றங்களுக்குச் சட்டங்கள் செல்லுபடியாகா தென்று அறிவிக்கும் அதிகாரத்தையும் அரசியலமைப்புத் தெளி வாக அளிக்கவில்லை. ஆனுல், இத்தகைய அதிகாரத்திற்கு அரசிய லமைப்பில் தெளிவாக ஏற்பாடு செய்யப் படாததனுல் சட்ட மொன்று செல்லாததென்று அறிவிப்பதற்கு நீதிமன்றங்களுக் குள்ள உரிமை மறுக்கப்படவில்லை. இது அரசியலமைப்புக்குள்ள உச்சத்தன்மையின் தவிர்க்கப்படமுடியாத மறுவிளைவாகும். மேலும், கூட்டாட்சி அரசாங்கமொன்று தெளிவாக வரையறை செய்யப்பட்ட துறைகளில் பணிபாற்றுவதாகும். அரசாங்

கத்தின் பலவேறு அங்கங்களின் அதிகார எல்லைகளை அரசியலமைப்புக் கட்டுப்பாடு செய்கிறது. ஏதேனுமோர் அங்கம் அதன் அதிகார எல்லையைக் கடந்து செயலாற்றுமானால், அச் செயல் செல்லத் தகாததாகிவிடும். அரசியலமைப்புக் கட்டுப்பாடுகள் மீறப்பட்டிருக்கின்றனவா அல்லவா என்பதை நீதிமன்றங்கள்தாம் தீர்மானிக்க வேண்டும்.

இந்திய அரசியலமைப்பு, சட்டமன்ற அதிகாரங்களுக்கு இருவகையான கட்டுப்பாடுகளை விதிக்கிறது: (1) சட்ட மியற்றுவதற்கானதகுதி (legisilative competence); (2) அரசியலமைப்பின் மூன்றும்பகுதியினால் அளிக்கப்பட்டுள்ள ஆதார உரிமைகள்.

**(1) சட்டமியற்லுவதற்கான தகுதி :** அரசியலமைப்பின் 251-ஆம் 254-ஆம் விதிகள் பாராளுமன்றத்தாலும் இராச்சியச்சட்ட மன்றங்களாலும் இயற்றப்படுகின்ற சட்டங்கள் ஒன்றுக் கொன்று முரண்பாடுடையவைகளாக இருப்பின் பாராளுமன்றச் சட்டங்களே செல்லுமென்றும் இராச்சியச் சட்டங்கள் செல்லா என்றும் தெளிவு படுத்துகின்றன. ஆனால் இராச்சியப் பட்டியலில் (State List) சேர்க்கப்பட்டுள்ள அதிகார இனங்களில் யூனியன் அரசாங்கம் இயற்றும் சட்டங்கள் செல்லுபடியாகமாட்டாவென்று அறிவிப்பதற்கு அரசியலமைப்பில் ஏற்பாடு எதுவும் செய்யப்படவில்லை. யூனியன் அரசாங்கமும் இராச்சிய அரசாங்கங்களும் எந்தெந்தத் துறைகளில் சட்டங்கள் இயற்றலாமென்பதை எடுத்துரைக்கும் பட்டியல்கள் இருப்பினும், யூனியன் அரசாங்கம் நாடு முழுவதற்குமோ, அதன் ஒரு பகுதிக்கு மட்டுமோ சட்டங்கள் இயற்றலாமென்பது அரசியலமைப்பு விதி 245 லிருந்து தெளிவாகிறது. ஆனால் யூனியன் அரசாங்கம் இவ் வதிகாரத்தை அரசியலமைப்பு விதிகளுக்கு உட்பட்டுதான் செலுத்தமுடியும். இராச்சியப் பட்டியலிலுள்ள இனமொன்றில் பாராளுமன்றம் நேரிடையாகச் சட்டமியற்றுமானால், அச் சட்டம் அரசியலமைப்பு விதிகளுக்கு முரண்பட்டிருக்குமானால் அச் சட்டம் செல்லாதென்று அறிவிக்கும் அதிகாரம் நீதி மன்றத்திற்குத் தரப்பட்டிருக்கிறது. இவ்வாறு அத்துமீறிச் செலுத்தப்படும் சட்டத்துறை அதிகாரங்களை நீதி மன்றங்கள்தாம் பரிசீலனை செய்து தீர்ப்பளிக்க முடியும். இது சம்பந்தமான விவரங்களுக்கு அரசியலமைப்பு 131—36 விதிகளைப் பார்க்கவும்.

**(2) ஆதார உரிமைகள் விதிக்கும் கட்டுப்பாடுகள் :** பாராளுமன்றம், இராச்சிய சட்டமன்றங்களின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தும் விதிகள் ஆதார உரிமைகள் பற்றிய அரசியலமைப்பின்

மூன்றும் பகுதியிலுள்ள ஏற்பாடுகளாகும். பதின்மூன்றும் விதி, ஆதார உரிமைகள் பற்றிய ஏற்பாடுகளை மீறி நடக்கும் எச் சட்டமும் அரசியலமைப்புப்படி செல்லாதென அறிவிக்கிறது இவ் விதி அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டதற்கு அளவுகடந்த எச்சரிக்கை காரணமாகும். இவ் விதி அரசியலமைப்பில் சேர்க்கப்படாமலிருந்திருப்பினும, ஆதார உரிமைகளை மீறும் எந்தச் சட்டத்தையும், செல்லாதென—அதாவது அது எந்த அளவிற்குக் கட்டுப்பாடுகளை மீறுகிறதோ அந்த அளவிற்கு—அறிவிப்பதற்கு நீதிமன்றங்களுக்கு அதிகாரமிருக்கிறது. இக் கருத்தைப் பிரதிபலிக்கும் வகையில் அமைந்திருக்கிறது தலைமை நீதிபதி கனியா (Chief Justice Kania) அவர்கள், கோபாலனுக்கும் சென்னை மாநிலத்திற்குமிடையிலான வழக்கில் அளித்த தீர்ப்பு.

அரசியலமைப்பால் வழங்கப்படும் ஆதார உரிமைகள் முழுமையானவையல்ல. அதாவது அவையும் அரசியலமைப்பினுல் விதிக்கப்படும் தடைகளுக்கும், நீதிமன்றத்தினுல் அளிக்கப்படும் தீர்ப்புகளால் விதிக்கப்படும் தடைகளுக்கும், உட்பட்டவைகளாகும். இருப்பினும், அடிப்படையாக இருப்பவை ஆதார உரிமைகளேயன்றி அவற்றிற்கு விதிக்கப்படும் கட்டுப்பாடுகளல்ல என்பதை அறிய வேண்டியதோடு, நீதிமன்றங்கள் இக் கருத்தினை உணர்ந்து அதற்குத் தகுந்தாற் போலத் தங்கள் கடமைகளைச் செய்ய வேண்டியவைகளாகு மென்பதைக் குறிப்பிடுவது அவசியமாகும்.

உச்ச நீதிமன்றம் செலுத்திவரும் நீதிமறு ஆய்வு அதிகாரம் நீதிபதி பி. கே. முகர்ஜியால் (Justice B. K. Mukerjee) மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'இந்திய அரசியலமைப்பு எழுதப்பட்டது. அது ஆங்கிலப் பாராளுமன்ற முறைக் கொள்கைகளைப் பின்பற்றினுலும் சட்டமியற்றுந் துறையில் சட்டமன்றத்தின் உச்ச நிலையை அது ஏற்றுக்கொள்ளாமல், அமெரிக்க முறையைப் பின்பற்றி அரசியலமைப்பை மேலானதாக்குகிறது. எனவே, அரசாங்கத்தின் நடவடிக்கைகள் அரசியலமைப்பு விதிகளுக்கு மாறுபட்டவைகளாக இருக்குமானுல் அல்லது அவ்வாறு கருதப்படுமானுல் அதனை முடிவு செய்யும் பொறுப்பு நீதிமன்றத்தைச் சேர்ந்ததாகும்' அதனுல் உயர்நீதி மன்றத்திற்குள்ள நீதிப்புனராய்வு அதிகாரம் பற்றி சர்ச்சை கிடையாது எனலாம்.

ஆனுல், இவ்வதிகாரம் அமெரிக்க உச்ச நீதி மற்றத்திற்குள்ளது போல மிகவிரிவாக இங்குக் [கிடையா தென்பதைக் குறிப்பிட

வேண்டியது அவசியமாகும். இதனை இந்திய உச்ச நீதி மன்றமும் அறிந்திருக்கிறது. அதாவது, இந்திய நீதிபதிகள், அமெரிக்க நீதிபதிகளைப் போல சட்டங்கள், நீதி ஆகியவை பற்றிய தங்களுடைய கருத்துகளை, சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையைப்பற்றிப் பரிசீலனை செய்து தீர்ப்பளிக்கும்போது கவனத்தில் கொண்டு தீர்ப்பளிக்க முடியாது. சட்டங்களின் தன்மை, சராம்சங்கள் எவையாயினும் அவை கொண்டுவரப்பட வேண்டிய அவசியத்தையோ, அவற்றிற்கு ஆதாரமான கொள்கைகளையோ நீதிமன்றங்கள் குறை சொல்லமுடியாது. இங்ஙனமே, இயற்றப்பட்ட சட்டமொன்று கொடுமை நிறைந்ததாக இருக்கிறதென்பதற்காகவோ, அது இயற்கை உரிமைகளை (natural rights) புறக்கணிக்கிறதென்பதற்காகவோ அத்தகைய உரிமைகள் அரசியலமைப்பால் உத்திரவாதம் அளிக்கப்பட்டிருந்தாலல்லது செல்லத் தகாதவை யென நீதி மன்றங்களால் அறிவிக்கப்பட முடியாது.

முடிவாக நீதி மன்றத்தின் அதிகாரங்கள் மேற் கூறப்பட்டவாறு ஒருசில அம்சங்களில் அமெரிக்க உச்ச நீதிமன்றத்தோடு ஒப்பிடும் போது கட்டுப்படுத்தப்பட்டிருந்தாலும், அது நீதி, மானிட உரிமைகளின் உறைவிடமாக இருக்கிறதென்பதில் ஐயமில்லை. இப் பெருமன்றம் அதிகாரம் செலுத்துவோர் அனைவரையும் நன்கு கவனித்து வருகிறது. இதுகாறும் அது ஆற்றிவந்திருக்கும் பணியை அறிந்த அனைவரும் அதனை மதித்து நடப்பதோடு அதனிடத்தில் தங்களுக்குள்ள அசையாத நம்பிக்கையையும் வெளிப்படுத்தத் தவறவில்லை.

ஆஸ்திரேலியாவில் அரசியலமைப்புச் சட்டத்தின் பொருள் பற்றிய சில சண்டைகளை பிரிவிகவுன்சிலின் நீதிக்குழு இறுதியாகத் தீர்த்துவைக்கிறது. ஆனால் ஆஸ்திரேலிய காமன்வெல்த்திற்கு (Federal Government) இராச்சிய அரசாங்கங்களின் அரசியலமைப்புகள் அளிக்கும் அதிகாரங்கள் பற்றிய சச்சரவுகளை ஆஸ்திரேலிய உயர்நீதிமன்றம்[1] அதாவது உச்ச நீதிமன்றம்தான் இறுதியாக முடிவு செய்யும் அதிகரம் உடையதாகும். உயர்நீதி மன்றம் விழையுமானால் அத்தகைய வழக்குகளில் நீதிக்குழுவுக்கு மேற்முறையீடு மூலமாக விண்ணப்பித்துக் கொள்ள அனுமதி வழங்கலாம். சுவிட்சர்லாந்து நாட்டில் கூட்டாட்சி சட்டமன்றம் (Federal Legislature) இயற்றும் சட்டங்களைச் செல்லுபடியாகாதென்று அறிவிப்பதற்கு அங்குள்ள கூட்டாட்சி நீதி மன்றத்திற்கு (Federal Tribunal) அதிகாரம் கிடையாது. ஆனால், அந் நீதி மன்றம், காண்டன்களில் (Contons) உள்ள சட்டமன்றங்கள்

[1] In Australia the Supreme court is designated as the High Court.

இயற்றும் சட்டங்கள் கூட்டாட்சி அரசியலமைப்பு விதிகளுக்கு மாறாகவோ, எதிர்க்கும் வகையிலோ இருக்குமானல் அவைகளைச் செல்லாதென்று அறிவிக்கும் அதிகாரம் உடையதாகும். அந் நீதி மன்றம் இவ் வதிகாரத்தை அவ்வப்போது தவருது செய்து வருகிறது. இவ்வாறு, கூட்டாட்சி நீதிமன்றத்தின் நீதிப் புனராய்வு அதிகாரம் வரம்புக்குட்பட்டதாகும். சோவியத் யூனியனின் அரசியலமைப்புச் சட்டம் கூட்டாட்சித் தன்மை வாய்ந்ததெனினும், அங்கு உச்ச நீதிமன்றத்திற்கு இவ் வதிகாரம் கிடையாது. இதற்குக் காரணம், அங்கு நிலவும் நீதித்துறைச் சட்டம் பற்றிய கருத்துகளேயாகும். அக் கருத்துகளும், நீதித்துறையமைப்பும் அங்கு மாறுபட்டுள்ள விதமும் இதற்கு முந்திய அதிகாரத்தில் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன என்பதை இங்கு வாசகர்களுக்கு நினைவூட்டுகிறோம்.

கானடாவின் அரசியலமைப்பு பிரித்தானிய பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டமாகும். இதனல் அவ் வரசியலமைப்புக்கான முறைப்படியான மாற்றமும் நீதித்துறைப் பரிசீலனையும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. கானடாவில் ஏற்படும் அரசியலமைப்புச் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் அனைத்தும் கூட்டாட்சி அரசாங்கத்துடனே, மாநில அரசாங்கங்களுடனே இணைக்கப்பட்டிராத பிரிவி கவுன்சிலின் நீதிக்குழுவினல் தீர்த்து வைக்கப்படுகின்றன. ஜப்பான் ஒற்றையரசாங்க முறைவகையைச் சேர்ந்ததாக இருந்தாலும் அங்கு இயற்றப்படும் சட்டங்கள், ஆணைகள், ஒழுங்குமுறை விதிகள், அரசாங்க நடவடிக்கைகள் ஆகியவற்றின் சட்டப்படியான தன்மையை நிர்ணயிக்க உச்ச நீதிமன்றத்திற்கு அந் நாட்டு அரசியலமைப்பு அதிகாரம் வழங்குகிறது. ஃபிரான்சு நாட்டில் சட்டங்களின் செல்லுபடியாகும் தன்மையை அரசியலமைப்புச் சட்டக்குழு (Constitutional Committee) நிர்ணயஞ் செய்கிறது. ஆனல், இம்முறை நீதிப் புனராய்வு முறையைச் சேர்ந்ததென்று சொல்வதற்கில்லை. இதர நாடுகளில் எங்கெங்கு நீதிப்புனராய்வு இருக்கிறதென்பதைப் பின்வரும் பகுதிகளில் காணலாம்.

முடிவாக, நீதிப்புனராய்வு அரசியல் நாகரிகம் மேலோங்கியிருக்கும் நாடுகளில் அரசியலமைப்பின் இன்றியமையாதவோர் அம்சமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறதெனலாம். இவ் வம்சம் பின்பற்றப்படுமிடங்களில் குடிமக்களுடைய உரிமைகள் பறிக்கப்படாமல் காப்பாற்றப்படுவதற்கான வாய்ப்புகளும், நிர்வாக, சட்டத்துறைகளின் அத்துமீறிய செயல்கள் தடுக்கப்படுவதற்கும் கண்டிக்கப்படுவதற்கான சாத்தியக்கூறுகள் அதிகமென்றும் துணிந்து கூறலாம்.

# 8. இங்கிலாந்து நாட்டு நீதிமுறையும் நீதிமன்றங்களும்

சமூக விரோதிகளாகவும், சமூகத்தின் நிலைமைக்குப் பங்கம் விளைவிப்பவர்களாகவும் கருதப்படும் சிறுபான்மையோரான குடிமக்களின் அடாத செயல்களினின்றும் சமூகத்தைச் சட்டங்கள் காப்பாற்றுகின்றன. மக்களிடையே அவ்வப்போது ஏற்படும் பூசல்களையும், பிணக்குகளையும் சமாதான வழிகளில் தீர்த்து வைத்து ஒற்றுமையை வளர்க்கவும் அவை உதவுகின்றன. இவ்விடத்தில்தான் குற்றவியல் சட்டத்திற்கும் சிவில் சட்டத்திற்கும் இடையேயுள்ள சிறப்பை உணரலாம். ஆங்கிலக் குற்றவியல் சட்டத்தின் பிரதான நோக்கம், சமூக நலனுக்கு ஆபத்து என்று கருதப்படும் செயல்களைச் செய்பவர்களுக்குத் தண்டனை விதிப்பதன் வாயிலாக சமூகத்தைக் காப்பதாகும். குற்ற விசாரணையும், தண்டனையும் குற்றம் செய்ய விரும்புவோர்களை அவ்வாறு செய்யாமல் தடுக்கும் எச்சரிக்கைகளாகும். எனவேதான் அரசே குற்றம் செய்பவர்களைத் தடுப்பதற்குத் தேவையான நடவடிக்கைகளைத் தன் முயற்சியில் எடுத்துக் கொள்கிறது. குற்றம் செய்பவர்களைத் தடுப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்போது அவர்கள் முகாந்திரமில்லாமல் தண்டிக்கப்படாமலிருப்பதற்குத் தேவையான அனுகூலம் அவர்களுக்குக் கிட்டுமாறு பார்த்துக் கொள்கிறது, ஆங்கிலக் குற்றவியல் சட்டம். குற்றம் நிரூபிக்கப்படும் வரை குற்றம் செய்தவர்கள் குற்ற மற்றவர்களாக அதாவது அப்பாவிகளாகக் கருதப்பட்டு, குற்றம் ஐயத்திற்கு இடமில்லாமல் நிரூபிக்கப்பட வேண்டுமென்பது குற்றவியல் சட்டத்தின் முக்கிய அம்சமாகும். ஆனால், ஆங்கில சிவில் சட்டத்தின் குறிக்கோள் தனிப்பட்டவர்களுக்கிடையிலோ, நிலையங்களுக்கிடையிலோ ஏற்படும் தகராறுகளைத் தீர்த்து வைத்துச் சமூக ஒற்றுமையை ஏற்படுத்துவதாகும். இத் துறையில்

எடுத்துக் கொள்ளப்படவேண்டிய துவக்க முயற்சி தனிப் பட்டவர்களை அல்லது நிலையங்களைச் சார்ந்ததாகும். சிவில் விசாரணையின் போது, கட்சிக்காரர்கள் சாதாரணமாக ஒரே மாதிரியான நிலையில் வைக்கப்படுகிறார்கள். ஏனெனில் அப் போது தான் சாட்சியங்களின் சமநிலை அடிப்படையில் பட்சபாத மற்றதொரு முடிவுக்கு வருவது சாத்தியமாகும். ஆங்கில நீதிமுறை இப்பாகுபாட்டை ஏற்றுக் கொள்வதால் நீதிமன்றங் களும் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன.

## (அ) சிவில் நீதிமன்றங்கள்

*(i)* **கவுண்டி நீதிமன்றங்கள் (County Courts):** கவுண்டி நீதி மன்றங்கள் *1846*-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கவுண்டி நீதிமன்றச் சட்ட (County Court Act of *1846*) அடிப்படையில் ஏற்படுத்தப் பட்டன. இந்த நீதிமன்றங்களின் அதிகார எல்லைகளுக்கும் நிர்வாக சௌகரியத்தை முன்னிட்டுப் பிரிக்கப்பட்டுள்ள கவுண்டி களின் எல்லைகளுக்கும் தொடர்பு கிடையாது. அங்கு இப்போது *400* கவுண்டி நீதிமன்றங்கள் இருக்கின்றன. அவைகள் மண்டலங் களாக அமைக்கப்பட்டிருப்பதால், ஒரே நீதிபதி பல நீதிமன்றங் களோடு தொடர்புடையவராக இருக்கமுடிகிறது. கவுண்டி நீதி மன்ற நீதிபதிக்கு உதவியாக அந் நீதிமன்ற பதிவாளரும் அவ் வலுவலகத்திற்குப் பொறுப்பாகவும், சிறு வழக்குகளை விசாரிப்பவ ராகவுமிருக்கும் வழக்குரைஞர் ஒருவரும் இருக்கிறார்கள். வழக்க மாக நீதிபதியும், பதிவாளரும் தனியாக அமர்கின்றார்களெனினும் மிக அபூர்வமான சமயங்களில் சான்று நடுவரொருவரும் அவர் களுக்கு உதவியாக இருப்பார்.

நீதிமன்றம் எப் பகுதியில் அமைந்திருக்கிறதோ அப் பகுதியில் எழும் விவகாரங்களை விசாரணை செய்வதற்குத்தான் அதற்கு அதிகாரமுண்டு. அந் நீதிமன்றம் சட்டத்தினால் ஒதுக்கப்பட்ட விஷயங்களைத்தான் கவனிக்கலாம். தற்போது அதன் விஷயங்கள் பலவற்றை உள்ளடக்கியவைகளாகும். சட்டங்களால் எங்குக் குறிப்பிட்ட வழக்குகள் ஒதுக்கப்படுகின்றனவோ, அங்குக் குறிப் பிட்ட தொகை வரை உள்ள வழங்குகளைத்தான் நீதிமன்றங்கள் அனுமதிக்க முடியும். கவுண்டி நீதிமன்றத்திற்கு வரும் வழக்கு களெல்லாம் சாதாரண சிறு வழக்குகளாகும். ஆனால் அத்தகைய வழக்குகள்தான் நாடு முழுவதும் எண்ணிக்கையில் அதிகமானவை களாகும். எனவே, கவுண்டி நீதிமன்றங்கள் பிரசித்தி பெற்றவை களாகும். அல்லாமலும் அங்கு ஆகும் செலவு இதர உயர்மட்டங் களிலுள்ள நீதிமன்றங்களில் ஆகும் செலவைவிடக் குறைவாக

இருப்பதோடு, வழக்குகளும் துரிதமாகப் பைசல் செய்யப்படுகின்றன.

பொது அதிகார எல்லைக்குள் வரும் மிக முக்கியமான அம்சங்கள் பின் வருமாறு :

(1) திருமணம் நீங்கலான ஒப்பந்தங்களில் வாக்குறுதி மீறப்படுவதால் எழும் நடவடிக்கைகள். இந் நடவடிக்கைகள் 400 பவுன்களுக்கு மிகாதவைகளைப் பற்றியதாக இருக்க வேண்டும்.

(2) அவதூறு, நெறிதவறி நடக்கும் செயல் நீங்கலான குற்றவியல் நடவடிக்கைகள். இவைகளுக்கும் 400 பவுன் எல்லை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

(3) அடமானங்கள், அறநிலையங்கள், கூட்டாளிகள் விலக்கப்படல் போன்ற விஷயங்கள். இவைகளுக்கான பண எல்லை 500 பவுன்களாகும்.

(4) 400 பவுன்களுக்கும் குறைவான மதிப்புடைய நிலப்பட்டா, நிலத்தை மீண்டும் வசப்படுத்தல் தொடர்பான நடவடிக்கைகள்.

(5) 1000 பவுன்களுக்கும் குறைவான மதிப்புடைய உயில்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள்.

(6) குழந்தைகளைத் தத்தெடுத்தல்.

(7) இலண்டனுக்கு வெளியேயுள்ள சில கவுண்டி நீதிமன்றங்கள் திவால் நிலைமை பற்றி விசாரிக்கக் கட்டுப்பாட்டிற்குட்பட்ட அதிகாரம் பெற்றிருக்கின்றன.

(8) 10,000 அல்லது அதற்குக் குறைவான பவுன்களுக்குச் செலுத்தப்பட்ட பங்குகளையுடைய கம்பெனிகளை முடிவுக்குக் கொண்டுவரவும் மேற்கூறப்பட்ட நீதிமன்றங்களுக்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது.

(9) சமூகச் சட்ட அடிப்படையில் ஏற்படும் சிறுசிறு வழக்குகள் பற்றிய கடமைகள்.

(10) உயர் நீதிமன்றத்தால் அனுப்பப்படும் குறிப்பிட்ட சில வழக்குகள்.

**(ii) உயர் நீதிமன்றம் (High court of justice):** உயர்நீதிமன்றம் 1873-75-ஆம் ஆண்டு நீதி மன்ற சட்டங்களின்

(Judicature Acts of 1873-75) விளைவாக ஏற்பட்டதாகும். அது மூன்று பிரிவுகளுடையதாகும். ஒவ்வொன்றும் அதனதன் அதிகாரவெல்லைக்குட்பட்ட எந்த வழக்கையும் விசாரணை செய்ய லாம். நடைமுறையில் அப் பிரிவுகளெல்லாம் பின்வரும் துறை களைச் சிறப்பம்சங்களாகக் கொண்டிருக்கின்றன.

(1) அரசியார் மன்றப் பிரிவு (Queen's Bench Division): இந் நீதிமன்றப் பிரிவு பொதுவாக வேறு எந்தப் பிரிவுக்கும் வழங்கப்படாத துறைகள் சார்புடைய விஷயங்களைக் கவனிக் கிறது. குறிப்பாக அது குற்றங்கள், ஒப்பந்தங்கள் பற்றிய வழக்குகளை விசாரணை செய்யும். அது மேல் முறையீட்டு மன்ற முமாகும். கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்வதற்குத் தொடரப்படும் ரிட்மனுக்களை ஏற்று விடுதலை செய்ய உத்தரவிடும் அதிகாரம் இம் மன்றத்திற்குண்டு. இதனுல், நிர்வாகம் அத்து மீறி நடக்காமல் கட்டுப்படுத்தப்படுகிறது.

(2) ஆலோசகப் பிரிவு (Chancery Division): இப் பிரிவின் வேலை இலண்டன் மாநகரில் குவிக்கப்பட்டிருக்கிறது. இதனுடைய வேலை வழக்குச் சம்பந்தப்பட்டதன்று. ஆனுல், நீதித் தன்மை பற்றி எழும் சந்தேகங்களைத் தீர்த்து வைப்பதாகும். இம் மன்றத்தின் அதிகாரவெல்லை, அடமானங்கள், திவால் நிலைமை. அறச்சாலைகள் நிர்வாகம், இறந்துபோனவர்களின் நில உடை மைகள் நிர்வாகம், கம்பெனி விஷயங்கள், கூட்டாளிகள் பற்றிய விஷயங்கள் குறிப்பிட்ட ஒப்பந்தங்களை நிறைவேற்றுதல், குழந்தை களின் போஷகர்கள் வயதுக்கு வராதவர்களின் நிலப்பராமரிப்பு தொடர்பானதாகும்.

(3) இறப்புறுதி, திருமணரத்து, கடற்படை அலுவல்கள் பற்றிய பிரிவு (Probate, Divorce and Admiralty Division): இப் பிரிவினுல் நிர்வகிக்கப்படும் சட்டத்தின் பகுதிகள் பலவும், உரோமானிய சட்ட ஆதிக்கத்திற்குட்பட்டவைகளாகும் இப் பிரிவின் வேலை அதன் பெயரிலிருந்தே விளங்கும். முதலாவதாக, இம் மன்றம் இறப்புறுதி விஷயங்கள், சம்பந்தப்பட்ட குறிப்பாக, உயில்களின் செல்லுபடியாகுந்தன்மையைத் தீர்மானித்தலாகும். இரண்டாவதாக, அது விவாகரத்து பற்றிய விஷயங்களைக் கவனிக்கிறது இதில் சட்டமுறைப்படியான விவாகரத்து, ஏதோ சில காரணங்களுக்காகத் திருமணங்கள் செல்லாதென்று வெளி யிடப்படும் அறிக்கைகள் போன்றவைகள் அடங்கும். மூன்ரு வதாக கடலில் ஏற்படும் கப்பல்களின் மோதல்கள், அளிக்கப்பட வேண்டிய நட்ட ஈடுகள் முதலியன இதன் அதிகாரவெல்லைக்குட் பட்டவைகளாகும்.

(iii) மேல் முறையீட்டு நீதிமன்றம் (Court of Appeal)—சிவில் பிரிவு (Civil Division) : 1966-ஆம் ஆண்டு வரையிலும் மேல் முறையீட்டு நீதிமன்றம் சிவில் துறையில் மேல் முறையீடு மூலமாக வந்த வழக்குகளை மட்டும் கேட்டு வந்தது அவ் வாண்டில் கொண்டுவரப்பட்ட குற்றவியல் மேல் முறையீட்டுச் சட்டம் (The Criminal Appeal Act of 1966) குற்றவியல் மேல் முறையீட்டு நீதிமன்றத்தைக் கலைத்து மேல் முறையீட்டு நீதி மன்றத்திற்கு அதன் பணிகளை மாற்றி அதனை இரண்டு பிரிவு களாக அமைத்தது. அப் பிரிவில் ஒன்றுதான் மேல் முறையீட்டு நீதிமன்றம் (சிவில் பிரிவு) என்பது.

இம் மன்றத்தின் நீதிபதிகள் அனைவரும் அப்பீல் வழக்குகளைக் கேட்க ஒன்றாக அமர்வர். குறைந்த பட்ச எண்ணிக்கை நீதி பதிகள் இருக்க வேண்டுமென்பதற்காக உயர் நீதிபதி யொருவரை அம் மன்ற தலைமை நீதிபதி சில சமயங்களில் நியமிப்பார். இம் மன்றம் சட்டம் பற்றிய பிரச்சனைகளைக் கேட்கும். அப்பீல்கள். உயர்நீதிமன்றம், கவுண்டி நீதிமன்றம் ஆகியவற்றிலிருந்து சில வரையறைகளுக்குட்பட்டு வரும் பெரும்பாலான வழக்குகள் கீழ்மட்ட நீதிமன்றங்களில் நடைபெற்ற விசாரணைகளின் மறு விசாரணை பற்றியவையாக இருக்கும். சில நிபந்தனைகளுக்குட் பட்டுப் புது சாட்சியங்கள் அனுமதிக்கப்படும். அப்பீலில் இம் மன்றம் கீழ்மட்ட நீதிமன்றங்களால் வழங்கப்பட்ட முடிவுகளை மாற்றலாம் அல்லது தள்ளிவிடலாம்.

(iv) பிரபுக்கள் சபை (House of Lords) : பிரபுக்கள் சபையின் நீதிப்பணி மிகப்பழங்காலம் முதல் இருந்து வருவதாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையிலும் தனி ஏற்பாடுகள் இல்லாதிருந்தால் இச் சபையின் உறுப்பினர்கள் அனைவருமே அப்பீல் வழக்கு விசாரணையில் பங்கெடுத்துக் கொள்ளமுடியும். மேல் முறையீட்டு மன்றம் என்ற அளவில் இம்மன்றத்தின் உயர்வு மட்டமாக இருந்ததால் 1873-ல் பிரபுக்கள் சபைக்கு அப்பீல் செய்து கொள்ளும் உரிமை நீக்கப்பட்டது. எனினும் 1876-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட மேல் முறையீட்டு அதிகார எல்லைச் சட்டம் (The Appellate Jurisdiction of 1876) பிரபுக்கள் சபைக்கு மீண்டும் அந்த அதிகாரத்தை வழங்கியதோடு சாதாரண அல்லது மேல் முறையீட்டுப் பிரபுக்களை நியமிப்பதற்கு அனுமதி தந்தது. வழக்காறு அடிப்படையில் சட்டக் கல்வி பெறாத சாதாரண பிரபுக்கள் வழக்கு நடைமுறைகளில் பங்கெடுத்துக் கொள்வதி னின்றும் தடுக்கப்பட்டனர். மேலும், நீதி சம்பந்தப்பட்ட நடை முறைகளும் பிரபுக்கள் சபையின் சாதாரணக் கூட்ட நடை முறை

களினின்றும் வேறுபட்டவையென்றும் தெளிவாக்கப்பட்டது. 1948-ஆம் ஆண்டுமுதல் சட்டப் பிரபுக்கள் (Law Lords) சபையின் மேல் முறையீட்டுக் குழுவாக (Appellate Committee of the House) அமர்ந்து இதர கீழ்மட்ட நீதிமன்றங்களிலிருந்து மேல் முறையீட்டடிப்படையில் வரும் வழக்குகளை விசாரணை செய்து முடிவுகளை வழங்குகின்றனர். இக் குழுவின் கூட்டம் பிரபுக்கள் சபையின் முறைப்படியான கூட்டமொன்று நடைபெறாத போதும் நடைபெறலாம்.

இங்கிலாந்து, வேல்ஸ், வட அயர்லாந்து, ஸ்காட்லாந்து ஆகிய பிரிட்டனின் எல்லாப் பகுதிகளுக்கும் குற்றவியல் சட்டம், சிவில் சட்டம் சார்புடைய எல்லா வழக்குகளிலும் பிரபுக்கள் சபை தான் இறுதி மேல் முறையீட்டு நீதிமன்றமாகும். மேற்கூறப்பட்ட எல்லாப் பகுதிகளுக்கும் பிரதி நிதித்துவமிருக்கும் வகையில் அப் பகுதிகளைச் சேர்ந்த பிரபுக்கள் இம்மேல் முறையீட்டு நீதிமன்றத்தில் அங்கம் பெறுவார்கள். இம் மன்றத்தில் வழக்கு விசாரணை நடைபெறும்போது குறைந்தது மூன்று நீதிபதிகளாவது பங்கெடுத்துக் கொள்ளவேண்டும். ஆனால், நடைமுறையில் ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட நீதிபதிகள் அதன் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்கள். மேல் முறையீட்டு நீதிபதிகளோடுகூட, இதர மேல் மட்ட நீதிமன்றங்களில் பணியாற்றி ஓய்வு பெற்று ஆனால் பிரபுக்கள் சபையில் அங்கத்தினர்களாக இருப்பவர்களும் விருப்பப்படுவார்களானால் அதன் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளலாம். மேல்முறையீட்டு நீதிமன்றத்திலிருந்து (Court of Appeal) வரும் வழக்குகளை பிரபுக்கள் சபை ஏற்றுக் கொண்டு விசாரணை செய்கிறது. ஆனால் வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் பிரபுக்கள் சபைக்கு மேல் முறையீடு செய்து கொள்வதற்கு முன் மேல்முறையீட்டு நீதிமன்றத்திடமிருந்தோ, பிரபுக்கள் சபையிடமிருந்தோ அதற்கான அனுமதியை முன்கூட்டியே பெற வேண்டும்.

மேல்முறையீட்டிற்காக இரண்டு நீதி மன்றங்கள் அவசியந்தானா என்று யாரும் கேட்கலாம். இதற்குக் காரணம் எல்லா வழக்குகளுமே பிரபுக்கள் சபைக்கு எடுத்துச் சொல்லப்பட முடியாது. மிகப் பெரும்பாலான வழக்குகள் மேல் முறையீட்டு நீதிமன்றத்திலேயே முடிந்து விடுகின்றன. அல்லாமலும் பிரபுக்கள் சபைக்கு மேல்முறையீடு செய்வதற்கான முறை கடினமானதாக இருக்கிறது. வழக்கு முடிவதற்கு நீண்ட காலமாவதோடு செலவும் அதிகமாகிறது. மேலும், பிரபுக்கள், சபையிலுள்ள நீதிபதிகள், மேல் முறையீட்டு நீதிமன்றத்திலுள்ள நீதிபதிகளைக்

காட்டிலும் சிறந்த சட்ட அறிவும், நீதித்துறைப் பயிற்சியும், திறமையுடையவர்களாக இருப்பார்கள் என்பதற்கான ஆதாரமும் கிடையாது. மேற்கூறப்பட்டவைகளை ஆராயும் போது மேல்முறையீட்டு நீதிமன்றம், ஒருசில வகைகளில் பிரபுக்கள் சபையைவிட, குறிப்பாக அரசியல் சார்பற்றதன்மையில் சிறந்ததாக இருக்கிறது. எனவே, இந் நீதிமன்றத்தின் தீர்ப்பை ஏற்றுக் கொள்பவர்களுக்கு அனுசரணையாகவும், பிரபுக்கள் சபைக்கு எடுத்துச் செல்லக்கூடிய வழக்குகளின் எண்ணிக்கையைக் குறைக்கும் நோக்கத்துடனும் அங்கு இரண்டு மேல் முறையீட்டு நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## (ஆ) குற்றவியல் நீதிமன்றங்கள்
## (Courts of Criminal Appeal)

*(i)* **மாஜிஸ்திரேட் நீதிமன்றம்:** குற்றவியல் நீதிமன்றங்களில் கீழ்மட்டத்தில் முதலாவதாக இருப்பவை மாஜிஸ்திரேட்டு நீதிமன்றங்களாகும். இந் நீதிமன்றங்கள், சிறு வழக்குகள் நீதிமன்றம் (Petty Sessions) என்றும், மாஜிஸ்திரேட்டு நீதிமன்றம் என்றும் இருவகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் வகை நீதிமன்றத்திற்குத் தலைவராக இருப்பவர் அமைதி காண் நீதிபதி என்பவர். அமைதிகாண் நீதிபதிகளாக இருப்பவர்களுக்கு அரசாங்கம் மாத ஊதியம் தருவதில்லை. அமைதிகாண் நீதிபதிகள் எந்தெந்தப் பகுதிகளுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறார்களோ அந்தந்தப் பகுதிகளில் அமைதியைப் பராமரிக்கிறார்கள். அவர்கள் சட்டக் கல்வியறிவுடையவர்களாக இருக்க வேண்டியதில்லை. இரண்டாவது வகையைச் சேர்ந்த நீதிமன்றத்திற்கு மாஜிஸ்திரேட்டு என்று சொல்லப்படும் நீதிபதி யொருவர் தலைவராக நியமிக்கப்படுவார். மாஜிஸ்திரேட்டாக வருபவர்கள் சட்டக் கல்வி பெற்றவர்களாக இருக்க வேண்டும். இவர்கள் அரசாங்க நீதித் துறையைச் சேர்ந்தவர்கள். எனவே, இவர்களுக்கு அரசாங்க நிதியிலிருந்து மாத ஊதியமும் இதர சலுகைகளும் தரப்படுகின்றன.

மாஜிஸ்திரேட்டு நீதிமன்றத்தின் பணிகள் பலவகைப்பட்டவை. அவைகளைப் பின்வருமாறு விவரிக்கலாம்.

(1) சிறு குற்றங்கள் செய்தவர்களை விசாரணை செய்து தண்டித்தல். சிறு குற்றங்கள் இருவகைப்படும். முதலாவது, நடைமுறையிலிருக்கும் சட்டங்களை மீறிச் செய்யப்படும் ஓட்டு

மொத்த குற்றங்கள் (Summary offences). இக் குற்றங்கள் சம்பந்தப்பட்டவரை விரிவான விசாரணை நடைபெறுது. இவ்வகை குற்றங்களில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகளுக்கு மாஜிஸ்திரேட்டுகள், அபராதமும் ஆறுமாதத்திற்கு அதிகப்படாத சிறைத் தண்டனையும் அளிக்கலாம். அவர்கள் மீது சுமத்தப்பட்ட குற்றம் நிரூபிக்கப்படுமானல், அவர்களுக்கு மேற் கூறப்பட்டதற்கும் அதிகமான தண்டனை அளிக்கப்பட வேண்டுமென்று மாஜிஸ்திரேட்டுகள் கருதினல் அவர்களைக் காலாண்டுப் பருவ நீதிமன்றங்களின் (Court of Quarter Sessions) விசாரணைக்கு அனுப்பி வைக்கலாம்.

(2) தண்டிக்கத்தகுந்த குற்றம் செய்த ஒருவரை ஆய்வு செய்யும் நீதிபதிகளாகவும் மாஜிஸ்திரேட்டுகள் இருக்கிறார்கள். அதாவது குற்றஞ்சாட்டுபவர் குற்றவாளி செய்த குற்றத்தை நிரூபிக்கிறார். ஆனல், குற்றஞ் சாட்டப்பட்டவருக்குத் தாம் குற்றவாளியல்லர் என்பதை நிரூபிக்கச் சந்தர்ப்பம் தரப்படுகிறது. இந்தப் பூர்வாங்க விசாரணை குற்றம் சாட்டுபவர் வழக்கை நடத்துவதற்குப் போதுமான ஆதாரங்களைப் பெற்றிருக்கிறாரா என்று அறிவதற்காகும். இதன் நோக்கம், உயர்மட்ட குற்றவியல் நீதிமன்றங்களின் காலத்தைச் சேமிப்பதாகும்.

(3) இளங்குற்றவாளிகள் நீதிமன்றத்தில் சிறப்புத் தகுதி பெற்ற நீதிபதிகள் அமர்ந்து வழக்குகளை அறிகிறார்கள். இந் நீதிமன்றங்கள் மாஜிஸ்திரேட்டுகளின் நீதிமன்றங்களினின்றும் மாறுபட்டவை. இளங்குற்றவாளிகள் பற்றிய வழக்கு விசாரணைகள் நீதிமன்ற அறையில் நடைபெறாமல், தனி இடங்களில் நடைபெறுகின்றன. இவ் விசாரணைகளின் போது மூன்று மாஜிஸ்திரேட்டுகள் இருப்பர். அவர்களில் ஒருவராவது ஆணாக அல்லது பெண்ணாக இருக்க வேண்டும். இவ்விசாரணைகளின் போது நீதிமன்றத்தில் பொதுமக்கள் பார்வையாளர்களாக அனுமதிக்கப்படுவதில்லை.

(4) அவர்கள், சிவில் வழக்குகளில் சிலவற்றையும் விசாரிக்கின்றார்கள். முறைப்படி பிறக்காத குழந்தைக்குத் தந்தையாக, அக் குழந்தையின் பிறப்புக்குக் காரணமாக இருந்தவர் தந்தையென அறிவிக்கப்படலாம். திருமணம் சம்பந்தப்பட்ட வழக்குகளில், சட்டப்படி ஆணுக்கும் பெண்ணுக்கும் விலக்குத் தரலாம். விலக்குத் தரப்பட்ட பெண்ணின் பராமரிப்புக்கு வகை செய்து உத்தரவிடலாம். குழந்தைகள் யார் பொறுப்பில் இருக்க வேண்டுமென்பதைத் தீர்மானிக்கலாம்.

மாஜிஸ்திரேட்டுகள் நீதிமன்றத்திலிருந்து வழக்குகள் காலாண்டுப்பருவ நீதிமன்றங்களுக்கு அப்பீல் செய்து கொள்ளப்

படலாம்: அல்லது பகுதி மன்றத்திற்கு (Divisional Court) செய்து கொள்ளப்படலாம் இங்கிருந்து வழக்கு பிரபுக்கள் சபைக்கு அப்பீல் வாயிலாகச் செல்லலாம். ஆனால் ஆப்பீல் நீதி மன்றங்கள், வழக்கில் சம்பந்தப்பட்ட சட்ட விளக்கப் பிரச்சினை களைத்தான் பரிசீலனை செய்கின்றன.

**(ii) காலாண்டுப் பருவ நீதிமன்றங்கள் (Courts of Quarter Sessions):** காலாண்டுப் பருவ நீதிமன்றத்தின் வகைக்குத் தகுந்தாற்போல அதன் அலுவலர்களும் மாறுபடுகிறார்கள். அது கவுண்டி காலாண்டுப் பருவ நீதிமன்றமானால் வழக்கு விசார ணையின் போது இரண்டு முதல் ஒன்பது அமைதிகாண் நீதிபதிகள் அதில் இருப்பார்கள். அது ஒரு நகர (Borough) காலாண்டுப் பருவ நீதிமன்றமாக இருக்குமானால் வழக்கு விசாரணையின் போது வழக்குரைஞரான பதிவாளர் ஒருவரும், அறங்கூறுபவரொரு வரும் அதனில் இருப்பார்கள். காலாண்டுப் பருவ நீதிமன்றம் மாஜிஸ்திரேட்டு நீதிமன்றங்களிலிருந்து வரும் வழக்குகளை விசாரிக்கும் மேல்முறையீட்டு நீதிமன்றமுமாகும் இந் நீதி மன்றத்தின் மிக முக்கியமான பணி, தண்டிக்கப்படத் தகுந்த குற்றங்கள் தொடர்புடைய வழக்குகளை விசாரணை செய்வதாகும். ஆனால் இந் நீதிமன்றம் எடுத்த எடுப்பில் முதலிலேயே மரண தண்டனையை அளிக்க முடியாது. இந் நீதிமன்றத்திலிருந்து வழக்குகள் அப்பீல் மூலமாக அப்பீல் நீதிமன்றத்திற்கு (குற்ற வியல்) எடுத்துச் செல்லப்படலாம்.

**(iii) ஆணையாளர் விசாரணை நீதிமன்றங்கள் (The Assizes):** நீதிமன்றங்கள் இப் பெயரைத் தாங்குவதற்கு முக்கியக் காரணம் தொடக்க கால நார்மானிய அரசர்கள், தங்களுடைய நலன்களைக் காக்க நாடுமுழுவதும் நடமாடும் நீதிபதிகளை (itinerant justices) அனுப்பி வரிவசூல் குற்றச் சார்புடைய வழக்குகளைக் கவனிக்கு மாறு செய்ததாகும். பழங்காலப் பழக்கம் மறைந்த பிறகும் இப் பெயருடைய நீதி மன்றங்கள் இன்றும் தொடர்ந்திருந்து வருகின்றன.

இந் நீதிமன்றங்களில் உயர் நீதிமன்ற நீதிபதிகள் அமர் கிறார்கள். ஆனால் அவர்கள் உயர் நீதிமன்ற நீதிபதிகளென்ற தன்மையில் அங்கு நீதிபதிகளல்லர். இதற்குக் காரணம் அவர்கள் அவ்வப்போது அரசால் நியமிக்கப்படும் வரி பற்றிய கழகங்களில் (Commissions) பங்கு பெறுவதாகும். இலண்டனுக்குத் தனியாக வோர் ஆணையாளர் விசாரணை நீதிமன்றமும், இங்கிலாந்து, வேல்ஸ் ஆகிய எல்லாப்பகுதிகளுக்கும் மொத்தமாக ஏழு சுழல் நீதிமன்றங்களும் இருக்கின்றன. இந் நீதிமன்றங்கள் தண்டனை

யளிக்கப்படத் தகுந்த எல்லாவிதமான குற்றங்களையும் விசாரணை செய்து தீர்ப்பளிக்கின்றன.

**(iv)** மேல்முறையீட்டு நீதிமன்றம் (குற்றவியல்)—**court of Appeal (criminal Division)** : *இந் நீதிமன்றத்தின் குற்றவியல் பிரிவு எவ்வாறு ஏற்பட்டதென்பது பிரிதோர் இடத்தில் விளக்கப்*




இங்கிலாந்து, வேல்ஸ் பகுதிகளில் நீதிமன்றங்கள் அமைப்பு முறையை விளக்கும் படம்.

பட்டிருக்கிறது. இந் நீதிமன்றத்தின் குற்றவியல் பிரிவு, காலாண்டுப் பருவ நீதி மன்றங்கள், ஆணையாளர் விசாரணை நீதிமன்றங்களிலிருந்து அப்பீல் மூலமாக வரும் வழக்குகளை விசாரணை செய்யும். இப்பிரிவுக்குத் தண்டனையைக் குறைக்கவோ, கூட்டவோ அதிகார

முண்டு. தண்டனையை அடியோடு அகற்றவும் இதற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. ஆனால் இதன் பரிசீலினைக்குவரும் பெரும் பாலான வழக்குகள் சட்டப் பிரச்சினை சம்பந்தப்பட்டவைகளே யாகும். இந் நீதிமன்றப் பிரிவிற்கு ஒரு நீதிபதி தலைவராகவும் அவருக்கு உதவியாக வேறு இரு நீதிபதிகளும் இருப்பார்கள்.

(v) **பிரபுக்கள் சபை :** சிவில் சட்டம் சம்பந்தப்பட்ட வழக்கு களில் எவ்வாறு பிரபுக்கள் சபை நாட்டின் இறுதி அப்பீல் நீதி மன்றமாக இருக்கிறதோ, அங்ஙனமே, குற்றவியல் வழக்குகளி லும், பிரபுக்கள்சபை தலைமை நீதிமன்றமாகத் திகழ்கிறது. இதர அம்சங்களில் சிவில் வழக்கு விசாரணையில் என்னென்ன முறைகள் பின்பற்றப்படுவதாக நாம் முன்னர் பார்த்தோமோ, அதே முறைகள் குற்றவியல் வழக்குகள் சம்பந்தமாகவும் பின்பற்றப் படுகின்றன.

# 9. இந்திய நீதித்துறை
## (Judiciary in India)

(அ) அரசின் பணிகளில் நீதி வழங்கும் பணியின் முக்கியத்துவம் பற்றியும், நீதிவழங்கும் பணியை மேற்கொள்ளும் நீதித்துறையின் முக்கியத்துவத்தையும் மற்றும் இயல்புகளையும் நூலின் முன்பகுதியில் நாம் கண்டோம். மேலும் உலக நாடுகளில் பின்பற்றப்படும் சட்டமுறைகளான சட்ட ஆட்சிமுறை (Rule of Law) மற்றும் ஆட்சித்துறைச் சட்ட முறை (Administrative Law) ஆகியவைகளின் விளக்கங்களும் நூலின் முன்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. இப் பகுதியில் இந்தியாவின் நீதித்துறையின் வரலாறு, இன்றைய அமைப்பு, பணிகள் மற்றும் அதன் 'நீதிப் புனராய்வு' அதிகாரம் பற்றி விளக்கம் ஆகியவை தரப்பட்டுள்ளன.

இந்தியா 21 மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சி அரசாக இயங்கி வருகிறது. 1950-ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்த நமது அரசியலமைப்பு இந்தியக் கூட்டாட்சியில் மத்திய-மாநில அரசாங்கங்களுக்கிடையிலான அதிகாரப் பங்கீட்டை (Division of Power) செய்துள்ளது. சட்டமியற்றும் அதிகாரங்கள், ஆட்சித்துறை அதிகாரங்கள் மற்றும் நீதிபற்றிய அதிகாரங்கள் மத்திய-மாநில அரசாங்கங்களுக்கிடையில் இந்திய அரசியலமைப்பினுல் பிரிக்கப்பட்டுள்ளன. இந்த அதிகாரப் பங்கீட்டின் காரணமாக மத்திய-மாநில அரசாங்கங்களுக்கிடையே ஏற்படக்கூடிய வழக்குகளை விசாரித்து, தீர்ப்பு வழங்க ஒரு தலைமை நீதிமன்றம் (Supreme Court) அமைக்கப்பட்டு இயங்கி வருகிறது. இந்தத் தலைமை நீதிமன்றத்தின் வரலாறு இங்கிலாந்து பாராளுமன்றம் 1935-ல் இயற்றிய இந்திய அரசாங்கச் சட்டம் அமல் செய்யப்பட்டது முதல் ஆரம்பம் ஆகிறது. இதனுல் இந்திய நீதித்துறை

யின் வரலாற்றை 1935-ஆம் ஆண்டு முதல் விளக்குவது பொருத்தமாக இருக்குமெனலாம்.

1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் அமலுக்கு வந்த 1937 ஆம் ஆண்டுக்கு முன்பு இந்தியாவின் மாநிலங்களில் நீதித்துறையின் தலைமைப் பீடத்தில் மாகாண உயர்நீதி மன்றங்கள் (Provincial High Courts) இருந்தன. இந்தநீதிமன்றங்களில் இருந்து வழக்குகளை இங்கிலாந்தில் பிரிவி கவுன்சில் (Privy Council) என்ற நீதிமன்றத்திற்கு அதிக செலவுகளுடன் மேல் முறையீட்டில் எடுத்துச் செல்லலாம். மாகாண உயர் நீதிமன்றத்திற்குக் கீழ் மாவட்ட நீதிபதிகள் நீதிமன்றங்கள் (District Judges Courts) இருந்தன. நிலவரி பற்றிய ரெவின்யூ வழக்குகள் மாவட்ட ஆட்சித் தலைவரின் கீழ் இருந்த நிலவருவாய்த்துறை அதிகாரிகளால் விசாரிக்கப்பட்டன. மாவட்ட ஆட்சித் தலைவரால் விசாரிக்கப்பட்ட வழக்குகள் மாகாண நிலவரி ஆணையரிடமும் (Revenue Commissioner) மாகாண நிலவரி மன்றத்திடமும் (Provincial Revenue Board) மேல் முறையீட்டில் எடுத்துச் செல்லப்படலாம். இம் முறையில் நிருவாக அதிகாரிகள் நீதித்துறை அதிகாரங்களைப் பயன்படுத்துவது கவனிக்கத்தக்கது. நிருவாக அதிகாரிகளே நீதிபதிகளாகச் செயல்படுவது தனிமனிதனின் உரிமைகளுக்கு ஆபத்து ஏற்படுத்தும் என்ற கொள்கை அடிப்படையில் நிருவாகத் துறையும் நீதித்துறையும் முழு அளவில்பிரிக்கப்பட வேண்டும் என இந்தியத் தலைவர்கள் கோரி வந்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. இக் கோரிக்கை 1950-ஆம் ஆண்டின் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தால் முழுவதுமாக நிறைவேற்றப்பட, தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதாவது அரசு நெறி செய்திகளில் (Directive Principles of State Policy) ஒன்றாக இக் கொள்கை குறிப்பிடப்பட்டிருக்கிறது. அரசின் பொதுப் பணித் துறைகளில் நீதித்துறையையும், ஆட்சித்துறையையும் பிரிக்க அரசு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என அரசியலமைப்பு விதி 50 குறிப்பிட்டுள்ளது.[1]

1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் இந்தியாவில் கூட்டாட்சி அரசாங்கமுறையை அறிமுகப் படுத்தத் தேவையான சட்டங்களைக் கொண்டிருந்தது. இச் சட்டம் கூட்டாட்சி முறைக்கு அடிப்படையான அதிகாரப் பங்கீட்டைச் செய்து, இந்தியாவிற்கென ஓர் கூட்டாட்சி நீதிமன்றத்தையும் (Federal Court)

[1] ART 50: Separation of Judiciary from executive: The State shall take steps to separate the Judiciary from the executive in the public services of the State.

தோற்றுவித்தது. இந்தியாவின் தற்போதைய தலைமை நீதின்றத்திற்கு இது முன்னோடியாக விளங்கியதால் இந் நீதிமன்றத்தின் அமைப்பு, அதிகாரங்களைப் பற்றி இங்குச் சுருக்கமாகக் குறிப்பிட வேண்டும்.

கூட்டாட்சி நீதிமன்றத்தில் (Federal Court) இந்தியாவின் தலைமை நீதிபதியும் (Chief Justice of India) மற்றும் இங்கிலாந்து மன்னரால் நியமனம் செய்யப்படும் எண்ணிக்கையில் நீதிபதிகளும் இருந்தனர். கூட்டாட்சிச் சட்டமன்றம் நீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கையை உயர்த்த மன்னரிடம் விண்ணப்பிக்கலாம். திரு. சர் மாரிஸ் குவர் (Sir Mawrice Gwyor) தலைமை நீதிபதியாகவும், மகமது சுலைமான் (Sir Mohammad Sulaiman) மற்றும் திரு. எம். ஆர். ஜெயகர் (M. R. Jayakar) ஆகியோர் நீதிபதிகளாகவும் முதன் முதலாகக் கூட்டாட்சி நீதி மன்றத்தில் பணியாற்றினர். கூட்டாட்சி நீதிமன்ற நீதிபதிகள் 60 வயதுவரை பதவி வகிக்க வகை செய்யப்பட்டிருந்தது. இங்கிலாந்து மன்னரின் பிரிவி கவுன்சிலின் நீதிக்குழு (Judical Committee of His Majesty's Privy Council) கூட்டாட்சி நீதிமன்ற நீதிபதி ஒருவரைத் தவறான நடந்தைக்காகப் பதவியை விட்டு விலக்கலாம் என்று சிபாரிசு செய்தால் இங்கிலாந்து மன்னர் அந்த நீதிபதியை பதவி நீக்கம் செய்வார். இச் சட்டம் நீதிபதிகளின் தகுதி, யோக்யதாம்சங்கள் பற்றியும் விரிவாகக் கூறியிருந்தது. இதன்படி உயர்நிலையில் நீதிபதியாக 5 ஆண்டுகள் அல்லது வழக்கறிஞராக 10 ஆண்டுகள் பணியாற்றி அனுபவம் பெற்றவரே நீதிபதியாக வரமுடியும். தலைமை நீதிபதி மாத ஊதியமாக 7,000 ரூபாயும், மற்ற நீதிபதிகள் 5,500 ரூபாயும் பெற்றனர்.

கூட்டாட்சி நீதிமன்றத்தின் அதிகாரங்களை முதல் வழக்கு அதிகார வரம்பு (Original Jurisdiction), மேல் முறையீட்டு அதிகார வரம்பு (Appellate Jurisdiction) எனச் சட்டம் விளக்கியிருந்தது.

முதல் வழக்கு அதிகார வரம்பின் கீழ் மத்திய அரசாங்கம் மாகாணங்கள் அல்லது கூட்டுச் சேர்ந்துள்ள மாநிலங்கள் இடையிலான வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தை நீதிமன்றம் பெற்றிருந்தது. ஆங்கிலேய இந்தியாவின் உயர்நீதிமன்றம் சான்றிதழ் வழங்கினால் அந் நீதிமன்றத்தின் தீர்ப்பின் மீது கூட்டாட்சி நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்துகொள்ள வழி செய்யப்பட்டிருந்தது.

தலைமை ஆளுநர் (Governor-General) பொது முக்கியத்துவம் பெற்ற எந்த விஷயம் பற்றியும் ஆலோசனை அளிக்கக் கூட்டாட்சி

நீதிமன்றத்தைக் கேட்டுக்கொண்டால், நீதிமன்றம் தகுந்த ஆலோசனையை அவருக்கு அளிக்கவேண்டும்.

இவ்வாறு பல அதிகாரங்களை இக் கூட்டாட்சி நீதிமன்றம் பெற்றிருந்தாலும் இந் நீதிமன்றம் இந்தியா முழுமைக்குமான தலைமை நீதிமன்றமாக அமைக்கப்படவில்லை என்பது கவனிக்கத் தக்கது. இந்தியாவின் ஒவ்வொரு மாகாணத்திலும் மாகாண உயர்நீதிமன்றமே (Provincial High Court) மிக உயர்ந்த நீதி மன்றமாக விளங்குகிறது.

தேவையான எண்ணிக்கையில் இந்தியக் கூட்டாட்சியில் இராச்சியங்கள் சேராத காரணத்தால் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் கூட்டாட்சிப் பகுதி அமலுக்கு வரவில்லை. பிறகு இரண்டாவது உலகப்போர் தோற்றுவித்த நெருக்கடியினால் கூட்டாட்சி அமைப்பை உருவாக்கும் முயற்சிகள் கைவிடப்பட்டன என்றே கூறலாம். இதன் காரணமாக இந்தியக் கூட்டாட்சி நீதிமன்றம் தோற்றுவிக்கப்பட்டுப் பணியாற்றி வந்தாலும், அது பெறவேண்டிய முக்கியத்துவத்தைப் பெறாமல் போய்விட்டது. மேலும் இந்த நீதிமன்றம் இந்திய நீதித்துறையில் உயர்நிலையில் உள்ள மேல் முறையீட்டு நீதிமன்றமாகவும் அமைய வில்லை. மாறாக, இந்தியர்கள் தங்கள் வழக்குகளை இங்கிலாந்தின் பிரிவி கவுன்சிலின் நீதிக்குழுவரை மேல் முறையீட்டில் எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட்டிருந்தனர். இந்த நீதிமன்றத்துக்குச் சட்டங்களுக்கு விளக்கம் கொடுக்கும் அதிகாரம் இருந்ததே தவிர, நீதிப்புனராய்வு அதிகாரம் இருக்கவில்லை.

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் நாள் இந்தியா சுதந்திரம் அடைந்தபோது பல இந்திய மாநிலங்கள் இந்தியா வுடன் இணைந்த காரணத்தாலும், இந்தியாவின் சுதந்திரச் சட்டத் தாலும் கூட்டாட்சி நீதிமன்றத்தின் அதிகாரங்கள் விரி வடைந்தன. இந்தியாவின் அரசியல் நிர்ணய சபை (The Constituent Assembly of India) சுதந்திர இந்தியாவின் தலைமை நீதி மன்றம் பற்றி ஆலோசனை கூற ஒரு தற்காலிகக் குழுவை நியமனம் செய்தது. இக் குழு தலைமை நீதிமன்றம் பற்றிய தனது பரிந் துரைகளைக் கீழ்க்கண்ட 6 தலைப்புகளில் அரசியல் நிர்ணய சபைக்கு அளித்தது.

1. தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்களும் அதிகார வரம்பும்.
2. தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனை, அதிகார வரம்பு.
3. நீதிமன்றத்தின் துணை அதிகாரங்கள்.

4. நீதிமன்றத்தின் அமைப்பும், பலமும்.
5. நீதிபதிகளின் தகுதிகளும், நியமன முறையும்.
6. நீதிபதிகளின் பதவிக்காலமும், பணிநிலேயும்.

இந்தப் பரிந்துரைகளின் அடிப்படையில் அரசியல் நிர்ணய சபையின் வரைவுக் குழு அரசியலமைப்பின் ஐந்தாவது பகுதியில் 4வது அதிகாரத்தைத் தயாரித்து, சபையின் அதிகாரத்துக்காகச் சபையிடம் வைத்தது. வரைவு அரசியலமைப்பில் இப் பகுதி 102 முதல் 123 வரையிலான அதிகாரங்களைக் கொண்டது. அரசியலமைப்பு நிர்ணய சபை நிறைவேற்றித் தற்போது அமலில் உள்ள அரசியலமைப்பில் நீதித்துறை பற்றிய ஏற்பாடுகள் அதன் ஐந்தாம் பாகத்தில் 124 முதல் 151 வரையிலான விதிகளில் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன.

**1950 ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் இந்தியத் தலைமை நீதிமன்றம் :**

**அமைப்பு :** புது டில்லியில் இருந்து செயல்படும் இந்தியத் தலைமை நீதிமன்றம் இந்தியாவின் தலைமை நீதிபதியையும், 14 இதர நீதிபதிகளையும் கொண்டது. தலைமை நீதிபதியையும் மற்ற நீதிபதிகளையும் இந்தியக் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கின்றார். குடியரசுத் தலைவர் இந்த நியமனங்களைச் செய்யும் போது தலைமை நீதிமன்ற, உயர் நீதிமன்ற நீதிபதிகளைத் தேவைக் கேற்பக் கலந்தாலோசிப்பர். இந்தியக்குடியரசுத் தலைவர் தலைமை நீதிமன்ற தலைமை நீதிபதி தவிர, மற்ற நீதிபதிகளை நியமனம் செய்யும்போது இந்தியத் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசனை செய்யவேண்டும் என விதி உள்ளது.

**நீதிபதிகளின் தகுதி :** தலைமை நீதிமன்ற நீதிபதியாக நியமனம் செய்யப்பட்ட ஒருவர் பெற்றிருக்க வேண்டிய தகுதி களில் முதலாவதாக அவர் ஓர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும் என அரசியலமைப்பு விதி குறிப்பிட்டுள்ளது. இரண்டாவதாக உயர் நீதிமன்ற நீதிபதியாக அவர் குறைந்தது 5 ஆண்டுக் காலம் பணியாற்றி இருக்க வேண்டும்; அல்லது உயர் நீதிமன்ற வழக்கறிஞராகக் குறைந்தது 10 ஆண்டுக் காலம் பணி யாற்றியிருக்க வேண்டும் அல்லது மிகச் சிறந்த சட்ட நிபுணராக இருக்க வேண்டும் எனவும் அரசியலமைப்பு, தகுதி நிர்ணயம் செய்துள்ளது.

**நீதிபதிகளின் பதவிக்காலம், ஊதியம் :** தலைமை நீதிமன்ற நீதிபதிகள் 65 வயதுவரை பதவியில் இருக்கலாம். 65 வயதுக்கு

முன்பாகப் பதவியில் இருந்து அவர்கள் விரும்பினுல் விலகிக் கொள்ளலாம். தலைமை நீதிமன்றத் தலைமை நீதிபதியின் மாதச் சம்பளம் 5,000 ரூபாய் எனவும், மற்ற நீதிபதிகளின் மாதச் சம்பளம் 4,000 ரூபாய் எனவும் அரசியலமைப்பு நிர்ணயம் செய்துள்ளது. நீதிபதிகளின் இச் சலுகைகள், படிகள், விடுமுறை உரிமைகள், ஒய்வு காலச் சம்பளம் ஆகியவைகளைப் பாராளு மன்றம் சட்டம் வாயிலாக முடிவு செய்யும் உரிமையைப் பெற்றுள்ளது. பதவியிலிருக்கும் எந்த ஒரு நீதிபதியின் சலுகைகளோ, ஒய்வுகால ஊதியமோ அவரைப் பாதிக்கும்படி மாற்றப்பட முடியாது. நீதிபதிகளின் சம்பளம், படிகள், ஒய்வுகால ஊதியம் ஆகியவை இந்தியத் திரட்டு நிதியிலிருந்து (Consolidated Fund of India) வழங்கப் பெறவேண்டும். இதனுல் இந்த இனங்கள் மீது பாராளுமன்றம் கட்டுப்பாடு செலுத்த முடியாமல் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும். நிதி நெருக்கடி காலத்தில் மட்டும் நீதிபதி களின் சம்பளமும், படிகளும் குடியரசுத் தலைவரின் உத்தரவால் குறைக்கப்படலாம் என்பது மட்டும் ஒரு விதிவிலக்கு.

**நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்கல் (Removal of Judges from Office) :** அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள பதவி விலக்கல் முறை தலைமை நீதிமன்ற நீதிபதிகளுக்குத் தகுந்த பாதுகாப்பு அளித்துள்ளது. நீதித்துறையின் சுதந்திரத்திற்கு இந்தப் பாது காப்பு மிகவும் அவசியமானது. நீதிபதி யொருவரைக் குடியரசுத் தலைவரோ, பிரதம மந்திரியோ தன்னிச்சையாகப் பதவியிலிருந்து விலக்க முடியாது. மாருக நிரூபிக்கப்பட்ட ஒழுங்கீனம், திறமை யின்மை ஆகியவைகளுக்காக நீதிபதி யொருவர் பதவியிலிருந்து விலக்கப்படலாம். ஒழுங்கீனத்தையும், திறமையின்மையையும் நிரூபிக்கும் அதிகாரம் பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் தரப்பட்டுள்ளது. பாராளுமன்றத்தின் இருசபைகளும் நீதிபதி யொருவர் மேற்கண்ட காரணங்களுக்காகப் பதவி விலக்கப் பட வேண்டும் என ஒவ்வொரு சபையிலும் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மை உறுப்பினர்களாலும், வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்களாலும் ஆதரிக்கப்பட்ட ஓர் தீர்மானம் வாயிலாகக் குடியரசுத் தலைவரைக் கேட்டுக் கொண்டால், குடியரசுத் தலைவர் அந்த நீதிபதியைப் பதவியில் இருந்து விலக்கும் உத்தரவு பிறப்பிப்பார். இவ்விதம் இந்தியாவில் இதுவரை எந்த ஒரு நீதிபதியும் பதவியிலிருந்து விலக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**தலைமை நீதிமன்றத்தின் சுதந்திரத்துக்கான இதர சில பாதுகாப்புகள் :** தலைமை நீதிமன்றம் சுதந்தரமாகச் செயல்படக்

கீழ்க்கண்ட வேறு சில பாதுகாப்புகளையும் இந்திய அரசிய லமைப்பு தந்துள்ளது.

1. தலைமை நீதிபதிகள் பதவியிலிருந்து விலகிய பின்னர் வேறு எந்த நீதிமன்றத்திலும், அல்லது அதிகாரியின் முன்பும் வழக்கறிஞராகப் பணியாற்ற முடியாது என அரசியலமைப்புத் தடை விதித்துள்ளது. இவ் விதி நீதிபதிகளைப் பிற்கால வேலை வாய்ப்பை மனதில் வைத்து அதிகாரங்களைத் தவருகப் பயன் படுத்துவதைத் தடுக்கிறது.

2. பாராளுமன்ற உறுப்பினர்கள் தலைமை நீதிமன்ற நீதிபதி யொருவரைப் பதவி விலகக் கோரும் தீர்மானம் தவிர மற்ற தீர்மானங்கள் பற்றி விவாதிக்கும் போது, நீதிபதிகளின் கடமை யைச் செய்யும் போது நடந்து கொண்ட முறையைப் பற்றி விவாதிக்கக் கூடாது. இத் தடையினுல் பாராளுமன்ற உறுப்பினர் களின் கடுமையான விமர்சனங்களில் இருந்து நீதிபதிகள் பாது காக்கப்படுகின்றனர்.

3. தலைமை நீதிமன்றத்தின் அலுவலர்களையும் வேலையாள் களையும் தலைமை நீதிபதியோ, அவரது அதிகாரம் பெற்றவரோ பதவியில் நியமனம் செய்வார். அவர்களின் வேலைநிபந்தனை களையும் நீதிமன்றமே தீர்மானிக்கிறது.

4. தலைமை நீதிமன்றத்தின் நிருவாகச் செலவுகள், அலுவலர் சம்பளங்கள், படிகள் ஓய்வுகாலச் சம்பளம் ஆகியவை இந்தியத் திரட்டு நிதியிலிருந்து அளிக்கப்படுகின்றன.

5. தலைமை நீதிமன்றத் தலைமை நீதிபதி நியமன விஷயத் திலும் ஓர் வழக்காறு ஏற்பட்டுள்ளது. அதன்படி தலைமை நீதி பதி பதவியில் காலி ஏற்படும்போது, பதவியிலுள்ள நீதிபதிகளில் எவர் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமான காலத்திற்குப் பதவியி லிருக்கிருரோ அவர் குடியரசுத் தலைவரால் தலைமை நீதிபதியாக நியமனம் செய்யப்படுவார். இத்தகைய முறையடிப்படையில் தலைமை நீதிபதி நியமிக்கப்படுவதால், நிர்வாகத்துறைக்கும், நீதித்துறைக்குமிடையே நல்லெண்ணமும் நல்லுறவும் நிலவு மென்று கருதப்படுகிறது.

ஆனுல், இவ் வழக்காறு அவசியமற்றதென்ற ஓர் எண்ணம், உச்ச நீதிமன்றம் இதுவரையிலும் செயலாற்றி வந்திருப்பதை உன்னிப்பாகக் கவனித்தவர்களிடம் வலுப்பெற்றிருந்தது. அவர்கள், 'தற்காலத் தலைமுறையைச் சேர்ந்த நீதிபதிகள், அரசியல் சட்டச் சிறப்புடைய எந்தவொரு முக்கியமான பிரச்சினை

யிலும் இறுதியான முடிவொன்றைத் தரத்தக்க திறம்படைத்தவர்களாக இல்லை. குறிப்பாகத் தற்கால நடப்பிற்கேற்ற சமூக பொருளாதார முறையொன்றை உருவாக்கிப் பின்பற்றுவதற்குத் தடையாக இந்திய நீதித்துறையமைப்பும், அதிலும் சிறப்பாக உச்ச நீதிமன்றமும், அதன் நீதிபதிகளும் இருக்கிறார்கள். தற்போதுள்ள நீதித்துறைமுறை பத்தாம் பசலித்தன்மையுடையது பிற்போக்கானது. இம்முறை மாறி நீதித்துறையும் சமூகத்தின் நலன்களை, நிர்வாகத்தைப்போலவும், பாராளுமன்றத்தைப் போலவும் பாதுகாத்து வளர்க்கும் நோக்கமுடையதாக ஆக்கப்பட வேண்டும்' என்று கருதினர். இதனை, எதிரொலிக்கும் வகையில் இந்தியக் குடியரசுத் தலைவர், 1973ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ஆம் நாளோடு தலைமை நீதிபதி பதவியிலிருந்த நீதிபதி எ. எம். சிக்கிரி (Chief Justice A. M. Sikri) ஓய்வு பெற்ற போது, அந்த இடத்திற்கு நீதிபதி எ. என். ராய் (Justice A. N. Ray) என்பவரை நியமித்தார். இவர், உச்ச நீதிமன்றத்தில் அப்போது நீதிபதிகளாக இருந்த திரு. ஜே. எம். ஷீலாட் (Justice J. M. Shelat), திரு. கே. எஸ். ஹெக்டே (Justice K. S. Hegde), திரு. என். குரோவர் (Justice A. N. Grover) என்ற நீதிபதிகளுக்கும் அடுத்தாற்போலப் பணிக்கால அடிப்படையில் நான்காவதாக இருந்தவர். இந் நியமனம் இதுவரையிலும் பின்பற்றப்பட்டுவந்த வழக்காற்றைப் புறக்கணித்துச் செய்யப்பட்டதென்பது தெளிவாகும்.

நீதிபதி திரு. எ. என். ராய் 1973-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ஆம் நாளன்று இந்தியத் தலைமை நீதிபதியாக பிரமாணம் எடுத்துக்கொண்டு பதவி ஏற்றார். இதைத் தொடர்ந்து, புறக்கணிக்கப்பட்ட மூன்று நீதிபதிகளும் அரசியலமைப்பின் 124(2) விதிப்படி தங்கள் பதவிகளை ராஜினாமா செய்தனர்.

தங்கள் பதவிகளை அவர்கள் துறக்காமல் இருந்திருப்பார்களானால் நீதிபதி ஷீலாட்டும், நீதிபதி ஹெக்டேயும், நீதிபதி குரோவரும் முறையே 1973ஆம் ஆண்டு ஜூலை மாதம் 16ஆம் தேதியும், 1974ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11ஆம் தேதியும், 1977ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்திலும் பதவியிலிருந்து ஓய்வு பெற்றிருப்பார்கள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவர்கள் மூவரும் முறையே, 1966ஆம் ஆண்டு மார்ச் மாதத்திலிருந்தும், 1967ஆம் ஆண்டு ஜூலை மாதத்திலிருந்தும், 1968-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்திலிருந்தும் உச்ச நீதிமன்ற நீதிபதிகளாகப் பணியாற்றி வந்தவர்கள்.

இந்த மூன்று நீதிபதிகளும் சட்டத்தில் ஆழ்ந்த அறிவும், சிறந்த திறமையும் உடையவர்கள் என்பதில் ஐயமில்லை. இவர்

களைப் புறக்கணித்து, நீதிபதி ராயைத் தலைமை நீதிபதியாக நியமித்தது சரியானது, சட்டப்படியானது என்று சட்ட அமைச்சர் திரு. கோகலே பாராளுமன்றத்தில் சாதித்தார். இதற்கு அவர், அரசியலமைப்பின் 124ஆம் விதியை ஆதாரமாகக் காட்டினார். மேலும், அவர் தலைமை நீதிபதி நியமனத்தில் நிர்வாகம் புதியதொரு முன்மாதிரியை ஏற்படுத்த விழைந்த தென்று கூறியதோடு இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, கானடா, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பின்பற்றப்படும் முறையே இங்கும் பின்பற்றப்பட்டதாகக் கூறினார். மேற்கூறப்பட்ட மூன்று நீதிபதிகள் புறக்கணிக்கப்பட்டதற்கும், நீதிபதி ராய் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டதற்கும் பல சமாதானங்களைக் கூறலாம். ஆனால், அரசியலமைப்பின் 124, 126 விதிகளின்படி குடியரசுத் தலைவர் அரசியலமைப்புக் குறிப்பிட்டுள்ள தகுதிகள் உடைய யாரை வேண்டுமானாலும் இந்தியத் தலைமை நீதிபதியாக நியமிக்க முழு அதிகாரம் பெற்றிருக்கிறாரென்பதை மறுக்க முடியாது.

பொதுவாக, இந்தியப் பிரதமர் திருமதி. இந்திராகாந்தியும், அவருக்கு ஆலோசகர்களாக இருப்பவர்களும் எத்தகைய கருத்து களையுடையவர்களாக இருக்கிறார்கள் என்பதை அறிகின்ற போது, ஆரம்பத்தில் குறிப்பிட்ட வழக்காறு கைவிடப்பட்டதற்கான காரணம் விளங்கும். அவர்கள். 'உச்சநீதிமன்றம், பாராளு மன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களை விளக்குவதையே தன் முக்கியப் பணியாகக் கொள்ளவேண்டுமேயல்லாது, மக்களாட்சி முறைப்படி தேர்ந்தெடுக்கப்படும் அரசாங்கத்தின் பொருளாதார குறிக்கோள்களிலும், அரசியல் கொள்கைகளிலுமுள்ள (principles) நன்மை தீமைகளை ஆராய்ந்து தீர்ப்பளிப்பதைக் கடமையாகக் கொள்ளக்கூடாது. அல்லாமலும், நீதிமறு ஆய்வுக்கு, தமக்குள்ள அதிகாரத்தை ஆதாரமாகக்கொண்டு அரசாங்கத்தினுடைய கொள்கைகளிலும் (policies), பாராளுமன்றத்தினுடைய அதி காரங்களிலும் குறுக்கிடக்கூடாது' என்று கருதுகிறார்கள்.

ஆனால் முது நிலைக்கொள்கை (Seniority principle) அடிப்படை யில் தலைமை நீதிபதி நியமிக்கப்படும் வழக்காறு கைவிடப்பட்ட தனால், நீதித்துறைக்குள்ள சுதந்திரம் குறைந்துவிடும் என்று கருதுவதற்கில்லை. அதற்குமாறாக அச் சுதந்திரம் மேலும் வலுப் படலாம். நீதித்துறையின் சுதந்திரம், நீதிபதிகள் நியமிக்கப்படும் முறைகளினால் மட்டுமல்லாமல், நீதிபதிகளாகப் பணியாற்றுபவர் களின் ஒழுக்கத்தினாலும், அறிவாற்றலினாலும் பாதுகாக்கப்பட முடியுமென்பதை அறிவதவசியமாகும்.

**தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்கள் (The Powers of the Supreme Court) :** தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்களைக் கீழ்க் கண்ட 3 தலைப்புகளின் கீழ்க் காணலாம்.

1. முதல் வழக்கு அதிகார வரம்பு (Original Jurisdiction)
2. மேல் முறையீட்டு அதிகார வரம்பு (Appellate Jurisdiction)
3. பலவகையான அதிகாரங்கள் (Miscellaneous Powers)

**முதல் வழக்கு அதிகார வரம்பு :** கீழே கண்ட குறிப்பிட்ட வகையான வழக்குகள் தலைமை நீதிமன்றத்தின் முதல் வழக்கு அதிகார எல்லையில் அடங்குகின்றன. இவ் வகையான வழக்குகளை முதன்முதலாக இந்த நீதி மன்றத்தில்தான் தாக்கல் செய்ய முடியும். இவ் வழக்குகளில் இந்த நீதி மன்றத்தின் தீர்ப்பே முடிவானது.

(அ) மத்திய அரசாங்கத்திற்கும், ஒரு மாநில அரசாங்கம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மாநில அரசாங்கங்கள் ஆகியவை களுக்கும் இடையே ஏற்படும் வழக்குகள்.

(ஆ) மத்திய அரசாங்கம், ஏதாவது மாநிலம் அல்லது மாநிலங்கள் ஒரு சார்பிலும், ஒரு மாநிலமோ, பல மாநிலங்களோ மற்றொரு சார்பிலும் இருந்து ஏற்படக் கூடிய வழக்குகள்.

(இ) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக் கிடையிலான வழக்குகள்.

இவ்வகையான வழக்குகளைத் தலைமை நீதிமன்றம் தவிர வேறு எந்த நீதிமன்றமும் எடுத்துக்கொண்டு விசாரிக்க முடி யாது. இவ் வழக்குகள் சட்டம் பற்றியோ, உண்மைகள் பற்றியோ இருக்கலாம். இவ் வழக்குகளின் அடிப்படை, வாதிகள் பெற்றிருக்கின்ற சட்டப்படியான உரிமைகளைப் பற்றியோ பெற்றிருக்க வேண்டிய சட்டப்படியான உரிமைகளைப் பற்றியோ இருக்க வேண்டும். இவ் வழக்குகளின் தன்மையை ஆராயும் போது இவை இந்தியக் கூட்டாட்சியில் மத்திய மாநில உறவு பற்றியன என அறிகிறோம். இது இந்த அதிகார வரம்பின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. இந்தியத் தலைமை நீதி மன்றம் தனது முதல் அதிகார வரம்பின்கீழ் இந்திய அரசியல் அமைப்பு மக்களுக்கு உறுதி செய்துள்ள அடிப்படை உரிமை களை அமல் செய்ய 'ஆளுரிமைக்காப்பு' எனும் ஆணை, 'செய்க' எனும் கட்டளை, தடை ஆணை, கோ வாரண்டோ, செர்ஷி

யோராரைக் கட்டளை ஆகியவைகளைப் பிறப்பிக்கும் அதிகாரத்தையும் பெற்றுள்ளது.

கீழ்க்கண்ட வகையான வழக்குகளை இந்திய அரசியலமைப்புத் தலைமை நீதிமன்றத்தின் முதல் வழக்கு அதிகார வரம்பிலிருந்து விலக்கி வைத்துள்ளது.

*(அ) அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன் செய்துகொண்ட ஆனால் நடைமுறைக்கு வந்த பின்பும் அமலில் உள்ள உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள் போன்றவை தொடர்பான வழக்குகள். (விதி 131)*

*(ஆ) மாநிலங்களுக்குச் சொந்தமான நதிநீர் பற்றி மாநிலங்களுக்குக்கிடையில் தோன்றும் வழக்குகள் (விதி 262:2)*

*(இ) நிதி ஆணைக்குழுவிடம்* (Finance Commission) *விடப்படக்கூடிய விவகாரங்கள் (விதி 280)*

*(ஈ) அரசியலமைப்பு அமல் செய்யப்படுமுன் இந்திய அரசாங்கமும்* (Government of the Dominion of India), *இந்திய சுதேச அரசர்களும்* (Rulers of Indian States) *செய்து கொண்ட உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள் தொடர்பான வழக்குகள் (விதி 363:1)*

**மேல்முறையீட்டு அதிகார வரம்பு** : *இந்தியாவில் தலைமை நீதிமன்றத்திற்கு அடுத்த கீழ் மட்டத்தில் மாநில உயர் நீதிமன்றங்கள் அமைந்துள்ளன. இந்திய நீதிமன்றங்களில் இருந்து சில குறிப்பிட்ட வகையான வழக்குகளைத் தீர்ப்பினால் பாதிக்கப்பட்டவர்கள் சில நடைமுறைகளுக்குட்பட்டுத் தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு* (**Appeal**) *செய்து கொள்ளலாம்.*

**குற்றவியல் வழக்குகள் (Criminal Cases)** : ஒரு குற்றவியல் வழக்கில் கீழ் நீதிமன்றம் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனை நிரபராதி என விடுதலை செய்து, அதே வழக்கை உயர்நீதிமன்றம் விசாரித்து அவனைக் குற்றவாளி எனக்கருதி மரண தண்டனை வழங்கியிருந்தால் தண்டனையைப் பெற்றவன் இந்தத் தீர்ப்பை எதிர்த்தும், அல்லது, ஓர் உயர் நீதிமன்றம் தனது அதிகாரத்துக்கு உட்பட்ட ஒரு கீழ்நீதிமன்றத்திலிருந்து ஒரு வழக்கைப் பெற்றுத் தானே விசாரித்து, குற்றம் சாட்டப்பட்டவனுக்கு மரண தண்டனை வழங்கினால் தண்டனையைப் பெற்றவன் இந்தத் தீர்ப்பை எதிர்த்தும், இந்தியத் தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்ளலாம்.

மேலும் உயர்நீதிமன்றம் ஒரு குற்றவியல்வழக்கைத் தலைமை நீதிமன்றத்தால் விசாரிக்கப்படத் தகுதி வாய்ந்தது எனச் சான்றிதழ் வாயிலாக அறிவிப்பினும் அவ் வழக்கை மேல் முறையீட்டில் தலைமை நீதிமன்றத்துக்கு எடுத்துச் செல்லலாம்.

**உரிமையியல் வழக்குகள் :** உரிமையியல் வழக்குகளில் கீழ்க் கண்ட தகுதிகளில் ஒன்று உள்ளது என உயர்நீதிமன்றம் சான்றிதழ் வழங்கிஞல் அவ் வழக்கைத் தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்ளலாம்.

(அ) வழக்கில் சம்பந்தப்பட்ட தொகை 20,000 ரூபாய்க்குக் குறையாததாக இருக்க வேண்டும்.

(ஆ) வழக்கின் தீர்ப்போ, உத்தரவோ, 20,000 ரூபாய் பெறுமானமுள்ள உடமைகள் பற்றியதாக இருக்க வேண்டும்.

(இ) தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்ளத் தகுதியான வழக்காக இருக்க வேண்டும்.

இவை தவிர இந்தியாவில் அமைந்துள்ள உயர்நீதிமன்றங் களில் வழங்கப்பட்ட உரிமை இயல் அல்லது குற்றவியல் அல்லது மற்றவகையான வழக்குகளின் தீர்ப்பை எதிர்த்து, தீர்ப்பை வழங்கும் உயர் நீதிமன்றம் குறிப்பிட்ட வழக்கை விசாரித்து, தீர்ப்பளிக்க அரசியலமைப்பு விளக்கம் தேவைப்படுகிறது, எனச் சான்றிதழ் வழங்கிஞல் தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்ளலாம். அதாவது வழக்கின் அடிப்படை, அரசிய லமைப்பு விதிகளின் கொள்கைகள், விளக்கங்களாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட வழக்கின் அடிப்படை அரசியலமைப்பு விளக்கமாக இருந்து, அவ் வழக்கைத் தலைமை நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்து கொள்ள உயர் நீதிமன்றம் சான்றிதழ் வழங்க மறுத்தால் அதற்கான சிறப்பு அனுமதியை (Special Leave to appeal) தலைமை நீதிமன்றமே வழங்கலாம்.

**பலவகையான அதிகாரங்கள் :** அரசியலமைப்பு விதி 129 இந்தியத் தலைமை நீதிமன்றத்தை ஒரு பதிவு செய்துகொள்ளும் நீதிமன்றம் (A Court of Record) என அறிவிக்கிறது. இதஞல் தலைமை நீதிமன்றத்தின் பதிவேடுகள் எங்கும் சாட்சியப் பதிவேடு களாகப் பயன் படுத்தப்படலாம்,

இந்த நீதிமன்றம் பதிவு செய்து கொள்ளும் நீதிமன்றமாக இருப்பதால், தன்னை அவமதிப்பவரைத் தண்டிக்கும் அதிகாரத் தையும் பெற்றுள்ளது.

தலைமை நீதிமன்றம் தான் வழங்கிய தீர்ப்புகளையும், பிறப்பித்த உத்தரவுகளையும் தானே மீண்டும் பரிசீலனை செய்யும் அதிகாரத்தைப் பெற்றுள்ளது.

இந்தியாவில் எந்த ஒரு நீதிமன்றம் அல்லது தனிப்பட்ட வழக்கு நீதிமன்றம் (Tribunal) வழங்கிய தீர்ப்பு, ஆணை, தண்டனை அல்லது உத்தரவை எதிர்த்து மேல் முறையீடு தன்னிடம் செய்து கொள்ளும் அனுமதியைத் தலைமை நீதிமன்றம் வழங்கலாம் (விதி 136)

இராணுவ நீதிமன்றங்கள் மற்றும் ட்ரிபூனல்கள் மட்டும் இதிலிருந்து விதிவிலக்கம் செய்யப்பட்டுள்ளன. இவ் விதி தலைமை நீதிமன்றத்தின் அதிகாரத்தை மிகவும் விரிவு படுத்துவதை நாம் மறுக்கமுடியாது.

தலைமை நீதிமன்றம் அளிக்கும் சட்ட விளக்கம் இந்தியாவில் உள்ள எல்லா நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும். இந்தியாவில் உள்ள எல்லா நிருவாக நீதித்துறை அதிகாரிகளும் தலைமை நீதிமன்றத்துக்குத் துணையாகப் பணியாற்றவேண்டும்.

இந்தியப் பாராளுமன்றம் தகுந்த சட்டம் வாயிலாக, கீழ்க் கண்டவை தொடர்பாக அதிகாரங்களைத் தலைமை நீதிமன்றத்துக்கு அளிக்கலாம்.

1. இந்திய அரசியலமைப்பின் ஏழாவது அட்டவணையில் உள்ள மத்தியப் பட்டியலில் (Union List) கண்ட ஏதாவதொரு பொருள்.

2. இந்திய அரசாங்கமும். ஏதாவது ஒரு மாநில அரசாங்கமும் ஓர் ஒப்பந்தம் மூலம்—எந்தப்பொருள்மீதும்.

3. அடிப்படை உரிமைகளை அமல் செய்யவேண்டியது தவிர, வேறு காரணங்களுக்காக ஆளுரிமைக்காப்பு ஆணை, செய்க எனும் கட்டளை, தடை ஆணை, கோ வாரண்டோ மற்றும் செர்ஷியோராரைக் கட்டளை ஆகியவைகளைப் பிறப்பிக்க.

4. தலைமை நீதிமன்றம் சிறப்பாகச் செயல்படத் தேவையான துணை அதிகாரங்கள்.

**ஆலோசனை கூறும் அதிகார வரம்பு :** இந்தியா பாராளுமன்ற அரசாங்க முறையைப் பின்பற்றுகிறது. இம் முறையின் கீழ், பாராளுமன்றம் சட்டங்களை நிறைவேற்றுகிறது. அச் சட்டங்களை ஆட்சித்துறை நிறைவேற்றுகிறது. அது மட்டுமல்லாமல் பாராளுமன்றம் நிறைவேற்ற வேண்டிய சட்டங்கள் குறித்தும் ஆட்சித்

துறை முடிவு செய்து, பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்க வேண்டியுள்ளது. இப் பணிகளைச் செய்யும்போது பல பிரச்சினைகளைத் தலைமை நீதிமன்றத்திடமிருந்து பெற நமது அரசியலமைப்பு வகை செய்துள்ளது.

அரசியலமைப்பு விதி 143 (1) ன்படி இந்தியாவின் தலைவர் எப்போதாகிலும் சட்டம் அல்லது உண்மை குறித்துப் பொதுமக்களுக்கு முக்கியமானதொரு விஷயம் பற்றிச் சிக்கல் ஒன்று எழுந்துள்ளது அல்லது எழுவதற்கான வாய்ப்பு உள்ளது எனக் கருதினால் அதுபற்றித் தலைமை நீதிமன்றத்தின் கருத்தைக் கேட்கும் அதிகாரம் பெற்றுள்ளார். தலைமை நீதிமன்றம் தகுந்த முறையில் விசாரணை நடத்தித் தனது கருத்தைத் தலைவருக்கு அறிவிக்கும்.

விதி 143 (2) ன்படி, இந்திய அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்குமுன் செய்யப்பட்ட உடன்படிக்கைகள் அல்லது ஒப்பந்தங்கள் குறித்து எழும் ஐயங்கள் பற்றித் தலைமை நீதிமன்றத்தின் கருத்தைக் கேட்கும் அதிகாரத்தை இந்தியத்தலைவர் பெற்றுள்ளார். தலைமை நீதிமன்றம் தகுந்த விசாரணை நடத்தித் தனது கருத்தைத் தலைவருக்கு அளிக்க வேண்டும்.

**நீதிப்புனராய்வு அதிகாரம் (power of Judicial Review):** அரசியலமைப்பு விதிகளோடு பொருந்தாத எதிராக உள்ள சட்டங்கள், நிர்வாக உத்தரவுகள் ஆகியவை 'அரசியலமைப்புக்குப் புறம்பானவை' எனவும், 'செல்லுபடியாகாது' எனவும், நீதிமன்றம் அறிவிக்கும் அதிகாரமே நீதிப்புனராய்வு அதிகாரம் என வழங்கப்படுகிறது. இந்தியாவில் தலைமை நீதிமன்றமும், உயர் நீதிமன்றங்களும் இந்த அதிகாரத்தைப் பெற்றுள்ளன. அடிப்படை உரிமைகளை அமல் செய்யவும், இந்திய அரசியலமைப்புச் சட்டங்கள் நாட்டில் அனைவராலும் பின்பற்றப்படவும் வேண்டித் தலைமை நீதிமன்றமும், உயர்நீதிமன்றங்களும் தகுந்த ஆணைகளை (writs) பிறப்பிக்கலாம். அது மட்டுமின்றி நாட்டின் சட்டமியற்றும் அமைப்புகள், நிர்வாகத்தின் செயல்கள், ஆணைகள், பொதுத்தன்மை வாய்ந்த அதிகார அமைப்புகளின் செயல்கள் அனைத்தையும் 'நீதிப்புனராய்வு' செய்யும் அதிகாரத்தையும் இந்த நீதிமன்றங்கள் பெற்றுள்ளன. இன்றைய நிலையில் இந்திய அரசியலமைப்பு மக்களுக்கு உறுதி செய்துள்ள அடிப்படை உரிமைகளை அவர்கள் நல்ல முறையில் அனுபவிக்க அடிப்படைக் காரணமே இந்த நீதிப்புனராய்வு அதிகாரம்தான் எனச் சொன்னால் அது மிகையாகாது.

**தலைமை நீதிமன்றத்தின் நடைமுறைகள் :** நீதிமன்றத்தின் எந்தத் தீர்ப்பும் அமருகின்ற நீதிபதிகளில் பெரும்பான்மை நீதிபதிகளின் தீர்ப்பாகவே இருக்கவேண்டும். பெரும்பான்மை தீர்ப்புக்கு மாறான கருத்தைக் கொண்ட நீதிபதிகள் தங்கள் தீர்ப்பைத் தனியாக வெளியிடலாம்.

நீதிமன்றம் அரசியலமைப்பு விதிகளின் விளக்கங்களை அடிப்படையாகக் கொண்ட வழக்குகளை விசாரிக்கும்போதும், இந்தியக் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்கும்போதும் குறைந்தபட்சம் 5 நீதிபதிகள் அமர்ந்து முடிவு செய்ய வேண்டும்.

நீதிமன்றத்தின் எந்தத் தீர்ப்பும், கருத்தும் திறந்த நீதிமன்றத்தில்தான் (Open Court) வெளியிடப்படவேண்டும்.

**(ஆ) உயர் நீதி மன்றங்கள் கீழ்மட்ட நீதிமன்றங்கள் :** நாட்டிலுள்ள மக்கள் அனைவருக்கும் நீதித் துறையின் நீதி வழங்கும் பணி அவசியமான தொன்றாக இருப்பதால் நீதித்துறை நாடு பூராவிலும் பணியாற்ற வேண்டியுள்ளது. இதியாவில் வசிக்கும் மக்கள் அனைவருக்கும் தாலூகா அளவிலேயே நீதித் துறையினர் பணி கிடைக்கும்படியாக நீதித்துறை கூர்கோபுரப்படி நிலை அமைப்பில் அமைக்கப்பட்டுள்ளது. கீழ்மட்ட நீதிமன்றங்கள் வழங்கும் தீர்ப்பு ஒரு தனி நீதிபதியின் தவறான தீர்ப்பாகக் கூட அமைந்துவிட வாய்ப்புண்டு. அதை எதிர்த்து, பாதிக்கப்பட்டவர் மேல்முறையீடு செய்து கொள்ளவும், மாநில அளவில் கீழ்மட்ட நீதிமன்றங்களை நிருவாகக் கட்டுப்பாடு செய்யவும் மாநிலங்களில் உயர்நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டுச் செயல்புரிகின்றன. இந்த உயர்நீதிமன்றங்கள் இந்தியத்தலைமை நீதிமன்றத்துக்கு அடுத்த கீழ் நிலையில் செயல்படுகின்றன. மாநில அளவில் இதுவே, உயர்ந்த நீதிமன்றம். இந்தியாவின் தலைமை நீதிமன்றம், உயர்நீதி மன்றங்கள் ஆகியவைகளில் உயர்நீதிமன்ற அமைப்பே பழமையானது.

**அமைப்பு :** ஒவ்வோர் உயர்நீதி மன்றமும் ஒரு தலைமை நீதிபதியையும், மன்ற நீதிபதிகளையும் கொண்டிருக்கும். மன்ற நீதிபதிகளின் எண்ணிக்கையை இந்தியக் குடியரசுத் தலைவர் நிர்ணயம் செய்வார். இந்தியாவின் குடியரசுத் தலைவர் உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியையும், மற்ற நீதிபதிகளையும் நியமனம் செய்யும் அதிகாரத்தைப் பெற்றுள்ளார். குடியரசுத் தலைவர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியை நியமனம் செய்யும் போது அந்த மாநில ஆளுநர், தலைமை நீதிபதி (தலைமை நீதிமன்றம்) ஆகியோரையும், மற்ற நீதிபதிகளை நியமனம் செய்யும்

போது மேலும் அம் மாநில உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியையும் கலந்தாலோசிப்பார். தரமான நீதிபதிகளைத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்ய இம்முறை உதவி செய்கிறது. உயர்நீதிமன்ற நீதிபதிகள் ஓய்வு பெறும் வயது 62 என அரசியலமைப்பு நிர்ணயம் செய்துள்ளது. இந்திய அரசியலமைப்பு உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு இரு தகுதிகளை நிர்ணயம் செய்துள்ளது.

(1) இந்தியக் குடிமகனாக இருத்தல் வேண்டும்.

(2) குறைந்தது 10 ஆண்டுகள் நீதித்துறையில் பணியாளராக இருந்திருக்க வேண்டும். அல்லது குறைந்தது 10 ஆண்டுகள் உயர் நீதிமன்ற வழக்கறிஞராகப் பணியாற்றியிருக்க வேண்டும் என்பவை அவை.

உயர்நீதிமன்ற நீதிபதியொருவரைப் பதவியிலிருந்து விலக்க, தலைமை நீதிமன்ற நீதிபதியொருவரை விலக்கப் பின்பற்றப்பட வேண்டிய முறையே பின்பற்றப்படவேண்டும். இம்முறை உயர் நீதிமன்றம் மாநில ஆட்சித்துறை, சட்டமன்றம் ஆகியவைகளிடமிருந்து விடுபட்டு முழு சுதந்திரத்துடன் பணியாற்றப் பெரிதும் உதவுகிறது.

உயர்நீதிமன்றம் தலைமை நீதிமன்றத்தைப்போல சுதந்திரமாகப் பணியாற்ற அரசியலமைப்பு, கீழ்க்கண்ட ஏற்பாடுகளையும் செய்துள்ளது.

(1) உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியின் ஊதியம் ரூபாய் 4000 எனவும், மற்ற நீதிபதிகளின் ஊதியம் ரூபாய் 3500 எனவும் அரசியலமைப்பு நிர்ணயம் செய்துள்ளது.

(2) நீதிபதிகளின் படிகள், விடுமுறைச் சலுகைகள், ஓய்வுகால ஊதியம் ஆகியவற்றைப் பாராளுமன்றம் நிர்ணயம் செய்யும்.

(3) நீதிபதிகளின் சம்பளம், படிகள் ஆகியவை மாநிலத் திரட்டு நிதி'யிலிருந்து வழங்கப்பட வேண்டும். இதனால் இச் செலவினங்களுக்கு மாநில சட்டசபை அங்கீகாரம் தேவையில்லை.

(4) பதவியிலிருக்கும் நிதிபதிகளின் சம்பளம், படிகள், ஓய்வுகால உரிமைகள், விடுமுறை உரிமைகள் ஆகியவற்றை அவர்களுக்குப் பாதகமான முறையில் மாற்றக்கூடாது.

(5) மாநில உயர்நீதிமன்றங்கள் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின்பு பிற மாநில உயர்நீதிமன்றங்கள், தலைமை நீதி

மன்றம் ஆகியவை தவிர வேறு எந்த நீதிமன்றத்திலும், அதிகாரி யின்முன்பும் வழக்கறிஞராகப் பணியாற்ற முடியாது.

நீதித்துறையின் வேலைப்பளு திறமையைக் கருத்தில் கொண்டு உயர்நீதிமன்றங்களில் துணை நீதிபதிகளை (Additional judges) நியமனம் செய்யும் அதிகாரத்தை இந்தியத்தலைவர் பெற்றுள் ளார். ஒரு மாநில உயர்நீதிமன்ற நீதிபதி யொருவரை அவரது பணியின் தேவைக்கு ஏற்ப வேறு ஓர் உயர்நீதி மன்றத்திற்கு இடமாற்றம் செய்யும் அதிகாரமும் தலைவருக்குக் கொடுக்கப் பட்டுள்ளது.

**அதிகாரங்கள் :** உயர் நீதிமன்றங்களின் அதிகார வரம்பை அரசியலமைப்பு விதி 225 நிர்ணயம் செய்துள்ளது. இவ் விதியின் படி எந்த உயர் நீதிமன்றத்தின் அதிகார வரம்பும், அதனால் நிர்வகிக்கப்படும் சட்டங்களும் இந்திய அரசியலமைப்பு நடை முறைக்கு வருவதற்கு முன்பு இருந்ததைப் போலவே தற்போதும் இருக்கும். இவை தற்போதைய இந்திய அரசியலமைப்புச் சட்டங்களுக்கும், அதிகாரம் பெற்ற சட்ட மன்றத்தின் சட்டங் களுக்கும் உட்பட்டிருக்கும்.

1947க்கு முன்பு உயர்நீதிமன்றங்களின் ஆணை பிறப்பிக்கும் அதிகாரங்கள் வேறுபட்டிருக்கின்றன. இந்த வேறுபாடுகள் தற்சமயம் அகற்றப்பட்டு விட்டன. தற்போது மாநில உயர்நீதி மன்றம் அதன் அதிகார எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பில் உள்ள எவருக்கும், எந்த அதிகாரி அல்லது அதிகார அமைப்பிற்கும், தகுந்த வழக்குகளில் எந்த அரசாங்கத்திற்கும் மக்கள் அரசியல மைப்பினால் பெற்றுள்ள அடிப்படை உரிமைகளை அமல் செய்ய வும், வேறு எந்தக் காரணத்திற்காகவும், ஆளுரிமைக் காப்பு ஆணை, 'செய்க' என்னும் ஆணை, விலக்கு ஆணை, கோவாரண்டோ மற்றும் செர்ஷியோரராரை ஆகிய ஆணைகளையும், கட்டளைகளையும், உத்தரவுகளையும் பிறப்பிக்கலாம். இதன் வாயிலாக மக்களது அடிப்படை உரிமைகளைக் காப்பாற்றும் மகத்தானபணி உயர்நீதி மன்றங்களிடமும் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

மேலும் உயர்நீதிமன்றம் தனது அதிகார எல்லைக்கு உட்பட்ட எந்த ஒரு கீழ் நீதிமன்றத்திடமிருந்தும் எந்த ஒரு வழக்கையும் அவ் வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்க அரசியலமைப்புச் சட்டத் திற்கு விளக்கம் அளித்து ஓர் சட்ட ஐயத்தைப் போக்க வேண்டு மெனக் கருதினால் தனக்கே விசாரிக்க மாற்றிக்கொள்ளலாம். தானே அவ் வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்கலாம். அல்லது அவ் வழக்கில் தொடர்புள்ள சட்ட ஐய வினாவைப் போக்கி,

விளக்கி அவ் வழக்கை எந்த நீதிமன்றத்திலிருந்து உயர்நீதிமன்றம் பெற்றதோ அந்த நீதி மன்றத்துக்கே அனுப்பிவைக்கலாம். இந்த அதிகாரம் அரசியலமைப்புச் சட்டங்களுக்கு விளக்கம் கொடுக்கும் முக்கியமான பொறுப்பை மாநில அளவில் உயர்நீதி மன்றத்திடம் ஒப்படைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

உயர்நீதிமன்றம் ஒரு பதிவு நீதிமன்றமாகவும் செயல் படுகிறது. தன்னை அவமதிப்பவரைத் தண்டிக்கும் அதிகாரத்தை யும் உயர்நீதிமன்றம் பெற்றுள்ளது.

கடைசியாக, உயர்நீதிமன்றம் தனது அதிகார எல்லைக்குட் பட்ட எல்லாக் கீழ்மட்ட நீதிமன்றங்களையும், விசாரணை நீதி மன்றங்களையும் மேற்பார்வையிடும் அதிகாரத்தைப் பெற் றுள்ளது.

**கீழ்மட்ட நீதிமன்றங்கள்** : மாநில அளவில் உயர் நீதிமன்றத் துக்குக் கீழ்மட்டத்தில் மாவட்ட நிலையில் (District Level) குற்ற வியல் துறையில் மாவட்டக் குற்றவியல் நீதிமன்றமும், உரிமை யியல்துறையில் மாவட்ட உரிமையியல் நீதிமன்றமும் செயல் படுகின்றன. இந் நீதிமன்றங்களில் நீதிபதிகள் நியமனம் பற்றி அரசியலமைப்பு விதி 233 குறிப்பிட்டுள்ளது. அதன்படி மாவட்ட நீதிபதிகளின் நியமனம் பதவி உயர்வு ஆகியவை மாநில ஆளுநரால் உயர்நீதிமன்றத்தின் ஆலோசனை யுடன் செய்யப்படும். ஏழு ஆண்டுகள் வழக்கறிஞராகவோ அரசாங்க வழக்கறிஞராகவோ ஒருவர் பணியாற்றியிருந்தால் தான் மாவட்ட நீதிபதியாக நியமனம் செய்யப்படலாம். மாவட்ட நீதிமன்றங்களுக்குக் கீழ்த் தாலுகா (Taluk) அளவிலும் குற்றவியல், உரிமையியல் நீதிமன்றங்கள் தனித்தனியாக இயங்கு கின்றன. கிராமங்களில் உள்ள கிராமப் பஞ்சாயத்துகளும் ஒரு சில மிகச் சாதாரண வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தைப் பெற்றுள்ளன.

1947க்கு முன்பு மாவட்ட நிலையிலும், அதற்குக் கீழ் நிலை யிலும் ஆட்சித்துறை, நீதித்துறை அதிகாரங்கள் ஆட்சித்துறை அதிகாரிகளிடமே ஒப்படைக்கப்பட்டிருந்தது. சுதந்திரத்துக்குப் பின்பு ஆட்சித்துறை அதிகாரிகள் பெற்றிருந்த நீதித்துறை அதி காரங்கள் பெருமளவிற்குக் குறைக்கப்பட்டு விட்டன. இக் கொள்கை அரசு செய்நெறி நியதிகளில் ஒன்றாகவும் நமது அரசி யலமைப்பு அறிவித்துள்ளது இவ்விடம் குறிப்பிடத்தக்கதாகும்.

**(இ) மத்திய அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் (The Attorney General of India)** : இந்திய அரசாங்கத்திற்குச் சட்டம் சார்ந்த

விஷயங்களில் ஆலோசனை கூற இந்திய அரசியலமைப்பு 'மத்திய அரசாங்கத் தலைமை வழக்கறிஞர்' என்ற ஓர் அதிகாரிக்கு வகை செய்துள்ளது. இந்த ஏற்பாடு இந்திய அரசாங்கச் சட்டத்தில் (1935) இந்தியத் தலைமை ஆளுநருக்கு (Governer General of India) சுதந்திரமான சட்ட ஆலோசனை அளிக்க நியமனம் செய்யப்பட வகை சய்யப்பட்ட தலைமை வழக்கறிஞர் பதவியை யொட்டி செய்டப்பட்டதொன்று ஆகும்.

இந்தியத் தலைவர் மத்திய அரசாங்கத் தலைமை வழக்கறிஞரை நியமனம் செய்யும் அதிகாரம் பெற்றுள்ளார். இப் பதவிக்கு நியமனம் செய்யப்படுபவர் கீழ்க்கண்ட தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும். முதலாவதாக இப் பதவிக்கு நியமனம் செய்யப்படுபவர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும். இரண்டாவதாக, உயர்நீதிமன்ற நீதிபதியாக அவர் குறைந்தது 5 ஆண்டுகள் பணியாற்றியிருக்க வேண்டும்; அல்லது உயர்நீதிமன்ற வழக்கறிஞராக குறைந்தது 10 ஆண்டுக் காலம் பணியாற்றியிருக்க வேண்டும்; அல்லது அவர் மிகச் சிறந்த சட்ட நிபுணராக இருக்க வேண்டும். அவர் இத்தியத் தலைவரின் விருப்பம் உள்ளவரை பதவி வகிக்கிறார்.

இவரது பணிகளில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது இரண்டு ஆகும். முதலாவதாக, சட்டம் சார்ந்த விஷயங்களில் இந்திய அரசாங்கத்துக்கு இவர் ஆலோசனை அளிக்க வேண்டும். இந்திய அரசாங்கம் சர்வதேச மட்டத்தில் வெளி அரசுகளுடன் தொடர்பு கொள்ளும் போதும், மாநில அரசாங்கங்கள், மத்திய பாராளுமன்றம், நீதி மன்றங்கள் மற்றும் இதர அதிகார அமைப்புகள் ஆகியவைகளுடன் தொடர்பு கொள்ளும்போதும், மசோதாக்களைத் தயாரிக்கும் போதும், மற்றும் சட்டங்களை அமல்செய்யும் போதும் எழும் சட்டம் சார்ந்த பிரச்சினைகளில் ஆலோசனை அளிப்பதும் இவரது பணி ஆகும். இவர் அளிக்கும் ஆலோசனைகளை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளலாம் அல்லது நிராகரிக்கலாம். இரண்டாவதாக, இந்திய அரசாங்கத்தின் சார்பாக நீதிமன்றங்களில் வழக்காடுவது இவரது முக்கியப் பணியாகும். அரசாங்கம் மீது நீதிமன்றங்களில் தொடரப்படும் வழக்குகளில் அரசாங்கத்துக்காக இவர் வாதாடுவார் அல்லது அரசாங்கச் சார்பாக வழக்காடுதலை இவர் இயக்கி, மேற்பார்வையிடுவார். தனது பணிகளை நிறைவேற்றும் போது இந்தியாவில் உள்ள எல்லா நீதிமன்றங்களிலும் பார்வையாளராக இருக்க இவருக்கு உரிமை உண்டு.

மத்திய அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் இந்தியப் பாராளுமன்ற உறுப்பினர் அல்லர். இருப்பினும் பாராளுமன்றத்தின் இரு

சபைகளிலும், கூட்டுக் கூட்டத்திலும், குழுக்கள் கூட்டத்திலும் பங்கு பெற்றுப் பேசும் உரிமை இவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் இங்கு வாக்களிக்கும் உரிமை இவருக்குக் கொடுக்கப்பட வில்லை.

1962 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இந்திய அரசாங்கம் சட்ட அமைச்சர் பதவியையும், தலைமை வழக்கறிஞர் பதவி யையும், ஒன்றிணைத்து ஒருவரே இரு பதவிகளுக்கான பணி களையும் மேற்கொள்ளலாம் என முடிவு செய்தது. சட்ட அமைச்சரே நீதிமன்றங்களில் அரசாங்கத்துக்காக வாதாடினால், அவரது பதவி, அந்தஸ்து, செல்வாக்கு ஆகியவை நீதிபதிகளை இக்கட்டான நிலையில் பணிபுரியும் நிலைமையை ஏற்படுத்தும் என்பதால் பின்பு அத் திட்டம் கைவிடப்பட்டது.

இந்தியாவில் உள்ள மாநிலங்களில் மாநில அரசாங்கத்துக்குச் சட்ட ஆலோசனை அளிக்கவும், அரசாங்கச் சார்பாக நீதிமன்றங் களில் வாதிடவும் மாநில அரசாங்கத் தலைமை வழக்கறிஞர்கள் (Advocate General) பணியாற்றுகின்றனர்.

# 10. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிமன்ற முறை

பொதுவுடைமை நாடுகள் நீங்கலாக இதர நாடுகளில் நீதிக் கொள்கைகளும் நீதிமன்ற அமைப்பு முறையும் சுதந்திரத்தையும், சமத்துவத்தையும் விரும்பும் மக்கள் போற்றி வரவேற்கும் அளவுக்கு அமைந்திருக்கின்றவென்பது அறிஞர்கள் பலரது கருத்தாகும். குறிப்பாக, இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியாபோன்ற நாடுகளிலுள்ள நீதிவழங்கும் முறைகளும் நீதிமன்ற அமைப்பு முறைகளும் மக்களது கவனத்தை வெகுவாக ஈர்த்திருக்கின்றன வெனலாம். இதனால் பொதுவுடைமை நாடுகளிலுள்ள இவைபற்றிய கொள்கைகளும் முறைகளும் மக்களிடம் வரவேற்புப் பெறவில்லையென்றோ, அவை மக்களுக்கு நீதி வழங்கத் தவறிவிட்டனவென்றோ பொருளாகாது. முன்னதாகக் கூறப்பட்ட நாடுகளில் இவையெல்லாம் தொன்றுதொட்டு இருந்து வருபவை, காலத்திற்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்ப நீதித்துறையில் முன்னேற்றங்களும் மாறுதல்களும் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் பொதுவுடைமை நாடுகளில் குறிப்பாக, சோவியத்யூனியன், செஞ்சீனு போன்றவற்றில் இந் நூற்றுண்டில் ஏற்பட்ட புரட்சிகளின் விளைவாகவும், மாறுபட்ட கொள்கைகளின் காரணமாகவும் நீதித்துறை என்றில்லாமல் சமூகப் பொருளாதார அரசாங்கத்துறைகளிலும் வேறுபட்ட அமைப்புகளைக் காண்கிறோம். கொள்கைகள் வேருக இருந்தாலும், அடையப்பின்பற்றப்படும் முறைகள் மாருக இருந்தாலும் இந்த எல்லா நாடுகளும் நீதிபற்றிய அடிப்படைக் கொள்கைகளை ஏற்கத் தவறவில்லை யெனத்தோன்றுகிறது. இந்த நூற்றுண்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரசியல், அரசாங்க, பொருளாதார, நீதித்துறைகளில் ஏற்பட்டிருக்கும் அளவிற்கு வேறு எந்த நாட்டிலும் முன்னேற்றமும், விழிப்புணர்வும் ஏற்படவில்லையெனச் சொல்லலாம். இனி அமெரிக்க ஐக்கிய நாடுகளில்

சட்டம், நீதி, நீதிமன்றமுறை எந்த அளவிற்கு உணரப்பட்டு, பின் பற்றப்படுகின்றன வென்பதைக் காணலாம்.

அமெரிக்க நீதிமன்றமுறையிலுள்ள முக்கியமான அம்சங்கள் பொதுவாக நான்கு வகைகளில் விவரிக்கப்படலாம். அவைகள், (1) நீதிநடைமுறை பற்றிய ஆதாரவிதிகள், (2) இராச்சிய, கூட்டாட்சி நீதிமன்றங்களின் அமைப்பு, (3) அமெரிக்க உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லையும் அதிகாரங்களும், (4) நீதி மறுஆய்வு பற்றிய அமெரிக்கக் கொள்கை ஆகியவைகளாகும்.

இவை நான்கும் சிக்கல்மிக்கவை. சட்டமாணவர்களும், வல்லுநர்களும் தங்கள் ஆயுட்கால முழுமைக்கும் இவற்றின் தன்மையையும், உயர்வையும் இதரபல அம்சங்களையும் ஆராய்ந்து அறியக்கூடியவை. எனவே, இவ்வத்தியாயத்தில் இவை பற்றிய மிக இன்றியமையாத அடிப்படையான அம்சங்கள் மட்டுமே விவரிக்கப்படுகின்றன.

**1. நீதிநடைமுறை பற்றிய ஆதாரவிதிகள்** : சிவில், குற்றவியல் வழக்குகளில் அமெரிக்க நீதிமுறையிலுள்ள நடைமுறை விதிகள் வெவ்வேறுன, ஆனல் அதே சமயத்தில் ஒன்றுக்கொன்று துணையாகவுள்ள இரு குறிக்கோள்களை அடையும் நோக்கத்தோடு உருவாக்கப்பட்டிருக்கின்றன. முதலில் நீதிமன்றம் உண்மைகளென்ன என்பதை 'அறிய' முற்படுகிறது. அதாவது வழக்கொன்றில் சம்பந்தப்பட்டவர்களின் வாதங்களிலுள்ள உண்மைகளையும், அவை எந்த அளவிற்கு வழக்கோடு இழைந்து சென்று பொருத்தமானவைகளாக இருக்கின்றன என்பதையும் நீதிமன்றம் தெரிந்து கொள்ள முயற்சி செய்கிறது. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது 'உண்மைகளைத் தெரிந்துகொள்ள விரும்பும் முயற்சி' எளிதானதாகத் தோன்றும். ஆனல் நடைமுறையில் பார்க்கும்போது சாதாரண வழக்குகளைப்பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொள்வதே கடினமானதாகும். அதிலும், சிவில் உரிமைகள், கொலைகள் பற்றிய வழக்குகளில் இது மிகவும் கடினமானதாகும்.

நீதிமன்றத்தின் இரண்டாவது பணி 'சட்டம் என்ன' என்பதைத் தீர்மானிப்பதாகும். இப் பணியும் அவ்வளவு சுலபமானதன்று. ஏனெனில் வழக்குகள் பற்றிய உண்மைகள் என்னவென்பதையும், அரசியலமைப்புச் சட்டம், சட்டமன்றம் இயற்றும் சட்டங்கள் ஆகியவற்றின் அம்சங்கள் பலவற்றையும் அறிந்து அவை எந்த அளவிற்கு வழக்குகளுக்கு ஆதாரமாக அல்லது எதிராக இருக்கின்றன என்பதை நடைமுறையில் கடைப்

பிடிப்பதென்பது சுலபமாகத் தோன்றுமானாலும் அதிலுள்ள துன்பம் சட்ட அலுவலர்களுக்கும், அவைகளை நடைமுறைக்குக் கொண்டு வருபவர்களுக்கும்தான் தெரியும். சில சமயங்களில் எதேச்சையாகத்தோன்றும் சூழ்நிலைகள் அல்லது புது அம்சங்களைச் சமாளிப்பதற்கு அல்லது தீர்மானிப்பதற்கு இயற்றப்பட்டுள்ள சட்டங்களில் அல்லது வழக்காறுகளில் ஆதாரமில்லாமல் போகலாம். அல்லது ஏதாவதொரு சட்டமோ அல்லது அலுவலர்களின் நடவடிக்கைகளோ சம்பந்தப்பட்ட வழக்கொன்றில் அரசியலமைப்பைச் சட்டத்திற்கு மாறானதெனக் கட்சிக்காரர்கள் வாதிக்கலாம்.

அமெரிக்க நீதிமன்ற முறையில், உண்மைகள் பொதுவாக அறங்கூறுநர்கள் உதவிகொண்டு தீர்மானிக்கப்படுகின்றன. இவ்வறங்கூறுநர்கள் நீதிமன்றங்கள் அமைந்திருக்கின்ற பகுதிகளைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள். இவர்களின் எண்ணிக்கை பன்னிரெண்டாகும். ஆண்கள், பெண்கள் யார்வேண்டுமானாலும் சான்று நடுவர் குழுவில் அங்கம் பெறலாம். இவர்களின் கருத்துகள் அப் பகுதிகளில் நிலவும் கருத்துகளையும் எண்ணங்களையும் பிரதிபலிப்பனவாக இருக்கும் எனக் கருதப்படுவதால் நீதிமன்றங்களில் நடைபெறும் வழக்குகளில் இவர்களின் கருத்துகள் சரியான முடிவுகளை வழங்க உதவியாக இருக்கும் என்றெண்ணப்படுகிறது. ஆனால் சட்டம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள், நீதிமன்ற நடைமுறைகள் ஆகியவற்றில் நீதிபதியின் கருத்தே மேலோங்கி நிற்கும். பணிகள் இவ்வாறு பிரிக்கப்பட்டிருப்பதனால் பல வகைப்பட்ட முடிவுகள் கிடைக்கின்றன. வழக்கு விசாரணைக் காலம் நீடிக்கிறது. சட்ட தொழில் நுணுக்கங்கள் பொது முறையில் அணுகப்பட்டுச் சமூக உணர்ச்சிக்குச் சிறப்பிடம் தரப்படுகிறது. விசாரணைகள் திறந்தவெளி நீதிமன்றகளில் தொடர்ந்து நடத்தப்படுகின்றன. இதனால் சட்ட விதிமுறைகள் ஓரளவிற்கு உணர்ச்சிகளால் கட்டுப்படுத்தப்படுகின்றன. இது எவ்வாறெனில், நீதிமன்றங்களின் முன் நடைபெறும் வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்கள் உண்மையில் குற்றம் இழைத்தவர்களாக இருப்பினும், சான்று நடுவர்கள் அவர்களைக் குற்றமற்றவர்களெனக் கருதி முடிவு கூறலாம். ஆனால் நீதிபதி அவர்களின் முடிவை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்ற கட்டாயம் கிடையாது. சில சிவில், கிரிமனல் வழக்குகளில் அறங்கூறுநர்களின் துணையின்றி விசாரணைகள் நடைபெறலாம். நீதிபதியே தனியாக வழக்கு விசாரணைகளை நடத்தித் தீர்ப்பளிக்கலாம். இம்முறை பின்பற்றப்படுமாயின் வழக்குகள் விரைவாகப் பைசல் செய்யப்படுவதுடன், வற்புறுத்தல்கள் இல்லாத சட்டப்படியான நீதி கிடைக்கும் வாய்ப்பு அதிகமாக இருக்கும். இங்கு, 1962-ஆம் ஆண்டில்

கூட்டாட்சி நீதிமன்றங்களால் விசாரணை செய்யப்பட்ட 6,200 வழக்குகளில் 3,300 நீதிபதிகளால் சான்று நடுவர் உதவி இல்லாமல் நடைபெற்றதென்பதும், 2,900 மட்டுமே சான்றுநடுவர் துணைகொண்டு நடைபெற்றதென்பதும் குறிப்பிடத்தக்கது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உண்மையைக் கண்டுபிடிப்பதும், சட்டத்தைத் தீர்மானிப்பதும் 'உண்மையான வழக்குகள், சர்ச்சைகள்' (genuine cases and controversies) தொடர்பானவற்றில் நீதிமன்றங்களால் செய்யப்படுகின்றன. இச் சொற்றொடர், வழக்கொன்று நீதிமன்றத்திடம் கொண்டு வரப்படுவதற்கு முன், அது எதிராளிகளுக்கிடையே உண்மையாகவே ஏற்பட்டுள்ளதுதானா, நீதித்தீர்ப்பிற்கு ஏற்றதும் தயாராகவுள்ளதும் தானா என்பதன் சுருக்கமாகும். முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இம்முறை அங்குப் பின்பற்றப்படுவதால் இதனை நன்கு ஆராய்ந்தறிவது அவசியமாகும்.

**'கட்சிக்காரர்களுக்கிடையே ஏற்படும் உண்மையான போட்டி':** அமெரிக்க நீதிமன்றங்களில் நடைபெறும் விசாரணைகளில் எதிர் எதிராக இருக்கும் கட்சிக்காரர்களே, எந்தெந்தச் சாட்சிக்காரர்களை அழைப்பது, சாட்சியத்திற்கு என்னென்ன ஆவணங்களை வழங்குவது, எதிர்த்தரப்பு சாட்சிக்காரர்களை என்னென்ன வினாக்களைக்கேட்பது, வழக்குச் சார்பான எத்தகைய சட்டபூர்வமான கோரிக்கைகளையும் வாதங்களையும் எழுப்புவது என்பதைத் தீர்மானிப்பார்கள். நீதிபதி முற்றிலும் நடுநிலைமை வகித்துத் தலைமை ஏற்பார். அவர், பல ஐரோப்பிய நாடுகளில் நடப்பது போலச் சுதந்திரமாக உண்மைகளை ஆராயும் முயற்சியில் இறங்குவது கிடையாது. பெரும்பாலும் அவர் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்வதில்லை. சாட்சியத்தை உருவாக்குவதில்லை. வழக்குரைஞர்களின் உரைகளைக் கட்டுப்படுத்துவதில்லை. இம்முறை 'எதிராளி நீதிக்கொள்கை' (adversary theory of justice) என்றழைக்கப்படுகிறது. இக் கொள்கை, சரியான உண்மைகளும், உண்மையான சட்டப் பிரச்சினைகளும், கட்சிக்காரர்கள் ஒருவருக்கொருவர் எதிர் எதிராக மோதிக் கொள்வதிலிருந்தும், பயிற்சி பெற்ற வழக்குரைஞர்களின் வாதப் பிரதிவாதங்களிலிருந்தும் தெளிவாக வெளிப்படும் என்னும் பாவனை அடிப்படையில் தோன்றியதாகும்.

ஆனால், நீதிபதியும் அறநடுவர்களும், வாதிப் பிரதிவாதிகள் தத்தம் வாதங்களிலுள்ள அழுத்தத்தையும் நியாயத்தையும் வற்புறுத்துவார்களாகையால் எதிராளி நீதிக்கொள்கை யடிப்படையில் சரியான அல்லது உண்மையான தீர்ப்புக்கு வர முடியா

தெனக் கூறலாம். இதற்கும் எடுத்துக் காட்டாக, ஒவ்வொரு நகரத்திலும் உள்ள பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினர்கள் யார் யார், அவர்கள் பெயர்களென்ன என்ற விபரங்களையெல்லாம் அக் கட்சி ஆண்டுக்கொரு முறை அப் பகுதி செய்தித்தாள்களில் பிரசுரிக்க வேண்டுமென்று அமெரிக்கப் பாராளுமன்றம் (Congress) சட்டம் இயற்றுமானால், அச் சட்டம், அரசியல் சட்ட அடிப்படையில் செல்லாதெனும் வாதத்தை எழுப்பி விபரங்களைத் தரமுடியாதென அக் கட்சியின் நகரத் தலைவர்கள் மறுக்கலாம். அவ்வாறே, அப்பகுதியைச் சேர்ந்த செயலாளர்கள், தலைவர்கள் சட்டத்தை மதித்து நடக்க வேண்டுமெனக் கோரி நீதி மன்றத்தில் அவர்கள் மேல் வழக்குத் தொடரலாம். நீதி மன்றத்தின் முன் இத்தகைய வழக்குகள் வருமானால் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள் வாதிகளாகவும், பிரதிவாதிகளாகவுமிருப்பார்கள். இவ் வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்களான எதிராளிகளிடையே 'உண்மையான போட்டி' (real contest) இருக்குமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே, நீதிபதிகளுக்கு உண்மைகள் தெரியாமல் போகக் கூடுமெனச் சொல்லப்படுகிறது.

**'நீதித் தீர்மானத்திற்குத் தகுதியுடைய சச்சரவு':** தனிப்பட்டவர்கள், குழுக்கள், அரசாங்கச் செயலிகள் ஆகியவைகளுக்கிடையே தோன்றும் சச்சரவுகளில் பெரும்பாலானவை, அவைகளில் சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்களில் ஒரு சாரார் நீதித் தீர்ப்பை விழைவார்களாயின் நீதி மன்றங்களின் பரிசீலனைக்கும் முடிவிற்கும் தாக்கல் செய்யப்படலாம். மக்களாட்சி முறையில் இவ்வாறு சச்சரவுகளையும், கருத்து வேற்றுமைகளையும் அமைதியான முறையில் தீர்த்துக் கொள்வதற்கு வகை செய்ய வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். இக் கொள்கை அமெரிக்காவில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதால், நீதி மன்றங்களிடம் வரும் வழக்குகளின் எண்ணிக்கை மிக அதிகமாகும்.

**'நீதிமன்றத் தீர்ப்புக்குத் தயாராகவுள்ள சச்சரவு':** சட்ட அடிப்படையில் நீதிமன்றங்களிடம் சச்சரவொன்றைக் கொண்டு வருவதற்குத் தேவையான பிறிதொரு நிபந்தனை, அது நீதிமன்றத் தீர்ப்பு வழங்கப்படுவதற்குத் தகுதியுடையதாக இருக்க வேண்டுமென்பதாகும். இதற்கு, அவரவருடைய உரிமைகளை நிலைநாட்டுவதற்குத் தேவையான எல்லாம் செய்யப்பட்டு விட்டதென்றோ, குறிப்பிட்ட நடவடிக்கையொன்றில் அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்ற நிலையமொன்றின் குறுக்கீடும் தீர்ப்பும் அவசியமாகி விட்டதென்றோ பொருளாகும். எடுத்துக் காட்டாக, நீக்ரோ இனத்தைச் சேர்ந்த ஒருவர் மிசிசிப்பி இராச்சியத்தின் மீது

தனக்கு வாக்களிக்கும் உரிமை தரப்படவில்லை என்று வழக்குத் தொடர வேண்டுமானால், அவர் அதற்கு முன்பாக அந்த இராச்சியத்தைச் சேர்ந்த வாக்குரிமைப் பதிவாளரை அணுகித் தனக்கு அவ் வுரிமையைத் தர வேண்டுமென்று விண்ணபித்துக் கொள்ள வேண்டும். அவ் விண்ணப்பம் கவனிக்கப்படாமல் போனாலோ, சரியானதாக இல்லாத காரணமொன்றிற்காக உரிமை மறுக்கப்படுமானாலோதான், அவர் அந்த இராச்சியத்தின் மீது நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்து நீதிமன்றத் தீர்ப்பை நாடலாம். இவ்வாறே கட்டடமொன்றைக் கட்டவேண்டி அனுமதி கோரும் ஒருவருக்குப் பொறியியல் வல்லுநர் அனுமதி தர மறுத்து விடுவாரானால், அவர் நீதிமன்றத்தின் தலையீட்டைக் கோருமுன் அவர் எந்தப் பகுதியில் வாழ்கிறாரோ அல்லது எங்குக் கட்டடம் கட்டவேண்டுமென்று விழைகிறாரோ அப் பகுதியில் அல்லது அங்குள்ள மேல்மட்டத்திலுள்ள அதிகாரிகளிடம் முறையிட்டு, அவர்களிடமிருந்தும் அனுமதி கிடைக்காது போயிருக்க வேண்டும். இதனால், அமெரிக்காவில் எந்தச் சச்சரவும் நீதிமன்றத்தின் பரிசீலனைக்கு வருவதற்கு முன்பு, இதர சாத்தியமான முறைகளால் தீர்த்துவைக்கப்பட முடியாததாக இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

நீதித்துறையிலுள்ள விசாரணை மேல் முறையீட்டு நடைமுறைகள் 'உண்மையான வழக்கு அல்லது சர்ச்சை' யொன்று இருக்கிறதென்று கொண்டாலும், அது அமெரிக்க நீதிமுறையில் விசாரணை (trial), மேல் முறையீடு (appeal) என்றும் இரண்டு கட்டங்களைத் தொட்டு நிற்கிறது. எனினும் மேலெழுந்தவாரியான பலவகைகள் பல்வேறு இராச்சியங்களிலும் பின்பற்றப்படுகின்றன.

விசாரணை, சிவில் அல்லது குற்றவியல் சட்டப் பிரிவைச் சேர்ந்ததாக இருக்கலாம். வழக்கொன்று இப் பிரிவில் எதனைச் சேர்ந்ததாக இருந்தாலும் வாதிகளும் பிரிதிவாதிகளும் தங்களுடைய கட்சியை நீதிமன்றத்திடம் எடுத்துரைக்க வகை செய்யப்படுகிறது. சில வழக்குகளில் குறிப்பாக கிரிமினல் வழக்கு விசாரணைகளில் அந் நடுவர்களின் உதவி நாடப்படுகிறது. வாதப் பிரதிவாதங்கள் நடைபெறும் போது குறுக்கு விசாரணைகள் கட்சிக்காரர்களின் வழக்கறிஞர்களால் நடத்தப்படும். அதன் பிறகு நீதிபதி தனது தீர்ப்பை யளிப்பார். கூட்டாட்சி, இராச்சிய நீதிமுறைளில் நீதிமன்றங்களில் வழக்குகள் நடைபெறும்போது உண்மை வாழ்க்கையில் காணப்படும் நாடகமும், சக்தியும் மலிந்து காணப்படுகின்றன. நீதிமன்ற அறையில் பார்வையாளர்கள் நிறைந்து வழிவார்கள். சாட்சிகள் அவர்களுக்குத்

தோன்றியவாறெல்லாம் பல கதைகளை வாரி வழங்குவார்கள். வழக்கறிஞர்கள் திகைக்கவைக்கும் முறையில் குறுக்கு விசாரணைகளைச் செய்வார்கள். பலவகைப்பட்ட வேண்டுகோள்களும் விண்ணப்பங்களும் அறநடுவர்களுக்கு வழங்கப்படும். இத்தன்மையிலமையும் வழக்கு விசாரணை நாட்கணக்கில், மாதக்கணக்கில் நடைபெறும்.

வழக்குகள் மேல் முறையீட்டடிப்படையில் உயர் மட்ட நீதிமன்றத்திற்கு வரும்போது, கட்சிக்காரர்கள் தங்களுடைய கட்சியை எழுத்து மூலமாக நீதிமன்றத்திடம் தாக்கல் செய்வார்கள். கீழ்மட்ட நீதிமன்ற வழக்குச் சம்பந்தப்பட்ட பதிவேடுகளின் பரிசீலனையோடு, வழக்கறிஞர்களின் வாதங்களும் கேட்டறியப்படும். நீதிபதிகள் வழக்கறிஞர்களைக் குறுக்கு விசாரணை செய்வதுபோல் கேள்விகள் கேட்பார்கள். சாட்சிகள் விசாரிக்கப் படமாட்டார்கள். மேல் மட்ட நீதிமன்றத்தில் மூன்று அல்லது நான்கு நீதிபதிகள் அமர்ந்து வழக்கு விசாரணையை நடத்துவார்கள். வழக்கறிஞர்களின் வாதப் பிரதிவாதங்கள், முடிந்த பிறகு நீதிபதிகள் தனியாகத் தங்களுக்குள் கலந்து பேசி முடிவு செய்வார்கள். அவர்களின் முடிவு பெரும்பான்மை வாக்கு அடிப்படையில் அமையும். பெரும்பான்மையோரின் முடிவை ஏற்காத நீதிபதி அல்லது நீதிபதிகள் தனித்தனியாக வேறான முடிவுகளைக் கூறலாம். மேல்முறையீட்டு நீதிமன்றங்களில் அறநடுவர் குழுவின் உதவி கோரும் முறை பின்பற்றப்படுவதில்லை.

மேல்முறையீட்டு நீதிமன்றத்தில் வழக்கு விசாரணை கீழ் நீதிமன்றங்களில் நடைபெறுவது போலவல்லாமல் மிக அமைதியான சூழ்நிலையில் நடைபெறும். வழக்கு விசாரணை பெரும்பாலும் ஏதாவதொரு சட்டப்பிரச்சினையைப் பற்றியதாகவும், ஆராய்ச்சித் தன்மை வாய்ந்ததாகவுமிருக்கும்.

முதல் மேல் முறையீட்டு நீதிமன்றத்தின் தீர்ப்பு வாதிப் பிரதிவாதிகளுக்கு இசைவுடையதாக இல்லாமல் போகுமானால், அதற்கும் மேலேயுள்ள மேல்முறையீட்டு நீதிமன்றத்திற்கு அவர்களால் எடுத்துச்செல்லப்படலாம் இவ்வாறு ஒவ்வொரு வழக்கும் அதனுடைய தன்மைக்கும், முக்கியத்திற்கும் தகுந்தாற்போல இறுதி மேல் முறையீட்டு நீதிமன்றம்வரை செல்லும் தகுதியுடையதாகும்.

இராச்சியங்களில், இராச்சியங்களின் சட்ட அடிப்படையிலான வழக்குகள் இராச்சியங்களின் உச்ச நீதிமன்றங்கள் வரையிலும் செல்லலாம். அவ்வாறே கூட்டாட்சிச் சட்ட அடிப்படையிலான

வழக்குகள் கூட்டாட்சி உச்ச நீதிமன்றம் வரையிலும் சட்டங்களில் சொல்லப்பட்டுள்ள கட்டுப்பாடுகளுக்குட்பட்டு எடுத்துச் செல்லப்படலாம்.

மேற்கூறப்பட்ட வழக்கு விசாரணைகளும், மேல் முறையீடுகளும் அமெரிக்காவிலுள்ள ஐம்பது இராச்சிய நீதிமுறைகளிலும். இவைகளுக்குப் பொதுவான கூட்டாட்சி நீதி முறையிலும் எவ்வாறு நடைபெறுகின்றன வென்பதையும், அந்த நீதிமுறைகளில் நீதிமன்றங்கள் எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கின்ற வென்பதையும் இனி விவரிக்கக் காணலாம்.

(அ) **இராச்சிய நீதிமன்றங்கள் :** அங்குள்ள ஐம்பது இராச்சியங்களிலுள்ள நீதிமுறைகளிலும் பத்துப் பன்னிரண்டு வகை நீதிமன்றங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் இராச்சியமும் வழக்குகளை விசாரணைக்குக் கொண்டு வருவதிலும், மேல்முறையீடுகளை நிர்ணயித்தலிலும், நீதிமன்றங்களின் ஆய்வு முறைகளை ஏற்படுத்துவதிலும் அதற்குத் தோன்றியவாறு ஏற்படுத்தி வளர்த்துக்கொண்டிருக்கிறது. இராச்சிய நீதிமன்ற முறையைச் சற்று ஊன்றிக் கவனித்தால் அங்குப் பொதுவாக ஆறுவகை நீதிமன்றங்கள் வெவ்வேறு பெயர்களிலும், உருவங்களிலும் ஏற்பட்டிருப்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

**அமைதிகாண் நீதிபதிகள் (Justices of Peace);** இந் நீதிபதிகள் இரண்டாண்டு முதல் நான்காண்டுக் காலத்திற்கு நியமிக்கப்படுகின்றார்கள். சில சமயங்களில் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். இவர்கள் 150 டாலர்கள் அல்லது 250 டாலர்கள் [1]மதிப்புக்கு மேற்படாத சிறு சிவில் வழக்குகளையும், கிரிமினல் வழக்குகளையும் விசாரணை செய்து தீர்ப்பளிக்கும் அதிகாரம் பெற்றவர்கள். இந் நீதிபதிகள் சாதாரணமாகச் சட்டக்கல்வியில் பட்டம் பெற்றவர்களல்லர். இவர்களுடைய பணி பகுதிநேரப் பணியாகக் கருதப்படுகிறது. இவர்கள் திருமணங்களை நடத்தி வைப்பதையும் மீன் பிடிப்பதற்கு அனுமதி வழங்குவதையும் முக்கியப்பணிகளாகச் செய்து வருகிறார்கள்.

**நகராட்சி நீதிமன்றங்கள் (Municipal Courts) :** நகர நீதிமன்றங்கள் (City Courts), காவலர் நீதிமன்றங்கள் (Police Courts) அல்லது சிறு கோரிக்கைகள் நீதிமன்றங்கள் (Small Claims Courts) என்றழைக்கப்படும் இவைகள்தாம் இராச்சிய

[1]வழக்கில் சம்பந்தப்பட்ட தொகையின் மதிப்பு இராச்சியத்திற்கு இராச்சியம் வேறுபடுகிறது.

நீதித்துறைமுறையில் அடிமட்டத்திலுள்ள உண்மையான முதல் நீதிமன்றங்களாகும். இந் நீதிமன்றங்கள் 500 டாலர்கள் 1000 டாலர்களுக்கு அதிகப்படாத சிவில் வழக்குகளைக் கேட்கும் அதிகாரமுடையவை. இவைகள், தெருக்களில் குப்பைகளை வீசியெறிவது, அமைதியைக் குலைத்தல் போன்ற நகரச்சட்டங்களுக்கு எதிரான வழக்குகளை விசாரணை செய்கின்றன. நீதிமன்றங்கள் வரிசையில் நகராட்சி நீதிமன்றங்களிலுள்ள நீதிபதிகள் முதல், மேல்மட்டத்திலுள்ள பல நீதிமன்றங்களிலுள்ள நீதிபதிகள் வரை அனைவரும் பொதுவாகச் சட்டக்கல்வியில் பட்டம் பெற்றவர்களாக இருப்பார்கள்.

**கவுண்டி நீதிமன்றங்கள் (County Courts):** இவைகள் சில சமயங்களில் உயர்ந்த நீதிமன்றகள் என்றும் அழைக்கப்படுகின்றன. இராச்சிய நீதிமுறை அமைப்பில் இந் நீதிமன்றங்களில் தான் முதன்முதலாக, சிவில்வழக்குகளும் இடர்நிறைந்த கிரிமினல் வழக்குகளும் அனுமதிக்கப் படுகின்றன. இங்குதான் சான்று நடுவர் உதவியுடன் வழக்கு விசாரணைகள் நடைபெறுகின்றன. இந் நீதிமன்ற நீதிபதிகள் சராசரியில் ஐந்து முதல் பத்தாண்டுப் பதவிகாலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். கவுண்டி நீதிமன்றங்களால் தீர்ப்பளிக்கப்பட்ட வழக்குகளில் 95 முதல் 98 விழுக்காடு வரையிலான வழக்குகள் மேல்முறையீட்டிற்கு மேல்மட்ட நீதிமன்றங்களுக்குச் செல்வதில்லையென மதிப்பிடப்பட்டிருக்கிறது.

**தனி அதிகார நீதிமன்றங்கள் (Courts of Special Jurisdiction):** குடும்ப உறவுகள், இளங்குற்றவாளிகள், அனாதைகள், உயில்கள், எஸ்டேட்டுகள் போன்றவற்றைக் கவுண்டி நீதிமன்றங்கள் கையாண்டு வந்தபோதிலும், தற்காலப் போக்கு, அவைகளைக் கவனிக்கத் தனி நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்படுவதை வரவேற்கிறது. இப் புது நீதிமன்றங்களில் பின்பற்றப்படும் நடைமுறை விதிகள் நீதிமன்றங்களால் கடைபிடிக்கப்படும் முறைகளைப் போலச் சட்டப்படியானவைகளாக இருப்பதில்லை. வழக்குகளின் தன்மைக்குத் தகுந்தாற்போல நீதிபதிகள் சிறப்புத் தகுதிகளும் பயிற்சியும் உடையவர்களாக இருப்பார்கள்.

**இடைநிலை மேல் முறையீட்டு நீதிமன்றங்கள் (Intermediate Courts of Appeal):** மேல் முறையீட்டுப் பிரிவு என்றும், மாவட்ட மேல்முறையீட்டுப் நீதிமன்றமென்றும் (District Court of Appeal) சில சமயங்களில் அழைக்கப்பெறும் இந் நீதிமன்றங்கள் நகராட்சி, கவுண்டி, தனி நீதிமன்றங்களால் வழங்கப்பட்ட தீர்ப்புகளை எதிர்த்து மேல்முறையீட்டு முறை வாயிலாக வரும் வழக்குகளைப்

பரிசீலனை செய்கின்றன. சில சமயங்களில், இராச்சிய ஒழுங்கு முறை செயலிகளால் தீர்மானிக்கப்படும் வழக்குகளையும் ஆய்கின்றன. இவ்வகை நீதிமன்றங்களிலுள்ள நீதிபதிகள் நியமிக்கப்பட்டாலும், தேர்ந்தெடுக்கப்பட்டாலும் ஏழாண்டு முதல் பனிரெண்டாண்டுகளுக்குப் பதவியிலிருப்பார்கள்.

**இராச்சிய உயர் நீதி மன்றம் (State High Court) :** பொதுவாக இந் நீதிமன்றம் உச்ச நீதி மன்றமென்றும், நியூயார்க், மேரிலாந்து போன்ற இராச்சியங்களில் அப்பீல் நீதி மன்றமென்றும் (Supreme Court of Errors) அழைக்கப்படுகிறது. இராச்சிய நீதிமுறை அமைப்பென்ற படிக்கட்டில் மேல் மட்டத்தில் இதுதான் இறுதி நீதிமன்றமாகும். இம் மன்றத்தில் அளிக்கப்படும் தீர்ப்புகள் இராச்சிய அரசியலமைப்புச் சட்டத்தைப் பற்றியதாக இருந்தாலும், இராச்சிய சட்டங்களைப் பற்றியதாக இருந்தாலும் மாற்றமுடியாதவைகளாகும். கூட்டாட்சி அரசியலமைப்பைப் பற்றிய விளக்கம் பற்றியதாக இருந்தாலல்லாது, அமெரிக்க உச்ச நீதி மன்றம் இராச்சிய உயர் நீதி மன்றங்களின் தீர்ப்புகளில் தலையிடுவதில்லை. சில இராச்சியங்களில் இம் மன்ற நீதிபதிகள் ஏழாண்டு முதல் பதினைந்தாண்டுப் பதவிக்காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் அல்லது நியமிக்கப்படுகிறார்கள்.

**கூட்டாட்சி நீதித்துறை அமைப்பு :** இராச்சிய நீதிமன்றங்களோடு கூடக் கூட்டாட்சி நீதிமன்றங்களும் அமைந்திருக்கின்றன. கூட்டாட்சி அரசியல் சட்டத்தின் மூன்றும் விதி, கூட்டாட்சியின் அதிகார எல்லைக்குள் அடங்கும் வழக்குகளை மிகுந்த எச்சரிக்கையுடன் எடுத்துரைக்கிறது. இவைகள்தாம், காங்கிரஸ் இயற்றும் சட்டங்களின் ஆதாரத்தில் வகுக்கப்படும் விதிகளுக்குக் கட்டுப்பட்டுக் கூட்டாட்சி நீதிமன்றங்களிடம் கொண்டு வரப்படலாம். கூட்டாட்சி நீதிமன்றங்களின் தீர்ப்புக்கோரி வரும் வழக்குகள் ஒன்பது வகைகளாகப் பிரிக்கப்படலாம். ஒரு சில வழக்குகள் கூட்டாட்சிச் செயலிகளில் பணிபுரிபவர்களாக அல்லது இராசதந்திரத்துறையைச் சேர்ந்தவர்களாக இருப்பவர்களைப் பற்றியதாக—கூட்டாட்சி சட்ட விளக்கம் தேவைப்படுபவைகளாக இருக்கும். வேறு சில தனித் தேசியத்தன்மை வாய்ந்தவையாகவும், சட்டப்பிரச்சினைகளை எழுப்பும் தன்மையுடையவைகளாகவுமிருக்கும். இதரசில, இராச்சியங்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளைப் பற்றியவைகளாக இருக்கும். கூட்டாட்சி அதிகார எல்லையைத் தோற்றுவிக்கும் ஒன்பது வகைப்பட்ட வழக்குகளின் சுருக்கம் பின்வருமாறு தொகுத்தளிக்கப்படலாம்.

**வழக்கின் தன்மையடிப்படையில்**

(1) அரசியல் சட்டம், அமெரிக்கா நாட்டின் சட்டங்கள் உடன்படிக்கைகள் (treaties), அமெரிக்க நாட்டின் அதிகாரம் ஆகி ஆகியவற்றின் அடிப்படையில் ஏற்படுபவை.

(2) கடற்படைத் தலைமை (admiralty) சார்வு, கப்பல் போக்குவரத்து (maritime) அடிப்படையில் ஏற்படுபவை.

வழக்கில்தொடர்புடைய கட்சிகள் அல்லது கட்சிக்காரார் களின் தன்மையடிப்படையில்

(3) தூதுவர்கள், அமைச்சாகள், கான்சல்கள் (consuls) தொடர்புடையவை,

(4) அமெரிக்க ஐக்கியநாடுகள் சம்பந்தப்பட்டவை.

(5) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இராச்சியங் கள் சம்பந்தப்பட்டவை.

(6) கூட்டாட்சியிலுள்ள ஓர் இராச்சியத்திற்கும் பிறிதோர் இராச்சியத்தைச் சோந்த குடிமகன் அல்லது குடிமக்களுக்குமிடையே ஏற்படுபவை.

(7) பல்வேறு இராச்சியங்களிலுள்ள குடிமக்களுக் கிடையே தோன்றுபவை.

(8) ஒரே இராச்சியத்தைச் சேர்ந்த குடிமக்கள் பல்வேறு இராச்சியங்களிலுள்ள மான்யங்கள் (grants) அடிப் படையில் நிலங்கள் வேண்டுதல்.

(9) ஓர் இராச்சியம் அல்லது அதன் குடிமக்களுக்கும் அயல் நாடுகள் அல்லது அவற்றின் குடிமக்களுக்குமிடையே ஏற்படுபவை.

1789ஆம் ஆண்டு பிரசித்திபெற்ற நீதித்துறைச் சட்டம் (Judiciary Act of 1789) இயற்றப்பட்டது முதல் இன்று வரை யிலும், கூட்டார்ட்சி நீதித்துறை அமைப்பில் எந்தெந்த நீதிமன்றங் கள் மேற்கூறப்பட்ட ஒன்பது வகை வழக்குகளில் எதை அல்லது எவற்றை விசாரணை செய்யும் அதிகாரமுடையவை என்பதை அரசியல் சட்டத்தின் மூன்றும் விதிக்கிணங்க காங்கிரஸ் செலுத்தி வந்திருக்கிறது. இவை பற்றிய சட்டங்கள் கூட்டாட்சி அதிகார எல்லைகள் பற்றிய பல அம்சங்களையும் இங்கு விரிவாக விவாதிக் காமல் அங்குக் கூட்டாட்சி நீதித்துறை எவ்வாறு அமைக்கப்பட்

டிருக்கிறது, நீதிமன்றங்களின் பணிகள் என்னென்ன வென்பதை இனிக் காணலாம்.

கூட்டாட்சி முறையில் ஆரம்ப அல்லது முதல் விசாரணை நிலையில் அங்கு எண்பத்தாறு மாவட்ட நீதிமன்றங்கள் (district courts) ஐம்பது இராச்சியங்களுக்குமாகப் பகிர்ந்து ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர் இராச்சியத்திலும் குறைந்தது ஒரு மாவட்ட நீதி மன்றமாவது இருக்கும். சிலவற்றில் வழக்குகளின் எண்ணிக்கைக்கும் வேலைப் பளுவுக்கும் தகுந்தாற்போல ஒன்றுக்கு மேற்பட்ட மாவட்ட நீதிமன்றங்கள் இருக்கும். இவைகளல்லாமல், கொலம்பியா மாவட்டம், போர்ட்டோரீகோ (Puerto Rico), கால்வாய் பிராந்தியம் (the Canal zone), குவாம் (Guam), வர்ஜீனியத்தீவுகள் (the Virgin Islands) ஆகிய ஒவ்வொன்றிற்கும் ஒன்று வீதம் மொத்தம் ஐந்து இணைமாவட்ட நீதிமன்றங்களுமிருக்கின்றன இந் நீதிமன்றங்கள் ஒவ்வொன்றிலும் ஒன்று முதல் பதினெட்டு நீதிபதிகள் இருப்பார்கள். பொதுவாக, நீதிமன்றத்தின்முன் கொண்டுவரப்படும் வழக்கு விசாரணையின் போதும், தீர்மானங்களின் போதும் ஒரு மாவட்ட நீதிபதிதலைமை வகித்துக் கேட்பார். ஆனால் வழக்கில் சம்பந்தப்பட்ட கட்சிக்காரரொருவர் கூட்டாட்சிச் சட்டம் அரசியலமைப்புச் சட்டத்திற்குட்பட்டிருக்கவில்லை யென்று வாதாடுவாரானல் மூன்று நீதிபதிகள் வழக்கு விசாரணையைச் செய்வார்கள்.

மாவட்ட நீதிமன்றங்களின் அலுவல் சிவில், குற்றவியல் வழக்குகள் என்று இருவகையாகப் பிரிக்கப்படுகிறது. பல்வேறு இராச்சியங்களைச் சேர்ந்த குடிமக்கள் அல்லது கூட்டாட்சி அரசாங்கம் ஒரு கட்சியாக இருந்து, பத்தாயிரம் டாலர்களோ, அதற்கும் அதிகமான டாலர்களோ பெறுமானமுள்ளவையாக இருக்கும் சிவில் வழக்குகளை மாவட்ட நீதிமன்றங்கள் அனுமதித்து விசாரணை செய்யும் அதிகாரமுடையவை. 1962ஆம் ஆண்டில் இத்தகைய வழக்குகளின் மொத்த எண்ணிக்கை 58,000 எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இவ் வழக்குகளில் பெரும்பாலானவை ஒப்பந்தம், சட்டமீறல் (tort), நிலம் வாங்குதல் அல்லது விற்றல், சட்டப்படியான நடவடிக்கைகள் (statutory actions) பற்றியவைகளாகும்.

மாவட்ட நீதிமன்றங்களில் கொண்டு வரப்படும் குற்றவியல் வழக்குகள் கூட்டாட்சிச் சட்டங்களை மீறியதற்காகவோ, புறக்கணித்ததற்காகவோ தனிப்பட்டவர்கள் அல்லது நிலையங்கள் மீது தொடரப்படுபவைகளாகும். 1962ஆம் ஆண்டில் மட்டும் 33,000 பிரதிவாதிகள் இத்தகைய வழக்குகளில் சம்பந்தப்பட்

டிருந்தார்கள். இத்தகைய குற்றவியல் வழக்குகளில் பெரும் பாலானவை அமெரிக்க நாட்டை ஏமாற்றியதற்காகவோ, மதுபானச் சட்டங்களை மீறியதற்காகவோ, பல இராச்சியங் களிலும் மோட்டார் வாகனங்களைத் திருடியதற்காகவோ கொண்டுவரப்பட்டவையாகும். கையாடல், கள்ளநாணயம் அடித்தல், குடிபோதை, இளம் பருவத்தினர் தகாத முறையில் நடத்தல், அரசாங்கத்தைக் கவிழ்க்க வேண்டுமென்று பேசுதல் போன்ற குற்றங்களுக்காகக் கொண்டுவரப்பட்ட வழக்குகளும் அதிகமானவையாகும்.

மாவட்ட நீதிமன்றங்களுக்கு மேல் மட்டத்தில், மேல் முறை யீட்டு நீதிமன்றங்கள் (**Courts of Appeal**) இருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடு பதினொரு நீதிப் பிரிவுகளாகப் (**Judicial Circuits**) பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிலும் ஒரு அப்பீல் நீதிமன்றமிருக்கும். இந் நீதிமன்ற மொவ்வொன்றிலும் மூன்று முதல் ஒன்பது நீதிபதிகளும் ஒரு தலைமை நீதிபதியும் இருப்பார்கள். இந் நீதிமன்றத்தில் நீதிபதிகள் மூன்று பேர்களைக் கொண்ட குழுவாக அமர்ந்து வழக்கு விசாரணை செய்வார்கள். சில முக்கியமான வழக்குகளில் நீதிமன்றத்திலுள்ள நீதிபதிகள் அனைவரும் குழுவாக அமர்ந்து வழக்கைக் கேட்பார்கள். இதற்கு எடுத்துக் காட்டாக 1952ஆம் ஆண்டில் ஜனாதிபதி ட்ரூமன் எஃகு ஆலைகளைக் கைப்பற்றியதைத் தொடர்ந்து எழுந்த வழக்கைக் கூறலாம்.

மாவட்ட நீதிமன்றங்களில் வழங்கப்பட்ட தீர்ப்பை எதிர்த்துக் கட்சிக்காரர்கள் இந்த மேல் முறையீட்டு நீதிமன்றங்களுக்கு மேல் முறையீடு செய்துகொள்ளலாம். மேல்முறையீடு மூலமாக மாவட்ட நீதிமன்றங்களிலிருந்து வரும் வழக்குகளோடு, தேசிய தொழிலாளர் உறவுகள் கழகம் (**National Labour Relations Board**), தேசிய பாதுகாப்பு, மாற்றுக் கழகம் (**Federal Securities and Exchange Commission**), போன்ற கூட்டாட்சி ஒழுங்குமுறை செயலிகளிடமிருந்தும் வழக்குகள் மேல் முறையீட்டு நீதிமன்றத் தின் பரிசீலனைக்கு வருகின்றன. ஒழுங்குமுறைச் செயலிகளிட மிருந்து வரும் வழக்குகள் காங்கிரசால் இயற்றப்படும் சட்டங்கள டிப்படையில் சட்டத்தவறுகள் நடந்து விடாமல் பார்த்துக்கொள் வதற்காக இந் நீதிமன்றங்களிடம் வருகின்றன.

1962ஆம் ஆண்டில் 4000 க்கும் மேற்பட்ட வழக்குகள் மேல் முறையீட்டு நீதிமன்றங்களால் பைசல் செய்யப்பட்டன. இவை களில் சுமார் 850 வழக்குகள் ஒழுங்குமுறை செயலிகளிடமிருந்தும், 3000 வழக்குகள் மாவட்ட நீதிமன்றங்களிடமிருந்தும் வந்தன.

சுமார் தொண்ணூறு வழக்குகள் மேல்முறையீட்டு நீதிமன்றங்க ளிலேயே முதன்முறையாகத் தனியாக இயற்றப்பட்ட சட்டங்களை ஆதாரமாகக் கொண்டு தோன்றின. 1962ஆம் ஆண்டு புள்ளி விபரங்கள்படி மூன்று விழுக்காட்டிற்கும் குறைவான குற்றவியல் வழக்குகளும், ஆறு விழுக்காட்டிற்கும் குறைவான சிவில் வழக்கு களும் மாவட்ட நீதிமன்றங்களிலிருந்து மேல்முறையீட்டு நீதி மன்றங்களுக்கு மேல் முறையீடு வாயிலாக வந்தனவெனத் தெரிய வருகிறது.

மேற்சொல்லப்பட்ட மேல்முறையீட்டு நீதி மன்றங்களோடு கூட, சுங்கம் மற்றும் புதுப்பொருள் உரிமை வழங்கும் (The Court of Customs and Patent Appeals), கோரிக்கைகள் நீதிமன்றமும் (Court of Claims) ஆக இரண்டு இணைநீதி மன்றங்கள் இருக் கின்றன. இவை ஒவ்வொன்றிலும் ஐந்து நீதிபதிகள் இருக் கிறார்கள்.

கூட்டாட்சி நீதித்துறை அமைப்பின் மேல் இறுதி மட்டத்தில் அமெரிக்க உச்ச நீதிமன்றம் (United States Supreme Court) இருக் கிறது. கூட்டாட்சி அரசியல் சட்டம், கூட்டாட்சி அரசாங்கச் சட்டங்கள், இதர கூட்டாட்சி சம்பந்தப்பட்ட வழக்குகளும் விவகாரங்களும் உச்ச நீதிமன்றத்தின் எல்லைக் குட்பட்டவை யாகும். உச்ச நீதிமன்றத்தின் சிறப்பும், பணிகளும் தனித் தன்மை வாய்ந்தவையாதலின் அதனுடைய அமைப்புப் பணிகள் பற்றிய செய்திகள் தனியாக, கீழே விவரிக்கப்படுகின்றன.

**உச்ச நீதி மன்றத்தின் அமைப்பும், அதிகாரங்களும்:** 'அமெரிக்க ஐக்கியநாடுகளின் நீதி அதிகாரம் உச்ச நீதி மன்றமொன்றிடமும், காங்கிரசினால் அவ்வப்போது ஏற்படுத்தப்படும் இதர கீழ்மட்டத்தி லுள்ள நீதி மன்றங்களாலும் செலுத்தப்படும்' என்று அரசியல் சட்டத்தின் மூன்றும் விதி கூறுகிறது. உச்ச நீதி மன்றத்தில் எத்தனை நீதிபதிகள் இருக்க வேண்டுமென்பதை அரசியல் சட்டம் கூறாததால், அவர்களின் எண்ணிக்கை காங்கிரசால் அவ்வப்போது தீர்மானிக்கப்படும். 1789ஆம் ஆண்டு முதல் 1869ஆம் ஆண்டு வரையிலான காலத்தில் நீதி மன்றத்தின் அளவு ஐந்து முதல் பத்தாக மாறி மாறி இருந்திருக்கிறது. காங்கிரஸ் நீதிபதிகளின் எண்ணிக்கையை இருமுறை குறைத்தும், ஐந்து முறை அதிகரித்து மிருக்கிறது. இம் மாற்றங்களில் சில புதிய மேல் முறையீட்டு நீதிமன்றங்கள் ஏற்படுத்தப் பட்டதால் அவைகளுக்குத் தலைமை வகிக்கப் புதிய நீதிபதிகள் நியமிக்கப்பட்டதனாலாகும். இதர சில சமயங்களில் ஏற்பட்ட மாற்றங்கள் அரசியல் காரணங்களுக்காக வாகும். ஒன்பது பேர்களைக் கொண்ட இந் நீதி மன்றத்தின்

எண்ணிக்கையில் 1869 ஆம் ஆண்டுக்குப் பிறகு மாற்ற மெதுவும் செய்யப்படவில்லை. 1937 ஆம் ஆண்டில், 1935 முதல் 1937 வரை யிலான காலத்தில் 'புது நோக்குச்' சட்டங்களை உச்ச நீதி மன்றம் நிராகரித்த பிறகு, நீதி மன்றத்திலிருந்த எழுபது வயதான நீதிபதி யொருவர் பதவியிலிருந்து ஓய்வு பெறுதிருந்தால் அவருக்குப் பதிலாக வயதில் குறைந்த ஒருவரை மாற்று நீதிபதி யாக நியமிக்கத் தேவையான அதிகாரத்தைத் தனக்குத் தரக் கூடிய சட்ட மொன்றை ஜனதிபதி ரூஸ்வெல்ட் பிரேரேபித்தார். இது நீதிமன்றத்தில் நீதிபதிகளின் எண்ணிக்கையை அதிகபட்ச மாகப் பதினெட்டாக உயர்த்தியிருக்கக்கூடும். ரூஸ்வெல்டின் இந்த நீதி மன்றத்தைத் திரட்டும் (Court-Packing) திட்டத்தை அவருடைய எதிர்ப்பாளர்கள் தாக்கினர்கள். அத் திட்டத் தின் மாபெரும் தோல்வி, ஒன்பதின்மரைக் கொண்ட நீதி மன்றம் நிலைபெற்று விட்டதை எடுத்துக் காட்டு கிறதென அரசியலறிஞர்கள் கருதுகிறார்கள். ஆயின் அத் திட்டம் உண்மையிலேயே தோல்வியைத் தழுவியதாகச் சொல்வதற்கில்லை. ஏனெனில் உச்ச நீதிமன்றம் பொதுமக்களின் கருத்திற்கும் தேவைக்கும் தகுந்தாற்போலத் தன்னுடைய முந்தைய தீர்ப்பு களைத்தானகவே மாற்றிக்கொண்டதைக் குறிப்பிடலாம். இவ் வாறு நீதிமன்றம் தன் போக்கை மாற்றிக் கொள்ளாமல் இருந் திருக்குமானல், அத் திட்டம், வற்புறுத்தலின் பேரில் காங் கிரசால் நிறைவேற்றப்பட்டிருக்கக் கூடும்.

உச்ச நீதிமன்றத்தின் அதிகார எல்லை இரண்டாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. அயல்நாட்டு இராஜதந்திரிகள் அல்லது கூட் டாட்சியிலுள்ள இராச்சியமொன்று சம்பந்தப்பட்ட வழக்கில் உச்ச நீதிமன்றத்திற்கு மூல அதிகார எல்லையுண்டு. அதாவது எடுத்த எடுப்பிலேயே இத்தகைய வழக்கை, உச்சநீதிமன்றம் 'முதல் நிலை' (First instance) நீதிமன்றமாக அமைந்து, உண்மைகள் (facts) என்ன, சட்டமென்ன என்பதையெல்லாம் விசாரணை செய்யும். ஆனல் இத்தகைய வழக்குகள் மிக சொற் பமே. 1952 முதல் 1962 வரை நான்கு ஆண்டுகளில் மொத்தம் பதினறு வழக்குகளே உச்ச நீதிமன்றத்திடம் நேரிடையாக வந்தன. இவ் வழக்குகள் எண்ணிக்கையில் குறைவானவையாக இருந்தபோதிலும் சட்ட, நீதித்துறையில் மிக முக்கியம் வாய்ந்த வைகளாக இருப்பதோடு, அரசியலில் சில சமயங்களில் பதட்டத்தை ஏற்படுத்துபவைகளாக இருக்கின்றன. இராச்சியங் களுக்கிடையே ஏற்படும் வழக்குகள், பெரும்பாலும், நில எல்லைகள், நீர் உரிமைகள், வரிவிதிக்கும் அதிகாரம் சம்பந்தப் பட்டவைகளாக, பல ஆயிரக்கணக்கான டாலர் பெறுமான

முடையவைகளாக இருக்கின்றன. உதாரணமாக, அரிசோனு (Arizona), கலிஃபோர்னியா இராச்சியங்களுக்கிடையேயுள்ள கோலராடோ (Colorado) நதிநீர்தாவாவைக் குறிப்பிடலாம். மூலதன்மையுடைய பெரிய வழக்குகளுக்கு எடுத்துக்காட்டாக, கலிஃபோர்னியா, டெக்சாஸ், லூசியானு, ஃபிளாரிடா போன்ற இராச்சியங்களுக்கும் கூட்டாட்சி அரசாங்கத்திற்குமிடையே நிலத்திற்கு அடியில் கிடைக்கக்கூடிய எண்ணெயைக் கண்டுபிடித்து யார் பயன்படுத்துவது என்பது பற்றி எழும் உரிமைவாதப் பிரச்சினையைக் குறிப்பிடலாம்.

இதர எல்லா வழக்குகளிலும் உச்ச நீதிமன்றம் மேல்முறையீட்டு அதிகார எல்லையையுடைதாகும். விசாரணை நீதிமன்றங்களும் (trial Courts), இதர கீழ்மட்டத்திலுள்ள மேல்முறையீட்டு நீதிமன்றங்களும் அளித்துள்ள தீர்ப்புகளை எதிர்த்து மேல்முறையீடு செய்யப்படுமானுல் அவ் வழக்குகளை மறுபரிசீலனை செய்யும் அதிகாரம் கொண்டதாகும். இப் பகுதியின் பிறிதோரிடத்தில் தரப்பட்டுள்ள விளக்கக் குறியீட்டுப்படத்தில் காட்டப்பட்டுள்ளது போல, உச்சநீதிமன்றத்திற்கு மேல்முறையீடு மூலமாக வழக்குகள் கூட்டாட்சி மாவட்ட நீதிமன்றங்கள், மேல்முறையீட்டு நீதிமன்றங்களிடமிருந்தும், இராச்சிய நீதிமன்றகளிடமிருந்தும் வருகின்றன. கூட்டாட்சி நீதித்துறையமைப்பில் உச்சநீதிமன்றம் இறுதித் தீர்ப்பளிக்கும் அதிகாரமுடையதென்று தெளிவாக அரசியலமைப்புக் கூறுவதால் கீழ்மட்டத்திலுள்ள நீதிமன்றங்களின் தீர்ப்புகளை அது மறுபரிசீலனை செய்வது ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதோடு, இது பற்றிய சச்சரவுகள் அந் நாட்டு நீதித்துறை வரலாற்றில் இது காறும் ஏற்படவில்லை. ஆனுல், இராச்சிய நீதிமன்றங்களின் முடிவுகளை உச்சநீதிமன்றம் பரிசீலனை செய்வது குறித்து தாமஸ் ஜெபர்சன் கால முதல் இக் காலம் வரை பலத்த வாக்குவாதமும், சர்ச்சைகளும் இருந்து வருகின்றன. இராச்சியங்களின் உரிமைகளைத் தீவிரமாக ஆதரிப்பவர்கள், அமெரிக்கக் குடியரசு தோன்றிய முதல் முப்பது, நாற்பது ஆண்டுகளில் 'கூட்டாட்சி அமைப்பில் இராச்சியங்கள் அவற்றின் அதிகார எல்லையில் தங்கள் விருப்பப்படி காரியங்களைச் செய்து கொள்ளும் உரிமையுடையவை என்றும், ஒவ்வோர் இராச்சியமும் அதன் எல்லைக்குட்பட்ட பகுதிகளில் எல்லாப் பிரச்சினைகளிலும் சுதந்திரமாக இறுதி முடிவு செய்யும் அதிகாரமுடையதெனவும்' சாதித்தார்கள். ஆனுல், உச்ச நீதிமன்றம் இவ் வாதத்தை ஏற்க மறுத்ததோடு, அதற்குப் பதிலாக 'எங்குக் கூட்டாட்சிப் பிரச்சினையொன்று இராச்சிய நீதிமன்ற மொன்றினுல் தீர்மானிக்கப் படுகிறதோ அங்குக் குடிமக்களின் கூட்டாட்சி உரிமைகளைப்

பாதுகாக்கவும், கூட்டாட்சி முழுவதும் தேசிய அரசியலமைப்புச் சம்பந்தப்பட்ட விளக்கங்கள் ஒரே மாதிரியாக இருக்குமாறு பார்த்துக்கொள்ளவும், அத்தகைய பிரச்சினையை உச்ச நீதி மன்றம் பரிசீலிக்கவேண்டியதும், தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு தீர்ப்பளிக்கவேண்டியதும் அவசியமாகும்' என்று வற்புறுத்தியது. இது சம்பந்தப்பட்டவரை வழக்கின் தன்மை தான் முக்கியமேதவிர, அந்த அடிப்படையில்தான் கூட்டாட்சிப் பரிசீலனை எடுத்துக்கொள்ளப்படவேண்டுமே தவிர, 'வழக்கில் தீர்ப்பு வழங்கிய இராச்சிய நீதிமன்றம் எது என்ற அடிப்படை முக்கியமன்று என்றும் கூறப்பட்டது. இப் பிரச்சினையில் நீதி மன்றத்தின் கருத்து ஏற்றுக்கொள்ளப்படவேண்டும் என்று கருதியவர்கள் அரசியலமைப்புச் சட்டத்தின் ஆரும் விதியைச் சுட்டிக் காட்டினர். அவ் விதி அரசியலமைப்புச்சட்டம், கூட்டாட்சிச் சட்டங்கள், உடன்படிக்கைகள் (treaties) 'நாட்டின் தலையாய சட்டமாக இருக்கும்' என்றும், 'ஒவ்வோர் இராச்சியத்திலுமுள்ள நீதிபதிகள் அதற்குக்கட்டுப்பட்டு நடக்கவேண்டுமென்றும், எந்த இராச்சியமொன்றிலும் இயற்றப்படும் சட்டங்கள் கூட்டாட்சி அரசியல் சட்டத்திற்கு மாறுபட்டிருக்கக் கூடாதென்றும்' கூறுகிறது. எனவே, நாட்டின் 'தலையாயசட்டத்தை' உச்ச நீதி மன்றம் நடைமுறைக்குக்கொண்டு வருவதுதான் நேர்மையானதென்றும், கூட்டாட்சி உரிமைகள் சம்பந்தப்பட்டவற்றில் இராச்சியங்களின் விளக்கங்கள் உச்ச நீதிமன்றத்தால் ஏற்றுக் கொள்ளப் படவேண்டியதில்லையென்றும் எடுத்துக்காட்டப்பட்டது.

உச்ச நீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகாரம் காங்கிரசினல் அவ்வப்போது சட்டங்களின் மூலமாக வரையறை செய்யப்படும் என்று அரசியல் சட்டத்தின் மூன்ரும் விதி கூறுகிறது. அதன்படி, 1789ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நீதித்துறைச் சட்டங்களுக்குப் பிறகு பல சட்டங்கள் காங்கிரசால் இயற்றப்பட்டிருக்கின்றன. அச் சட்டங்கள் ஒன்றுக்கொன்று முரண்பாடில்லாத பல விதிகளையும் அம்சங்களையும் கொண்ட அரசியல் சட்டமொன்றைத் தேசத்திற்கு வழங்குவதற்கு உச்சநீதி மன்றத்திற்கு வாய்ப்புகளையும் அதிகாரத்தையும் அளித்துள்ளன. இருப்பினும் காங்கிரசுக்கு ஒவ்வாத வகையில் உச்ச நீதிமன்றம் பணியாற்றுமானல்—அல்லது அதன் விருப்பத்திற்கும் கருத்துகளுக்கும் மாறுபட்ட முறையில் நீதிமன்றம் இயங்குமானல் அதை எதிர்க்கவும், சில சமயங்களில் பயமுறுத்தவும் காங்கிரஸ் தவறுவதில்லை.

இத்தகைய நிகழ்ச்சியொன்று 1868ஆம் ஆண்டு நடைபெற்றது. 1867ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டமொன்றின்படி கூட்டாட்சி இராணுவ அதிகாரிகளால்கைது செய்யப்பட்டு மிசிசிபி

யில் காவலில் வைக்கப்பட்ட மக்கார்தில் (Mccardle) என்ற பத்திரிகாசிரியர் ஒருவர் தம்மை உடனடியாக விடுவிக்க வேண்டுமென்று கோரி உச்ச நீதிமன்றத்தில் நேரிடையாக வழக்குத் தொடர்ந்தார். அவர் தம்மை புனரமைப்புச் சட்டங்கள் (Reconstruction Acts) அடிப்படையில் கைது செய்தது தவறு என்றும் அச்சட்டங்கள் அரசியல் சட்டத்திற்கு மாறானவை என்றும் வாதித்தார். உச்ச நீதிமன்றத்தில் வழக்கு விசாரணை நடைபெற்ற முறையையும், விதத்தையும் கவனித்த—அப்போது காங்கிரசில் பெரும்பான்மைக் கட்சியினராக இருந்த குடியரசுக் கட்சியினர்—புனரமைப்புத் திட்டங்களை உச்ச நீதிமன்றம் செல்லாதவை என்று அறிவித்துவிடும் என்று கருதினர். அதைத் தடுக்கவும், நீதிமன்றத்தை எச்சரிக்கவும் அவர்கள் ஜனாதிபதி ஆந்துரு ஜான்சனின் (Andrew Johnson) மறுப்பாணையையும் மீறி சட்டமொன்றை இயற்றியதன் வாயிலாக உச்ச நீதிமன்றத்தின் அவ் வழக்கு சம்பந்தப்பட்ட அதிகாரத்தை அகற்றினர். அதன் பிறகு உச்ச நீதிமன்றம், அதற்குள்ள அதிகாரத்தை அகற்றுவதற்கு காங்கிரசுக்கு அதிகாரமிருக்கிறதென்று கூறி மக்கார்தில் தொடர்ந்த வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டது. இருப்பினும் மக்கார்தில் இராணுவம் தம்மைக் கைது செய்தது சரியானதன்றுவென்று கூட்டாட்சி மாவட்ட அல்லது மேல் முறையீடு நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்ந்து மேல் முறையீடு செய்து கொள்வதற்குத் தமக்குள்ள உரிமை அடிப்படையில் உச்ச நீதிமன்றம் அவ் வழக்கை விசாரணை செய்து தீர்ப்பு அளிக்குமாறு செய்வதற்கு நீதித்துறையமைப்பில் ஏற்பாடுகள் இருந்தன வென்பதை இங்குக் குறிப்பிடுவது அவசியமாகும்.

உச்ச நீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகாரம் கட்டாயமான தென்றும், உசிதப்படியான தென்றும் இரு வகைப்படும். கட்டாயத் தன்மை வாய்ந்த மேல் முறையீட்டு வழக்குகள் இராச்சிய அல்லது கூட்டாட்சியின் இதர நீதிமன்றங்களிலிருந்து மேல் முறையீட்டிற்காக வருபவை. அல்லது அந்த நீதிமன்றங்களால் வழக்கு முக்கியமானதும், சிக்கலானதுமான சட்டப் பிரச்சினையை மையமாகக் கொண்டது எனச் சான்றிதழ் அளித்து அதை உச்ச நீதிமன்றம் பரிசீலனை செய்ய வேண்டு மென்று அனுப்பி வைப்பதால் வரும். உசிதப்படியான வழக்குகள், இராச்சிய அல்லது கூட்டாட்சி நீதிமன்ற மொன்று வழக்கொன்றில் செய்திருக்கக் கூடிய தவறுகளைக் கண்டறிவதற்காக நீதிபதிகளைக் கேட்டுக் கொள்ளும் விண்ணப்பம் அடிப்படையில் வருபவைகளாகும். ஆனால், உச்ச நீதிமன்றம் காரணங்களைக் கூறாமலேயே அத்தகைய விண்ணப்பங்களை நிராகரிக்கலாம். அல்லது தனது பார்வைக்குக் கொண்டுவரப்பட்ட அப் பிரச்சினை

களை அச் சமயத்தில் பரிசீலிக்க விரும்பாததாலும் மேல் முறையீட்டிற்கு அனுமதி மறுக்கலாம். நடைமுறையில், அப்பீலுக்காக வரும் ஒரு சில வழக்குகளை, அவை 'கூட்டாட்சி பிரச்சினை' சம்பந்தப்பட்டவைகளாக இல்லையென்று கூறி நீதிபதிகள் எடுத்துக் கொள்ள மறுக்கலாம். இதனால் 'கட்டாயமான' வகை அதிகார எல்லையும் 'உசிதமான'தாகிவிடுகிறது. மிக முக்கியமான வழக்குகளுக்கு அவசியமான எச்சரிக்கை மிகுந்த பரிசீலனை கிட்டாமல் போகும் என்று நீதிபதிகள் கருதும் போது மேற்கூறியவாறு செய்யப்படுகிறது. 1961—62-ல் மட்டும் சுமார் 2,000 வழக்குகள் விண்ணப்ப மூலமாகவும், எண்பத்தெட்டு வழக்குகள் மேல் முறையீட்டு மூலமாகவும் உச்ச நீதிமன்றத்திடம் வந்தன. விண்ணப்ப வழக்குகளில் ஏழு விழுக்காட்டையும் மேல் முறையீடு வழக்குகளில் நாற்பது விழுக்காட்டையுமே நீதிமன்றம் பரிசீலனைக்கு ஏற்றுக் கொண்டது. ஒரு சமயம் தலைமை நீதிபதி ஃபிரெட் வின்சன் 'வழக்குகளை மீண்டும் விசாரணை செய்வதற்குக் கடைசியாக ஒரு வாய்ப்பைத் தருவதற்காக உச்சநீதிமன்றம் அதன் கூட்டத்தை நடத்தவில்லை; உச்ச நீதிமன்றத்தால் விசாரணை செய்யப்படவேண்டும் என்று வற்புறுத்தப்படுகிற ஒவ்வொரு வழக்கும் ஏதாவதொரு விசாரணை நீதிமன்றம் அல்லது ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மேல் முறையீட்டு நீதிமன்றங்களால் விசாரித்து முடிவு செய்யப்பட்டதாகும். உச்ச நீதிமன்றத்தின் பணி அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்புச் சட்டத்தை விளக்குவதும், கூட்டாட்சி நீதிமன்றங்களும் இராச்சிய நீதிமன்றங்களும் வழக்கு விசாரணையில் பின்பற்றும் கொள்கைகளில் ஒரே மாதிரியான தன்மை இருக்குமாறு பார்த்துக்கொள்வதும், கூட்டாட்சி நீதிமுறையை மேற்பார்வை செய்வதும் ஆகும்' என்று குறிப்பிட்டார்.

உச்ச நீதிமன்றத்தின் பணியையும் அதன் அலுவல்களின் அளவையும், மூலாதாரங்களையும், தன்மையையும் தெரிந்து கொள்ளவேண்டுமாயின் அது 1961-ஆம் ஆண்டு அக்டோபர் முதல், 1962-ஆம் ஆண்டு ஜூன் மாதம் வரை செய்த வேலையை ஊன்றிக்கவனித்தால் போதுமானதாகும்.

## உச்ச நீதிமன்றத்தின் 1961 ஆம் ஆண்டுப் பணிபற்றிய விபரங்கள்

**வழக்குகளின் எண்ணிக்கை—**

| | |
|---|---|
| தாக்கல் செய்யப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை | 2185 |
| அதற்கு முந்திய ஆண்டில் பைசலாகாமல் இருந்த சட்டப் பிழைகள் சம்பந்தமான ஏழை எளியவர்களின் வழக்குகளின் எண்ணிக்கை | 385 |

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிமன்ற முறை 123

பைசல் செய்யப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை 2142
அடுத்த ஆண்டிற்கு ஒத்திவைக்கப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை (பெரும்பாலும் ஏழைகளினுடையவை) 428

வழக்குகள் எங்கிருந்து வந்தனவோ அவைகளில் பைசல் செய்யப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை (2142)
கூட்டாட்சி நீதிமன்றங்கள் 1050

கூட்டாட்சி மேல் முறையீட்டு நீதிமன்றங்கள் 973
கூட்டாட்சி மாவட்ட நீதிமன்றங்கள் 39
தனி கூட்டாட்சி நீதிமன்றங்கள் 38
இராச்சிய நீதிமன்றங்கள் 971

ஏழைகளின் வழக்குகள் 121

தன்மையடிப் படையில் வழக்குகளின் எண்ணிக்கை (2142)
தராதரங்களின் அடிப்படையில் முடிவு செய்யப்பட்டவை 171

பரிசீலனை மறுக்கப்பட்டவை 2071

தராதரங்களின் அடிப்படையில் முடிவு செய்யப்பட்ட வழக்குகள் (171)

கீழ்மட்ட நீதிமன்றங்களின் முடிவுகள் ஏற்கப்பட்டவைகள் 46

கீழ்மட்ட நீதிமன்றங்களின் முடிவுகள் மாற்றப்பட்டவைகள் 125

நீதிமன்றத்தால் எழுதப்பட்ட முழுக் கருத்துகள் 96

ஆணைகளும், அறிவிப்புக்களும் 75

தராதரங்கள் அடிப்படையில் முழுக்கருத்துகளோடு முடிவு செய்யப்பட்ட வழக்குகளின் விபரங்கள் (96)

அரசியலமைப்புச் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் 29

அரசியலமைப்புச் சட்டம் சாராத விஷயங்கள் 67

சிவில் வழக்குகள் 60

குற்றவியல் வழக்குகள் 36

கூட்டாட்சி நீதிமன்றங்களிலிருந்து 65

இராச்சிய நீதிமன்றங்களிலிருந்து 31

ஒரு மனதான முடிவுகள் 37

| | |
|---|---|
| மாறுபட்ட முடிவுகள் | 59 |
| உச்ச நீதிமன்ற வியாச்சியத்தில் அமெரிக்க அரசாங்கத்தின் பங்கு, பணி | |
| அமெரிக்கா பங்கு பெற்ற வழக்குகளின் மொத்த எண்ணிக்கை | 850/2142 |
| இவைகளில் தராதரப்படி முடிவு செய்யப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை | 106 |
| அரசாங்கத்திற்குச் சாதகமாக செய்யப்பட்ட முடிவுகள் | 60 |
| அரசாங்கத்திற்கு எதிராக முடிவு செய்யப்பட்ட வழக்குகள் | 24 |
| சாதகமாக அல்லது பாதகமாக என்று பிரிக்க முடியாத வழக்குகள் | 22 |

மேற் கூறப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து உச்ச நீதிமன்றத்திலுள்ள ஒன்பது நீதிபதிகளும் மலைபோலக் குவியும் வழக்குகளைப் பரிசீலனை செய்ய வேண்டியதிருக்கிறது என்பது புலனாகும். எனினும், அவர்கள் தங்களுக்குள்ள உசித அதிகாரங்கள் என்ற போர்வையைப் பயன்படுத்துவதன் மூலமாக வழக்குகளை விசாரிப்பதையும், விசாரிக்க மறுப்பதையும் செய்து மிக முக்கியமான வழக்குகளை விசாரணை செய்வதற்கு நேரம் கிடைக்குமாறு செய்து கொள்கிறார்கள். நீதிமன்றம் முழுக் கருத்துகளோடு முடிவு செய்த தொண்ணூற்றாறு வழக்குகளைச் சீர்தூக்கிப் பார்க்கும் போது எந்த அளவிற்கு நீதிமன்றம் சட்ட நுணுக்கத்திலும், சட்டப் பிரச்சினைகளைப் பிறர்புரிந்து கொள்ளுமாறு செய்வதிலும் அறிவாற்றலும், திறமையும், நேர்மையுமுடைய நீதிபதிகளைப் பெற்றிருக்கிறதென்பது தெளிவாகும். நீதிமன்றம் விசாரணை செய்து தீர்ப்பு வழங்கிய, சட்ட மாவட்டங்களின் (legislative districts) சரியாக அமைக்கப்படாத எல்லைகளை எதிர்த்து வாக்காளர்கள் ஏன் வழக்காட வேண்டும்?[1] உள்ளிருந்துகொண்டே (sit-in) அமைதியைப் பாதிக்கும் வகையில் நியூஆர்லியன்சில் (New Orleans) போராட்டம் நடத்தியவர்களின் செயல் ஏன் சட்ட பூர்வமானதன்று?[2] பிரௌன் செருப்புக்கடையும் (Brown shoe company) கின்னிசெருப்புக்கடையும் (Kinney shoe company) ஒன்றாக இணைக்கப்பட்டது, ஏன் கூட்டாட்சிச் சட்டத்திற்குமாறானது?[3] காங்கிரசை அவமதித்த குற்றத்திற்காகத் தொழி

[1]Baker V. Carr.
[2]Garner V Lousiana, 368 U.S. 157 (1961).
[3]Brown shove Co., NC. V. United States, 370 U.S. 294 (1962).

லாளர் கழகத் தலைவர் மௌரிஸ் ஹச்சீசன் (Maurice Hutcheson) காங்கிரசால் தண்டிக்கப்பட்டது ஏன் செல்லுபடியாகக்கூடிய தாகும்?[1] என்பனபோன்ற வழக்குகள் மிகமுக்கியத்துவம் வாய்ந்த வைகளாகும். மேலும், தொழிலாளர் கழகம் வேண்டுமென்று கேட்டதைக்காட்டிலும் அதிகமான ஊதியமும், உடல் நல மின்மைக்காக அதிகமான விடுமுறையும் தொழிலாளர்களுக்கு ஒரு சில வேலைக்கமர்த்துவோர் தந்தது எவ்வாறு தாப்டு-ஹார்ட்டிலி (Taft-Hartley) சட்டத்திற்குமாறானதும் நேர்மையற்ற பழக்க மானதுமாகும் என்பது போன்ற வழக்குகளும்[2] நீதிமன்றத்தால் பரிசீலனை செய்யப்பட்டுத் தீர்ப்பளிக்கப்பட்டன




சாவி: அ—அப்பீல் அல்லது மேல் முறையீடு காரணமாக—on Appal

செ—செர்சியோரரி—certiorari

சா—சான்றிதழ்காரணமாக—on certification

[1]Hutcheson V. United States, 369 V. S. 599 (1962).
[2]Russell V. United states, 369 V. S. 749 (1962).

**1937ஆம் ஆண்டு முதல் உச்ச நீதிமன்றம் :** உச்ச நீதிமன்றத்தின் இப்போதைய பங்கு, பணியைத் தெரிந்து கொள்வதற்கு மிகச் சுலபமானதும் கருத்தைக் கவருவதுமான வழி அதனுடைய பணிகளையும், ஆட்டி வைக்கும் சக்திகளையும் இருவகைகளாகப் பிரித்து அறிவதேயாகும். முதலாவது, 1790-ல் நீதிமன்றம் அதன் முதல் கூட்டத்தைத் தொடங்கியது முதல் 'தொடர்ந்து நிரந்தரமாக இருந்துவரும் கூறுகள்'. இரண்டாவது, 1937-க்குப்பிறகு அதன் உள்ளிருந்தோ, அதற்கு வெளியிலிருந்தோ அதன் கவனத்தை ஈர்த்து வளர்ந்து வந்த 'புது அம்சங்கள்'.

**அமெரிக்க அரசாங்க—உச்ச நீதிமன்ற உறவுகளில் தொடர்ந்து நிலையாக இருந்துவரும் கூறுகள்:**

1. சமூக-பொருளாதாரத் துறைகளில் அவ்வப்போது முக்கியமாகக் கருதப்படும் பிரச்சினைகளை நீதிமன்றம் எப்போதும் எதிர்பார்த்திருப்பதாகும். அமெரிக்க உச்ச நீதிமன்றத்தின் வரலாறு பெரும்பாலும் அமெரிக்கர்களுடைய சொந்த விவகாரங்களில் குறிப்பாக, பல பிரிவினர்களிடையே ஏற்படும் சச்சரவுகள், அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்சினைகள் பற்றியதொரு வரலாறுகவே இருக்கும். ஏதாவதொரு பெரிய பிரச்சினை ஏற்பட்டு, அந்தப் பிரச்சினையில் தோல்வி கிட்டுமானல் தனிப்பட்டவர்கள் தங்களுடைய கட்சியில் உள்ள நியாயத்தைப் பற்றி வாதாடி வெற்றி பெறும் நோக்கத்தோடு உடனேயே நீதிமன்றத்திற்குச் சென்றுவிடுவார்கள். அவர்கள், நீதிமன்றங்களால் மூக்கறுபடுவார்களானலும், விடாமல் தொடர்ந்து முயற்சி செய்வதோடு வழக்கறிஞர்களும் புரிந்து கொள்ள முடியாதவாறு புதுப்புது யுக்திகளைக் கையாண்டு வழக்குகளில் வெற்றி பெறும் வாய்ப்புகளைத் தேடுவார்கள். இவ்வாறு நீதிமன்றத்தை நாடும் அமெரிக்கர்களது உளவியலைப் பல வகைகளில் விளக்கலாம். சிலர், அமெரிக்க மக்களிடையே காணப்படும் பழமை வாதத்திற்கும் முற்போக்கு வாதத்திற்குமிடையே ஏற்படும் கொள்கை மோதலின் எதிரொலி என்று அதனைக் கருதுகிருர்கள். வேறுசிலர், கட்சி முறையிலுள்ள பலமின்மையாலேற்படும் கொள்கையற்ற நிலை என்று கருதுகிருர்கள். இன்னும் சிலர் அது சட்டவாத, ஒழுக்கவாத மரபில் வந்தது என நினைக்கின்றனர். வேறு சிலர், பழமை வாதிகள், ஒரு நூற்றுண்டுக்கும் மேலான காலத்திற்கு முற்போக்கு வாதிகளின், முற்போக்குச் சட்டங்களைத் தோற்கடிப்பதற்குப் பயன்படுத்திய கருவியெனக் கூறினர்.

காரணங்கள் எவையானலும், எங்கு நடவடிக்கை தேவைப்பட்டதோ அங்கு உச்ச நீதிமன்றம் குறுக்கிடத் தவறவில்லை.

1790க்கும் 1860க்கும் இடைப்பட்ட காலத்தில் வாணிக ஒழுங்கு முறை, (commercial regulation), வரிவிதிப்பு (taxation) ஆகிய துறைகளில் இராச்சியங்களின் உரிமைகள் பற்றிய பிரச்சினை களில் நீதிமன்றம் முக்கியமான தீர்ப்புகளை அளித்திருக்கிறது. சொத்துரிமை, ஒப்பந்தங்கள் (contracts), அடிமைத் தன்மை (status of slavery) போன்றவற்றையும் நீதிமன்றம் ஆராய்ந்து தீர்ப்பளித்திருக்கிறது. 1865க்கும் 1920க்கும் இடைப்பட்ட காலத்தில் புனரமைப்பு (Reconstruction) விடுவிக்கப்பட்ட நீகிரோக்களின் உரிமைகள், அமெரிக்க முதலாளித்துவம் (capitalism) வளர்ந்து வந்த காலத்தில் கூட்டு முயற்சி ஒழுங்குமுறை (corporate enterprise), நிர்வாகத்தினருக்கும் தொழிலாளிகளுக்கு மிடையேயுள்ள உறவுகள், கூட்டாட்சி, இராச்சிய அரசாங்கங் களின் வரிகள் விதிக்கும் அதிகாரம், போர்க்காலத்தில் சிவில் உரிமைகள் போன்ற பல பிரச்சினைகளை நீதிமன்றம் கவனித்து வந்திருக்கிறது. 1920 முதல் 1937 வரையில், தொழில் பொரு ளாதாரத் துறைகளில் ஏற்பட்ட பெருமந்தம் (great depression), மீட்சி பற்றிய பெரும்பிரச்சினைகளிலும், சமூகப் பொதுநலம், தொழிலாளர் உறவுகள், வேளாண்மைக் கொள்கை, பொருளா தார விஷயங்களில் இராச்சியங்களினுடையவும் கூட்டாட்சியி னுடையவும் அதிகார எல்லைகளை நிர்ணயித்தல் போன்றவற்றிலும் நீதிபதிகள் தீர்ப்புகளை வழங்கியிருக்கிறார்கள். 1937க்குப் பிறகு இன்று வரையிலுமான காலத்தில் கெடுபிடிப் போராட்டத்தில் (cold war) விசுவாசம் (loyalty) பாதுகாப்பு (security) பற்றிய துறைகளிலும், இன, நிற ஒதுக்கல், திருச்சபைக்கும் அரசுக்கு மிடையேயுள்ள உறவுகள், நிர்வர்கத்தினருக்கும் தொழிலாளர் களுக்குமிடையேயுள்ள உறவுகள், குற்றவியல் வழக்குகள் சம்பந்தப் பட்டவைகளில் புலனாய்வு, விசாரணைகள் பற்றி அரசாங்கம் பின் பற்ற வேண்டிய நடைமுறை விதிகள் போன்ற துறைகளிலும் நீதி மன்றம் முக்கியமான தீர்ப்புகளை வழங்கியிருக்கிறது.

இவையெல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாகப் பார்க்கின்ற போது நீதிமன்றம் அரசியல் சட்டத் துறையில் மூன்று அடிப்படைத் தன்மைவாய்ந்தவைகளில் அக்கறை கொண்டிருந்தது தெரியவரும். கூட்டாட்சி அரசாங்கத்தின் மூன்று அங்கங்களுக்கிடையே சம நிலையை ஏற்படுத்தல்; சிறந்த பொருளாதார அமைப்பொன்றை வளர்த்தல்; சொத்து, சுதந்திரம் ஆகிய தனி நபர்களின் உரிமை களைப் பாதுகாத்தல் ஆகிய மூன்றுமே அவை. இவை ஒவ்வொரு துறையிலும் நீதிமன்றம் அதன் கருத்துப்படி அரசியலமைப்பு என்ன கூறுகிறதென்பதை எடுத்துக்காட்டியதுடன், சமூகப் பொருளாதார, தொழில் நுணுக்கத்துறைகளில் தோன்றிய புது

வழக்குகளே, அதற்குமுன் நீதிமன்றத்தால் வழங்கப்பட்ட தீர்ப்புகளோடு ஒப்பிட்டுச் சரிசெய்து, தேவையான இடங்களில் புதுத் தீர்ப்புகளேயும் அளித்துச் சமநிலையை ஏற்படுத்த முயற்சி செய்துவந்திருக்கிறது. மேற்கூறப்பட்ட மூன்று கருத்துகளில் கவனம் செலுத்திய போது, ஆண்டாண்டு காலமாக ஏற்பட்ட வாதப்பிரதிவாதங்களே தீர்த்துவைக்கும் முயற்சியில் அரசியலமைப்பின் பல ஷரத்துகளேயும் பலமுறை விளக்க நேர்ந்திருக்கிறது. உள்நாட்டுப் போருக்கு முன்பான காலத்தில் அரசியலமைப்பிலிருந்த, வாணிக ஷரத்துகளேயும் விளக்கியதன் வாயிலாக உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகங்களேயும், வெளிநாடுகளுடனுன ஒப்பந்தங்கள் நிறைவேற்றப்படுவதற்கான சுமுகமான சூழ்நிலேகளேயும் ஏற்படுத்த நீதிமன்றம் முயன்று வந்திருக்கிறது.

உள்நாட்டுப் போருக்கு வாணிகம், ஒப்பந்தம் பற்றிய அம்சங்களோடுகூட, உயிர் (life), உடைமை (property), சுதந்திரம் (liberty) ஆகிய அம்சங்களில் உச்சநீதிமன்றம் அதன் முடிவுகளேத் தரவேண்டியதாயிற்று, குறிப்பாக நீகிரோக்களுக்குக் கிடைக்கவேண்டிய உரிமைகள், நீதிப்பரிகாரத்திற்குத் தேவையான தகுந்த சூழ்நிலேகள் நீதிமன்ற அலுவல்களில் சிறப்பிடம் பெற்றன.

இவ்வாறு அவ்வப்போது ஒருசில பிரச்சினேகள் திடீரென முக்கியத்துவம் பெற்று அவைகளில் நீதிமன்றம் உடனடியாக கவனம் செலுத்தவேண்டியதும், சர்ச்சைகளேத் தீர்த்துவைக்க வேண்டியதுமாயிற்று என்றுலும், அப் பிரச்சினேகள் அனேத்துமே தொடர்ந்த தன்மையுடையவைகளாகவும் நிலேயானவைகளாகவும் இருந்துவருகின்றன. ஆனுல், அத் துறைகளில் ஏற்படும் எல்லா வழக்குகளும் உச்சநீதிமன்றத்திடம் வருவது கிடையாது. எவையெவை சிக்கல் நிறைந்தவையாயும், தெள்ளத்தெளிவான இறுதிமுடிவு தேவைப்படுபவையாகவும், கொந்தளிப்பை ஏற்படுத்தவல்லவைகளாகவுமிருந்தனவோ, அவையெல்லாம் உச்ச நீதிமன்றத்தின் பரிசீலனேக்கும் தீர்ப்புக்கும் வந்தன.

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினேகளுக்கும் வழக்குகளுக்கும் எடுத்துக்காட்டாக 1857-ஆம் ஆண்டிலேற்பட்ட அடிமைப் பிரச்சினேயையும் 1895-ல் வந்த வருமானவரி வழக்கையும் குறிப்பிடலாம். முதலாவது பிரச்சினேயில், நீதிமன்றம் அடிமைத்தனத்தை ஆதரித்தது. இரண்டாவது வழக்கில் கூட்டாட்சி வருமானவரி செல்லாததென அறிவித்தது. இதேபோல 1930க்குப்பிறகும் 1937க்கு முன்பும் ஹக்ஸ் (Charles Evans

Hughes) தலைமைநீதிபதியாக இருந்தபோது நீதிமன்றம் 'புது முறை'ச் சட்டங்கள் அரசியல் சட்டப்படி செல்லத்தகாதவை யென்று அறிவித்ததையும் குறிப்பிடலாம்.

இவ்வாறு நீதிமன்றம் சில சமயங்களில் தவிர்க்கக்கூடியவை களைத் தவிர்க்காமலும், தவிர்க்கக் கூடாதவைகளைத் தவிர்த்தும், நிதானம் தேவைப்பட்டபோது அவசரமாகவும், அவசரம் தேவைப்பட்டபோது நிதானமாகவும் தீர்ப்புகளை வழங்கியதன் காரணமாகப் பொதுமக்களின் கருத்துகளையும், விருப்பங்களையும் மதித்து நடக்கத் தவறிவிட்டதென்ற கடிந்துரைக்கு ஆளாக நேர்ந்தது. இருப்பினும், நீதிமன்றத்தின் இத்தகைய போக்குச் சில சமயங்களில் கைவிடப்பட்டுவிட்டது போலத் தோன்றினும் உண்மையில் இப்போதும் அப் போக்குத் தொடர்ந்திருந்து வருகிற தென்பதைப் பலரும் அவ்வப்போது சுட்டிக்காட்டி வரு கின்றனர்.

2 தீவிர சர்சைகளையும், நீதிமன்றதைமடக்கும் (Court Curbing) இயக்கங்களையும் நீதிமன்றம் எப்போதுமே தோற்றுவித்திருக்கிறது.

பல சிக்கல் மிகுந்த முக்கியமான பெரிய வழக்குகளில் அது அளித்த தீர்ப்புகளும், சக்திவாய்ந்த அரசியல், பொருளாதார, சமூக இயக்கங்களின் முயற்சிகளுக்கும் நோக்கங் களுக்கும் ஊறுவிளைவிக்கும் வகையில் அது தந்த முடிவுகளும், அமெரிக்க வரலாற்றில் அதனுடைய அதிகாரங்களை மட்டுப்படுத்த வேண்டுமென்று கோரும் பல போராட்டங்களையும் இயக்கங் களையும் தோற்றுவித்திருக்கின்றன. ஒவ்வோர் அரசியல் தலைமுறையிலும் (Political generation) ஏற்பட்ட இத்தகைய சர்ச்சைகளை எடுத்துக்காட்டுவது எளிதானதாகும். 1800-1830ல் மார்ஷல் தலைமையில் இயங்கிய நீதிமன்றத்தின் 'அதிகாரக்குவிப்பு' (Centralizing) தன்மையிலமைந்த முடிவுகள் ஜெஃபர்சன் (Jefferson) ஆதரவாளர்களால் எதிர்க்கப்பட்டு, நீதிமன்றம் குறைகூறப்பட்டது. 1830க்கும் 1850க்கும் இடைப்பட்ட காலத்தில் வாணிகத்தை ஒழுங்குபடுத்த அரசாங்கத்திற்கிருந்த அதிகாரத்தில் நீதிமன்றம் தலையிட்டபோது ஜாக்சனைப் (Jackson) பின்பற்றியவர்கள் அதனைத் தாக்கினர். அவ்வாறே அடிமை வியவகாரத்தில் அதன் தீர்ப்புகள் சாதகமாகவோ, பாதக மாகவோ இருந்தபோது அடிமைத்தனத்தை அகற்ற விரும்பிய வடக்கத்தியர்களும், அதைத்தொடர்ந்து நீடிக்க விரும்பிய தெற்கத்தியரும் நீதிமன்றத்தைக் கண்டித்தனர்.

1850க்கும் 1875க்கும் இடைப்பட்ட காலத்தில் நீதிமன்றத்தின் தீர்ப்புகள் பற்றிய எதிர்ப்பு மக்கார்தில் வழக்கு முடிவின் போதும், திரெத் ஸ்காட் (Dred Scott) என்ற நீதிபதியின் முடிவின் போதும் உச்சக் கட்டத்தையடைந்தது. 1880 முதல் 1900 வரை குடியானவர்களும், தொழிலாளர் இயக்கங்களின் தலைவர்களும் கூட்டாட்சி நீதித்துறையின் 'கூட்டுத் தன்மையை' (corporate) எதிர்த்து வந்தனர். 1860ஆம் ஆண்டுக்குப் பிறகு, இரண்டாவது தடவையாக 1896ல் உச்ச நீதிமன்றப் பிரச்சினை ஜனாதிபதி தேர்தல் பிரசாரத்தில் முக்கிய இடம் பெற்றது.

1900லிருந்து 1925 வரை, நீதிமன்றத்தின் 'தொழிலாளர் விரோத' (anti-Labour) ''முற்போக்கு விரோத' (anti-Liberal) தத்துவங்களை எதிர்த்து முற்போக்குவாதிகள் பெரிய தாக்குதலொன்றைத் தொடுத்தனர். 1925 முதல் 1950 வரை குறிப்பாக 1937 வரை 'புது நோக்குச்' சட்டங்கள் அரசியலமைப்புக்கு மாறானவை என்ற நீதிமன்றத்தின் தீர்ப்புகள் அரசாங்கத்திடமிருந்தும், மக்களிடத்திருந்தும் அலை அலையாக எதிர்கணைகளை ஏற்படுத்தின. இதனால் 'நீதிமன்றத்தை மடக்கும்' (Court packing) திட்டம் தோன்றியது குறிப்பிடத்தக்கதாகும்.

இறுதியாக, 1950க்குப் பிறகு உச்ச நீதிமன்றத்தின் சிவில் சுதந்திரங்கள், சிவில் உரிமைகள் பற்றிய முடிவுகள் சர்ச்சைக்கும், தாக்குதல்களுக்கும் ஆளாயின. குறிப்பாக, தென் இராச்சிய மக்கள் 'நீதிமன்றத்தை அடக்கும்' (court curbing) போராட்டத்தைத் தொடர்ந்தனர்.

நீதிமன்றத்திற்கெதிரான நிந்தனைகளும், தாக்குதல்களும், அதன் அமைப்பு, தன்மை, நோக்கம், செயல்படும் முறை, பிரச்சினைகளை அது அணுகும் முறை ஆகியவற்றின் எதிரொலிகளாகும். எனினும், இவற்றிற்கெல்லாம் ஆதாரமாக அமைவன, நீதித் துறையைச்சேர்ந்தவர்களிடமும், அரசியல்வாதிகளிடமும், பொதுமக்களிடமும் காணப்படும் கொள்கைகளிலுள்ள வேறுபாடுகளும், அவைகளை எப்படியாவது நடைமுறைக்குக் கொண்டு வந்துவிடவேண்டுமென்னும் பிடிவாத குணங்களுமேயாகும்.

3. நீதி மன்றத்திலுள்ள நீதிபதிகளிடையே யுள்ள பிரிவுகள்.

அரசியல் சட்டப் பிரச்சினைகளில் நீதிபதிகள் எல்லோரும் எல்லாவற்றிலும் ஒரேமாதிரியான கருத்துகளை எப்போதும் உடையவர்களாக இருப்பதில்லை. 1960க்கும் பிற்பட்டகாலத்தில்

நீதிபதிகள் ஐந்துக்கு நான்கு அல்லது ஆறுக்கு மூன்று என்ற அடிப் படையில் தங்கள் தீர்ப்புகளை அளிக்கிறார்கள். ஒருமித்த கருத் துடன் எல்லா நீதிபதிகளும் தீர்ப்பளிப்பதென்பது இப்போது அபூர்வமாகிவிட்டதோர் அம்சமாகும். இவ்வாறு ஒருசில நீதி பதிகள் கருத்துவேறுபாடுடையவர்களாக இருப்பதும், மாறான சிறுபான்மை தீர்ப்பளிப்பதுமான வழக்கம் மார்ஷல் தலைமை நீதிபதியாக இருந்தபோது, ஜெபர்சனால் நியமிக்கப்பட்ட நீதிபதி வில்லியம் ஜான்சன் (William Johnson) மாறுபட்ட தீர்ப்பைத்தர ஆரம்பித்த காலத்திலிருந்து வருவதாகும். அதுமுதல் நீதிபதி களிடையே பிரிவுகள் ஏற்படுவது இயற்கையாகிவிட்டது.

4. வழக்குகளை முடிவு செய்வதற்கு நீதிமன்றம் பின் பற்றும் நடைமுறை விதிகளும், மரபுகளும் அடிப்படையில் பெரும்பாலும் ஒரேமாதிரியாக இருக்கின்றன.

வழக்குகளை முடிவு செய்வதற்கு உச்ச நீதிமன்றம் பின் பற்றும் நடைமுறை விதிகளும், மரபுகளும் தலைமை நீதிபதி களான மார்ஷல், ஃபுல்லர் (Fuller), ஹக்ஸ் காலங்களில் எவ்வாறு அல்லது எத்தகையனவாக இருந்தனவோ, அவ்வாறே இப்போதுமிருக்கின்றன. நீதிபதிகள் இப்போதும் ஒரு சிறு குழுவாகவே இருக்கின்றனர். ஆங்கிலேயே சாக்சேனிய நீதி முறையிலுள்ள மரபுகளைப் பின்பற்றி அவர்கள் சட்டங்களை ஆராய்ந்தறிந்து, கூட்டமாகவே அவர்கள் செயலாற்றி வருகின்றனர். தலைமை நீதிபதிக்கும், இதர நீதிபதிகளுக்கும் எத்தனை எழுத்தர்களும், உதவியாளர்களும், வசதிகளுமிருப் பினும், நீதிமன்றத்தின் பணி தனியாள் (Personal) தன்மை யுடையதாகவும், வருத்தம் தருமளவுக்கு நிதானமானதாகவுந்தா னிருக்கிறது. நீதிபதிகள் தங்களுடைய தீர்ப்புகளைத் தாங்களே தயாரிக்கிறார்கள். நீதிமன்ற நடவடிக்கைகள் இன்றும் மிகவும் இரகசியமாகவே வைக்கப்பட்டிருக்கின்றன. தீர்ப்புகளை எழுது வதிலும், முடிவுக்கு வருவதிலும் பின்பற்றப்படும் நடப்பு முறைகள் என்னென்ன வென்பதை ஜனாதிபதியோ, காங்கிரசோ எவ்வகையாலும் தெரிந்துகொள்ள முடியாது. நீதிபதிகளின் ஆயுட்காலப் பதவிக் காலத்திலும் மாறுதல் எதுவும் கிடையாது. எனவே, நீதிபதிகள் சுதந்திரமாக இருக்க முடிகிறது. எனினும் இது ஒரு சில நீதிபதிகள் கொள்கைகள் சிலவற்றை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு, பத்தாம் பசலி நோக்கோடு அறிவுக்கும், நடப்பு நிலைக்கும் மாறுபட்ட முறையில் நடக்கக் கூடிய வாய்ப்பை ஏற்படுத்தி விடுவார்கள் என்ற கருத்தையும் மறுப்பதற்கில்லை.

5. தன்மை யடிப்படையில் உச்ச நீதிமன்ற நீதிபதி களின் வகைகளும் நிரந்தரமானவைகளாகவே இருக்கின்றன. தனிப்பட்டவர்களைப் போன்று, 1790-முதல் நீதிபதிகளும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியான தன்மைகளையும், நோக்கங் களையுமுடையவர்களாகவே இருந்துவந்திருக்கிருர்கள். அரசியல் சட்டப்படி தடையெதுவு மில்லாவிட்டாலும் வழக்குரைஞராக இல்லாத எவரும் சான்ருக அரசியல் ஞானிகள், அரசியல் சட்ட வரலாற்றறிஞர்கள் போன்ற எவரும் உச்ச நீதிமன்ற நீதிபதி யாக இதுகாறும் நியமிக்கப்பட்டது கிடையாது. நீதிமன்றத் திற்கு நியமிக்கப்படுவதற்கு முன்பு நீதிபதிகள் என்ன செய்து வந்தார்கள் என்ற ஆராய்ச்சி செய்யப்படுமாஞல். அப்போதும் இப்போதும், ஜனுதிபதி நிர்வாகத்தில் பணிபுரிந்தவர்கள், அவருக்குக் கட்சியிலும் தேர்தலிலும் உதவியாக இருந்தவர்கள், கட்சி பிரமுகர்கள், காங்கிரசால் விரும்பப்படாத ஆனல் திறமை யுடையவர்கள்தாம் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டிருக்கிருர்கள் என்பது தெளிவாகும். சில சமயங்களில் இராச்சிய, கூட்டாட்சி நீதித்துறைகளில் பணியாற்றிப் புகழ் பெற்ற நீதிபதிகளும், நீதிமன்றங்களில் சிறப்புப் பணியாற்றும் வழக்கறிஞர்களும், சட்டப் பேராசிரியர்களும் நியமிக்கப்படுகின்றுர்கள்.

மேற்கூறப்பட்டவகைகளின் அடிப்படையிலும் தொழில் முறை, பதவித்தன்மை, கட்சிச்சார்பு அடிப்படைகளின்படியும் தற்போதைய உச்ச நீதிமன்றம் மரபுத்தன்மை மீருததாக (Orthodox) இருக்கிறதெனலாம். நீதிபதி வாரன் கலிபோர்னியா இராச்சியத்தின் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஆளுநராகவும் (Governor) 1948-ல் உதவி ஜனுதிபதிபதவிக்கான வேட்பாள ராகவுமிருந்தவர். அவர், தமக்குச் செய்தபணிக்காக ஜனுதிபதி ஐசனேவரால் 1953-ல் நியமிக்கப்பட்டவர். கியூகோபிளாக் (Hugo Black) என்பவர், புதுநோக்குத் திட்டங்களை செனட்டில் நிறைவேற்றுவதற்கு உதவிசெய்ததற்காக ஜனுதிபதி பிராங்கிலின் ரூஸ்வெல்டினுல் நியமிக்கப்பட்டவர். வில்லியம் தக்லாஸ் (William Douglas) தொடக்கத்தில் கொலம்பியாவிலும், யேலிலும், சட்டப் பேராசிரியராக இருந்தபோதிலும், பிறகு நிர்வாகத்தில் முக்கியப் பணியாற்றியவர். இவரும் ரூஸ்வெல்டினுல் நியமிக்கப்பட்ட வர். ட்ரூமனுல் நியமிக்கப்பட்ட டாம்கிளார்க் (Tom Clark) அமெரிக்காவின் தலைமை வழக்குரைஞராக இருந்தவர். ஜான். எப். கென்னடியால் நியமிக்கப்பட்ட பைரன் ஒயிட்டும் (Byron White), ஆர்தர்கோல்டுபர்க்கும் (Arthur Goldberg) அமெரிக்க நிர்வாகத்தில் பணிபுரிந்தவர்கள்.

இவைகளையும், இதரபிறவற்றையும் ஆராய்ந்த அறிஞர்கள், உச்சநீதிமன்ற நீதிபதிகள் 'அமெரிக்க முறையின் மனசாட்சியைக் காக்கும் அறக்காவலர்' களாக இருக்கிறார்களெனக் கூறுகிறார்கள். ஆனால் இதனை வேறு பலர் ஏற்காமல் மாறாக, 'உயர்மட்ட நடுத்தரவகுப்பினரின் மனசாட்சியைக் காப்பாற்றுபவர்களாக நீதிபதிகள் இருப்பதாகக்' கூறுகிறார்கள். பின்னால் சொல்லப் படும் கருத்து 1960ஆம் ஆண்டுக்குப் பிறகான உச்சநீதிமன்ற நீதி பதிகளுக்கு மிகப் பொருத்தமானதென்பது அவர்கள் வாதம்.

இதுவரையிலும் கூறப்பட்டவற்றிலிருந்து அமெரிக்க உச்ச நீதிமன்ற இயங்குமுறையிலும் நோக்கங்களிலும் தொடர்ந்து வரும் சில அம்சங்களைத் தெளிவாக அறியலாம். எது எவ்வாறா யினும் உச்ச நீதிமன்றம் இன்றும் சக்திமிக்கதாக இருக்கிறதென் பதும், எந்தக் காலத்திலும் அது பொதுமக்களின் உண்மையான, சிறந்த, தேவைக் கேற்றவாறான விருப்பத்தை அல்லது எண்ணத்தை அடியோடு புறக்கணிக்க முடியாததாக இருக்கிற தென்பதும் உண்மையாகும். இனி 1937-க்குப் பிறகு இம் மன்றத்தில் ஏற்பட்ட மாறுதல்களையும், தன்மைகளையும் சுருக்க மாகக் காணலாம்.

**அமெரிக்க அரசாங்கத்திலும், அரசியலிலும் உச்ச நீதிமன்றப் பணியில் காணப்படும் சில புது அம்சங்கள்:**

1. **நீதிமன்றத்தால் பயனடைந்தவர்களில் ஏற்பட் டுள்ள ஆதார மாறுதல்கள்:** உச்ச நீதிமன்றத் தீர்ப்புகளால் பயனடைந்தவர்களில் இப்போது தீவிரமாற்றம் காணப் படுவது முதலாவது அம்சமாகும். 1937க்கு முன்பு நீதி மன்றத்தின் பாதுகாப்பால் பயனடைந்தவர்களுக்கு மாறான வர்கள் இப்போது பயனடைந்து வருகிறார்கள். முன்பு புது இங்கிலாந்து வியாபாரிகளும், மேற்குப்பகுதி நிலச் சூதாட்டக் காரர்களும், தென்பகுதித் தோட்டச் சொந்தக்காரர்களும், அடிமைகளைப் பெற்றிருந்தவருமாவார்கள். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் உடைமைகளைப் பெற்றிருந்தவர்களெல்லாம் உச்ச நீதிமன்றத்தால் ஆதாயமடைந்தவர்கள். இதற்கு உச்ச நீதிமன்றம் அவர்களுடைய கைப்பாவையாகவும் நீதிபதிகள் வாடகைக்கு வாங்கப்பட்டவர்களாகவும் இருந்தார்கள் என்று பொருளாகாது. அப்போதைய சூழ்நிலையில் உச்ச நீதிமன்றம் அதற்குச் சரியென்று தோன்றியவகையில் முடிவுகளைத் தந்ததன் வாயிலாக அரசியலமைப்பைக் காப்பாற்ற முயன்றதோடு பணக் கொள்கைக்கு நிலையான தன்மையைத் தரவிழைந்தது. ஆனால், இக் காலத்தில் நீகிரோக்களும், யூதர்களும், மனிதாபிமானமுடை யவர்களாகக் கருதப்படுபவர்களும், கடவுள் இல்லையென்று கூறு

பவர்களும் நீதிமன்றத்தின் தீர்ப்புகளால் பயனடைந்து வருகிறார்கள்.

**2. நீதிமன்றத்தின் தலையீட்டில் ஆதார மாறுதல்கள் ஏற்பட்டுள்ள துறைகள் :** சமீபகாலமாக நீதிமன்றத்தின் முடிவுகளிலும் சில மாறுதல்கள் ஏற்பட்டு வருவதாகச் சிலர் கூறுகிறார்கள். 1937க்கு முன்பு அரசியலமைப்புச் சம்பந்தப்பட்ட நீதிமன்றத்தின் தீர்ப்புகள், உடைமைக் கட்டுப்பாடு, வரிவிதிப்பு, வாணிகக் கட்டுப்பாடு, தொழிலாளர்கள் உறவுகள், வேளாண்மைத் திட்டங்கள் பற்றியவைகளாக இருந்தன. கிரிமினல் வழக்குகள் மிகவும் குறைவாகவே இருந்தன. இராச்சிய நீதிமன்றங்களால் முடிவு செய்யப்பட்ட கிரிமினல் வழக்குகளில் உச்ச நீதிமன்றம் பெரும்பாலும் தலையிடுவதில்லை. ஆனால் 1960க்குப் பிறகு நீதிமன்றம் உடைமை சார்புடைய—சட்டப்பிரச்சினை சம்பந்தப்பட்ட மிகக் குறைவான வழக்குகளையே விசாரணை செய்து தீர்ப்பளிக்கிறது. அதனுடைய நிகழ்ச்சி நிரலில் தற்போது சுதந்திரம், சமத்துவம் தொடர்பான அரசியலமைப்புச் சட்ட வழக்குகள் அதிகமானவையாக இருக்கின்றன.

**3. உச்ச நீதிமன்றம் பற்றிய பொது விவாதத்தில் ஏற்பட்டுள்ள ஆதார மாறுதல்கள் :** இத்துறையில் ஆரம்பத்தில் நீதிமன்றத்தை ஆதரித்த பழமைவாதிகளும், நிலப்பிரபுக்களும் இப்போது அதனை எதிர்க்கின்றனர். மக்களின் உரிமைகளைப் பறிக்கும் வகையில் தீர்ப்பளிக்கிறதென்கின்றனர். முதலில் அதனை எதிர்த்த முற்போக்குவாதிகள் அதனை இப்போது ஆதரிக்கின்றனர். இந்த எதிர்ப்புகளும், ஆதரவுகளும் கட்சி அரசியல் அடிப்படையில் அமைந்திருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. உடைமை பற்றிய வழக்குகள் இல்லாத இக் காலத்தில் கட்சிக் கண்ணோட்டத்துடன் உச்ச நீதிமன்றத்தை ஆதரிப்பதோ, எதிர்ப்பதோ மறைந்து, பல கட்சியையும் சேர்ந்தவர்கள் கொள்கைகள் அடிப்படையில் பிரிந்து எதிர்க்கிறார்கள்; அல்லது ஆதரிக்கிறார்கள்.

இவ்வாறு பல துறைகளிலும் மாறுதல்களும் மனமாற்றமும், சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல ஏற்பட்டு வருகின்றன. பல நல்ல முயற்சிகளைத் தடுத்து முன்னேற்றம் ஏற்படாமல் செய்யும் முட்டுக் கட்டையாக உச்ச நீதிமன்றம் இப்போது கருதப்படவில்லை. உச்ச நீதிமன்றத்திலிருந்த பழமைவாத நீதிபதிகள் எண்ணிக்கை குறைந்திருப்பதும் இம் மாற்றங்களுக்குக் காரணமெனலாம். எனினும் அமெரிக்க உச்ச நீதிமன்றம் இன்றும் சுதந்திரம், நடுநிலைமை, அறிவுடைமை, திறமை ஆகியவற்றின் இருப்பிடமாக இருந்து சிறந்த பணியாற்றி வருவதோடு அமெரிக்க அரசாங்க அமைப்பில் எளிதாகப் புறக்கணிக்க முடியாத அங்கமாகத் திகழ்கிறது.

# 11. ஃபிரான்சில் நீதித்துறை யமைப்பு

ஃபிரான்சு நாட்டு நீதித்துறை மிகப்பழமையானதென்றாலும் 1789ஆம் ஆண்டில் ஏற்பட்ட புரட்சிக்குப் பிறகு, அது தீவிரமாகத் திருத்தியமைக்கப்பட்டது. அப்போது ஏற்பட்ட அரசியல் நிர்ணய சட்டமன்றம், சட்டத்திற்கு உடன்பாடுடைய வகையில் நீதிமுறையை உடனடியாக மாற்றியமைத்தது. அப்பொழுது கொண்டுவரப்பட்ட சீர்த்திருத்தங்கள் சிறந்தவைகளாகவும், வெற்றிகரமானவைகளாகவுமிருந்ததால் பிறகு அங்கு ஏற்பட்ட அரசாங்கங்கள் அவைகளில் தேவையான மிகக்குறைவான மாற்றங்களையே செய்தன. இன்று வரையிலும் நீதிமன்றமுறை (Court System) தேசிய சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்கள் அடிப்படையில் தான் செயல்பட்டு வருகிறதென்பதும் அரசியலமைப்பில் செய்யப்படும் ஏற்பாடுகள் அடிப்படையில் அன்று என்பதும் குறிப்பிடத்தக்கது. மேலும், நிர்வாக, சட்டத் துறைப் பிரிவுகளைப் போன்று நீதிமன்றங்களும் அரசாங்கத்தின் ஒரு பிரிவாகவே கருதப்படுகின்றன.

இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ளவாறல்லாமல் ஃபிரான்சில் இருவகைப்பட்ட நீதிமன்றங்களிருக்கின்றன. அவைகள் சாதாரண நீதிமன்றங்களும் ஆட்சித்துறை நீதிமன்றங்களுமாகும். ஒவ்வொரு வகை நீதிமன்றங்களுக்கும் தனித்தனி நீதிபதிகளும், அதிகாரவெல்லைகளும், நடைமுறைகளுமிருக்கின்றன. முதலாவது வகை நீதிமன்றங்கள் பாரீஸ் நகரிலமைந்துள்ள காசேஷன் நீதிமன்றத்தின் (Court of Cassation) தலைமையின் கீழும், இரண்டாவது வகை நீதிமன்றங்கள் முற்றிலும் தனியான அரசுக்கழகத்தின் (Council of State) தலைமை, கண்காணிப்பின் கீழும் இயங்குகின்றன.

**நீதித்துறை உயர் மன்றம் (High council of Judiciary) :** நான்காவது குடியரசு அரசியலமைப்பின்படி ஏற்படுத்தப்பட்ட நீதித் துறை உயர்நீதிமன்றம் ஐந்தாவது குடியரசு அரசியலமைப்பின் கீழும் தொடர்ந்து இருந்து வருகிறதென்றாலும் அதன் அதிகாரம் முதலில் இருந்ததைக்காட்டிலும் குறைந்து காணப்படுகிறது. குடியரசுத் தலைவர் அதற்குத் தலைவராவார். நீதியமைச்சர் துணைத்தலைவராவார். இவர்களோடு காசேஷன் நீதிமன்றத் தாலும் அரசுக் கழகத்தாலும் பரிந்துரைத்து அனுப்பப்படும் பெயர் பட்டியல்களிலிருந்து குடியரசுத் தலைவரால் நியமிக்கப் படும் ஒன்பது உறுப்பினர்களும் இருக்கின்றனர். இம் மன்றம் 'நீதித்துறையின் சுதந்திரத்திற்கு உத்தரவாதமளிக்கும்' குடி யரசுத் தலைவருக்கு உதவியாக இருக்கிறது. நான்காவது குடியரசுக் காலத்தில் இம் மன்றம் நீதிபதிகளை நியமித்து வந்ததோடு, நீதிபதி களுக்குப் பதவி உயர்வும் தந்து வந்தது. ஐந்தாவது குடியரசு நடைமுறையிலிருக்கும் இப்போது உயர்மட்ட நீதிபதிகளின் பெயர்களை முன்மொழிந்த பின்னர், அவர்களைக் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். கீழ்மட்டத்திலுள்ள நீதிபதிகள் இம்மன்றத்தின் சிபாரிசுகளுக்கிணங்க நிதியமைச்சரால் நியமிக்கப் படுகிறார்கள். நீதிபதிகள் அரசியல் காரணங்களுக்காக நியமிக்கப் படுவதை இம்மன்றம் தடுத்து நிறுத்தப்பாடுபடுவதோடு நீதி பதிகள், தங்களுடைய அந்தஸ்தை பாதுகாத்துக் கொள்வதற்குத் தேவையான பயிற்சி பெறவும், ஊதிய உயர்வு பெறவும் வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்கிறது.

**சாதாரண நீதிமன்ற முறை :** 1789 முதல் 1955 வரையிலான காலப்பகுதியில் அரசியலமைப்புச் சட்டத்திலும், அரசாங்கத் திலும் வியக்கத்தக்க மாறுதல்கள் பல ஏற்பட்ட போதிலும் சாதாரண நீதிமன்றங்களின் அமைப்புமுறை, கிட்டத்தட்ட ஆரம்பம்முதல் இன்று வரையிலும் ஒரேமாதிரியாக இருந்து வருகிறது. அடிமட்டத்தில் முன்பு 3000 அமைதிகாண் நீதிபதிகள் இருந்தனர். இவர்கள் சாதாரண சிறு குற்றங்கள், காவல் துறையினரின் ஒழுங்குமுறை விதிகள் பின்பற்றப்படாமை, சாதாரண சிறு சிவில் குற்றங்கள் தொடர்பான வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரமுடையவர்களாக இருந்தனர். ஐந்தாவது குடியரசின் ஆரம்பக் காலத்தில் இந்த அமைதிகாண் நீதிபதிகளைக் கொண்ட நீதிமன்றங்கள் அகற்றப்பட்டு அவற் றிற்குப் பதிலாக அரண்டைஸ்மெண்டுகளை (arrandisement) கேந்திரமாகக் கொண்ட 455 நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவைகள் சாதாரண சிவில், குற்றவியல் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் கொண்டவைகளாகும். 1959-ஆம் ஆண்டுக்கு முன்

பிருந்த முறையில், அமைதிகாண் நீதிபதிகளைக் கொண்ட நீதி மன்றத்திற்கு நேர் மேல்மட்டத்தில் 351 முதல்நிலை நீதிமன்றங்கள் (courts of First Instance) இருந்தன. அவைகள் இடர் நிறைந்த சிவில், குற்றவியல் வழக்குகளையும், அமைதிகாண் நீதிமன்றங்களி லிருந்து மேல்முறையீட்டு மூலமாக வந்த வழக்குகளையும் விசாரணை செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருந்தன. இந் நீதி மன்றங்களின் இடத்தை 172 புதிய முதல்நிலை பெருநீதிமன்றங்கள் (tribuneax de grende instance) பிடித்துக் கொண்டன. இவைகள் மிக முக்கியமான சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் பெற்றவை. இந்த நீதிமன்றங்கள் சிவில் கிரிமினல் வழக்குகளில் தனிக்கவனம் செலுத்தும் பல நடுவர் குழுக்களாகவும் அமைக்கப்படுகின்றன. இந் நீதி மன்றங்களோடு பல இதர அலுவல்களும், அரசுகள் சார்புடைய குற்ற மெடுத் துரைக்கும் வழக்குரைஞர்களும் (Prosecutors) இணைக்கப்பட்டிருக் கிறார்கள்.

ஃபிரான்சின் மாநிலம் (department) ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு மூன்று மாதத்திற்கும், இடர்மிக்க சிவில், கிரிமினல், மேல் முறையீட்டடிப் படையில் வரும் வழக்குகளைக் கவனிக்க ஆணை யாளர் விசாரணை நீதிமன்றம் ஏற்படுத்தப்படுகிறது. இந் நீதி மன்றத்தில், எந்த மேல் முறையீடு நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்குள் மாநிலம் அமைந்திருக்கிறதோ, அந்த நீதி மன்றத் தைச் சேர்ந்த நீதிபதியொருவரும், அப் பகுதி முதல் நிலை நீதி மன்றத்தைச் சேர்ந்த இரு நீதிபதிகளும் இடம் பெறுவார்கள். இந் நீதிமன்றங்கள் மிக முக்கியமான பணியைச் செய்து வரு கின்றனவென்றாலும், நீதிமன்றங்களின் அமைப்பு வரிசையில், ஒருவகையாகக் கருதப்படுவதில்லை.

அங்கு இருபத்தேழு மேல் முறையீட்டு நீதி மன்றங்கள் இருக் கின்றன. ஒவ்வொன்றும் ஒன்று முதல் ஏழு மாநிலங்களை பரப் பளவாகக் கொண்ட பகுதிகளில் அதிகாரம் செலுத்தும். அதா வது பெரிய மாநிலமாக இருக்குமானால், ஒரேயொரு நிலத்திற்கு மட்டும் ஒரு நீதிமன்றமிருக்கும். மாநிலங்கள் மக்கட் தொகை யிலும், பரப்பளவிலும், சிறியவைகளாக இருக்குமானால் மேற் கூறப்பட்டவாறு ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலங்கள் ஒரு பகுதியாக இணைக்கப்படும். இந்த நீதிமன்றங்களில் குறைந்த பட்சம் ஐந்து நீதிபதிகளாவது இருக்க வேண்டும். ஆனால், பொதுவாக ஐந்தோ, அதற்கு மேற்பட்ட நீதிபதிகளையோ கொண்ட பல பிரிவு களாக இவை அமைக்கப்படுகின்றன. சாதாரணமாக இந்த நீதி மன்றங்கள் சிவில் பிரிவுகளாகவும், கிரிமினல் பிரிவுகளாகவும்

குற்றம் சார்ட்டும் (indictment) பிரிவுகளாகவும் வகைப்படுத்தி ஏற்படுத்தப்படுகின்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் அரசு சார்பு வழக்குரைஞர்கள், பதிவாளர்கள் (Recorders) காவலர் போன்ற பல அலுவலர்கள் இருக்கின்றனர். இந் நீதிமன்றங்களின் மிகப் பெரும்பாலான வேலை மேல்முறையீட்டு வழக்குகள் சம்பந்தப்பட்டதாகும். சட்டப் பிரச்சினைகள் அல்லாத வழக்குகளின் உண்மைநிலை பற்றியவற்றில் இந் நீதிமன்றங்களின் தீர்ப்புகள் இறுதியானவையாகும்.

**காசேஷன் நீதிமன்றம் (Court of Cassation)**: நீதிமன்றங்களின் உச்சகட்டத்தில் ஃபிரான்சில் மிகப்பிரசித்தமான காசேஷன் நீதிமன்றம் இருக்கிறது. இது 1790 ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இந் நீதிமன்றம் பாரிஸ் நகரத்திலுள்ளது. இம் மன்றம் ஒரு பொதுத் தலைவரையும், மூன்று பிரிவுகளின் தலைவர்களையும், அறுபதுக்கும் மேற்பட்ட நீதிபதிகளையும் கொண்டதாகும். வேலையை முன்னிட்டு இந் நீதிமன்றம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதலாவது வேண்டுகோள் அல்லது விண்ணப்பப் பிரிவு (Chamber of Request). இது சிவில் அப்பீல்களை ஆய்ந்து அவைகளில் சாராம்சம் இருக்கிறதா, விசாரிக்கப்பட வேண்டியது தானா, என்பதை முடிவு செய்யும். இரண்டாவது, சிவில் பிரிவாகும் (Civil Chamber). இப் பிரிவு வேண்டுகோள் பிரிவினால் பரிந்துரைத்து அனுப்பப்படும் சிவில் வழக்குகளைப் பைசல் செய்யும். மூன்றாவது குற்றவியல் பிரிவு (Criminal Chamber). இப்பிரிவு கிரிமினல் அப்பீல் வழக்குகளை முடித்து வைக்கும். காசேஷன் நீதிமன்றத்திற்கு மூல அதிகார எல்லை கிடையாது. அப்பீல்களை எடுத்துக் கொள்ளும்போது அது விவகாரங்களின் உண்மைத் தன்மையை எப்போதுமே கவனிப்பதில்லை. அதற்கு மாறாக, அவைகளினால் எழுப்பப்படும் சட்ட பிரச்சினைகளையும், வழக்குகளை நீதிமன்றங்கள் விசாரிப்பதற்குப் பெற்றிருக்கும் தகுதியையும்தான் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும். கீழ்மட்டத்திலுள்ள நீதிமன்றத்தால் அளிக்கப்பட்ட தீர்ப்பொன்றை அது விலக்கி விடும்போது அதற்குப்பதிலாக அது தன் தீர்ப்பொன்றை வழங்காமல், வழக்கை அது முதலில் எந்த நீதிமன்றத்தால் விசாரித்துத் தீர்ப்பளிக்கப்பட்டதோ அந்த நீதிமன்றத்தின் தரத்திற்கீடான பிறிதொரு நீதிமன்றத்தின் மறு விசாரணைக்கு அனுப்பிவைக்கும். மறுவிசாரணையைச் செய்யும் நீதிமன்றமும், முதலில் விசாரணை செய்த நீதிமன்றத்தின் கருத்தையே ஆதரிக்குமானால், காசேஷன் நீதிமன்றம் தன்னுடைய நீதிபதிகளில் 33 பேர்களை அவ்வழக்கில் எழும் சட்டப்பிரச்னையைப் பரிசீலனை செய்யுமாறு கேட்டுக் கொள்ளும். அப்போதும் கருத்து வேறுபாடு தொடர்ந்திருக்குமானால் வழக்கு மூன்றும் முறையாக

பிறிதொரு கீழ்மட்ட நீதிமன்றத்திற்கு அனுப்பப்படும். இந் நீதி மன்றம் மேல்மட்ட நீதிமன்றம் எந்தத் தீர்ப்பை வழங்கியதோ அந்தத் தீர்ப்பை ஏற்றுக் தொள்ள வேண்டியதும் பின்பற்ற வேண்டியதும் அவசியமாகும். காசேஷன் நீதிமன்றத்திற்குள்ள உயர்வு உலகிலுள்ள மிகச்சில உயர் நீதிமன்றங்களுக்குத்தான் இருக்கமுடியும். ஒரே மாதிரியான தன்மைகளையும், அம்சங் களையும் உள்ள வழக்குகளை முதலில் அளிக்கப்பட்ட தீர்ப்புகளை முன்மாதிரியாகக் கொண்டு தீர்ப்பளிக்கும் வழக்கற்றை இவ் வுயர் நீதிமன்றம் பின்பற்றி வருகிறது. இத் தீர்ப்புகள் ஃபிரெஞ்சு நீதிமுறை பின்பற்றப்படும் நாடுகளிலுள்ள நீதிமன்றங்களாலும், நீதிபதிகளாலும் கூர்ந்து கவனிக்கப்பட்டுப் பின்பற்றப்பட்டு வருகின்றன.

**ஆட்சித்துறை நீதிமன்றங்கள் (Administrative Courts)** (1) வட்டார நீதிமன்றங்கள் (Regional Tribunals) 'மன்றங்கள்' (Councils) என்று அழைக்கப்பட்ட ஆட்சித்துறை நீதிமன்றங்கள் நிர்வாகத்திஞல் ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்து வைக்க முதன் முதலில் 1799-ல் ஏற்படுத்தப்பட்டன. இந்த ஏற்பாடு இப்போதும் தொடர்ந்திருந்து வருகிறது. இந்த மன்றங்கள், வட்டார நீதி மன்றங்களென்றும், அரசுக் கழக மென்றும் (Council of State) இருவகைப்படும், வட்டார நீதிமன்றங்கள் அடித்தளத்தி லுள்ளவைகளாகும். அரசுக் கழகம் மேல் தளத்திலுள்ளதாகும். இந் நீதிமன்றங்களெல்லாம் எவ்வகையில் நோக்கிஞலும் நிர்வாகத்தின் பிரிவுகளேயாகும். ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 1,00,000 வழக்குகள் வட்டார நீதிமன்றங்களின் கவனத்திற்கு வருகின்றன. இவைகளில் பெரும்பாலான வழக்குகள், வரிகளால் பாதிக்கப்படுபவர்களால் தங்களுக்கு விதிக்கப்பட்ட வரித் தொகைகள் சரியான மதிப்பீட்டின்படி விதிக்கப் படாதவை என்பதால் கொண்டுவரப் படுபவைகளாகும். மிகப் பெரிய வழக்குகளெல்லாம் அரசுக் கழகத்திற்கே நேரிடையாக எடுத்துச் செல்லப்பட்டு வருகின்றன.

ஃபிரான்சில் தற்போது 22 வட்டார மன்றங்கள் இருக் கின்றன. இவை ஒவ்வொன்றிலும் ஒரு தலைவரும், நான்கு மன்ற உறுப்பினர்களும் இருக்கிறார்கள். இவர்களை வட்டத்துறை அமைச்சர் நியமிக்கின்றார். நீதிப்பிரச்னை சட்டத் தன்மை வாய்ந்த வழக்குகளைத்தான் இந் நீதிமன்றங்கள் எடுத்துக் கொள்ளும். இவைகளால் வழங்கப்படும் தீர்ப்புகளை ஏற்காத வர்கள் பாரிஸ் நகரிலுள்ள அரசுக் கழகத்திற்கு மேல் முறையீடு செய்து கொள்ளலாம்.

(2) அரசுக் கழகம் (The Council of State): ஆட்சித் துறை நீதிமன்றங்களின் வரிசையில் மேல் மட்டத்திலிருக்கும் இவ் வரசுக்கழகம் புகழ் பெற்றதாகும். இதன் இருப்பிடம் பாரிசில் மிகச்சிறந்த மாளிகையொன்றிலிருக்கிறது. ஆட்சி நிர்வாகம் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்ப தோடு இதர பல முக்கியமான பணிகளையும் இக் கழகம் செய்து வருகிறது. இக் கழகம் பல தீர்ப்புகள், பொது ஆவணங்கள் போன்றவையெல்லாம் சரியான சட்டமுறைப்படி எழுதப் பட்டிருக்கின்றனவா என்பதைப் பரிசீலனை செய்கிறது. ஆனால், இதனுடைய முக்கியமான பொறுப்பு வட்டார நீதிமன்றங்களி லிருந்து வரும் மேல் முறையீட்டு வழக்குகளையும், சில சமயங்களில் எடுத்த எடுப்பிலேயே தன்னுடைய பரிசீலனைக்கு வரும் வழக்கு களையும் கேட்டுத் தீர்ப்பு வழங்குவதாகும். சாதாரண வழக்கு களைப் பொறுத்தமட்டில் எவ்வாறு காசேஷன் நீதிமன்றம் இறுதி நீதிமன்றமாகத் திகழ்கிறதோ, அவ்வாறே நிர்வாகம் சம்பந்தப் பட்ட வழக்குகளைப் பொறுத்தவரை அரசுக் கழகம் இறுதி நீதிமன்றமாகும். இக் கழகத்தின் ஒரு பிரிவுக்கான உறுப்பினர்கள் அமைச்சரவை ஆலோசனைக்கிணங்க குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகிறார்கள். அவ்வாறு நியமிக்கப்படுபவர்கள் சட்டத் துறையில் நுண்ணிய அறிவுடையவர்களாக இருப்பர். இவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட பிரிவு, மேல் முறையீட்டடிப் படையில் வட்டார நீதிமன்றங்களிலிருந்து ஆண்டுதோறும் வரும் ஆயிரக்கணக்கான வழக்குகளையும், முதற் கட்டத்திலேயே தன்னுடைய பரிசீலனைக்கு வரும் வழக்குகளையும், ஆராய்ந்து தீர்ப்பளிக்கும். இவ் வழக்குகள் பற்றிய விசாரணையின் போது, அமைச்சர்கள் உள்ளிட்ட பல அலுவலர்களாலும் பிறப்பிக்கப் பட்ட உத்தரவுகளைச் செல்லத்தகாதவை (Ultra Vires) என்றோ, அதிகாரம் தவறாகப் பயன்படுத்தப்பட்டதால் எழுந்தவை களென்றோ அறிவிக்கும் அதிகாரம் இக் கழகத்திற்குண்டு இதனால் ஃபிரெஞ்சுக்காரர்களின் உரிமைகளும், சுதந்திரங்களும் பாது காக்கப்படுகின்றன.

வட்டார நீதிமன்றங்களையும், அரசுக் கழகத்தையும் அணு குவது மிக எளிதாகும். எவரும் சாதாரணமாக வழக்குரைஞ ரொருவரை நியமிக்காமல் தாமே தம் வழக்கையாடலாம். குறையுடைய ஒருவர், அஞ்சலகத்தில் சொற்ப பிராங்குகள் (Francs) விலைக்குக் கிடைக்கும் அதிகாரப் பூர்வமான விண்ணப்ப நமூனுவொன்றை வாங்கித் தம்முடைய வழக்கை எழுதி அனுப்ப வேண்டும். விண்ணப்பதாரர் செலவழிக்கும் அந்தச் சொற்பத் தொகையும் வழக்கு அவர் பக்கம் தீர்ப்பாகுமானால் அவருக்குத்

திருப்பித்தரப்பட்டு விடும். இந்த எளிய முறையை ஃபிரெஞ்சுக் காரர்கள் முழுமையாகப் பயன் படுத்தி, ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான வழக்குகளை வட்டார நீதிமன்றங்களிடமும், மத்திய நீதிமன்றங்களிடமும் கொண்டு வருகின்றனர். இதனால் சில சமயங்களில் வழக்கு பைசலில் அங்குத் தாமதமாகிறதென்ற குறைபாடுகள் சொல்லப்படுகின்றன. இத்தனைக்கும் அரசுக் கழகம் அதனுடைய சுமார் 150 உறுப்பினர்களை ஒவ்வொன்றிலும் பதினைந்து பேர்களைக் கொண்ட பல பிரிவுகளாக அமைத்து வழக்குகளை விசாரணை செய்ய ஏற்பாடு செய்கிறது.

இருவகைப்பட்ட நீதிமன்றங்களிருப்பதால், ஒரு பக்கம் காசேஷன் நீதிமன்றத்தாலும், இன்னொரு பக்கம் அரசுக் கழகத்தாலும் வழங்கப்படும் தீர்ப்புகளையொட்டி ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்துவைக்கப் பிறிதொரு செயலி இன்றியமையாததாகிறது. எனவே 1872ல் மோதல்கள் நீதிமன்றமொன்று (Court of Conflicts) இந்த இரண்டு உயர்மட்ட நீதிமன்றங்களிடையே ஏற்படும் மோதல்களைப்பற்றித் தீர்மானிக்க ஏற்படுத்தப்பட்டது. இந் நீதிமன்றத்தின் தலைவர் நீதியமைச்சர் (Minister of Jusice) அவருடன் காசேஷன் நீதிமன்றத்தைச் சேர்ந்த மூன்று நீதிபதிகளும் அரசுக் கழகத்தைச் சேர்ந்த மூன்று நீதிபதிகளும்இவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவேறு இரு நீதிபதிகளும் உறுப்பினர்களாக இருப்பார்கள்.

**ஆட்சித்துறை நீதிமன்றங்களின் சாதனை :** நிர்வாகத் துறையும் நீதித்துறையும் பிரிந்து தனித்தனியாகச் செயல்பட வேண்டும் என்ற கொள்கைக்கு ஃபிரான்சு நாட்டில் ஏற்பாடு செய்யப்படாதிருப்பதில் அங்குள்ள நீதித்துறை சிறந்தமுறையில் செயலாற்ற முடியுமா என்ற அச்சம் ஒரு சிலருக்கு இருக்கிறது. நீதித்துறையோடு நிர்வாகத்துறை நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதாலும், நிர்வாகத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் நீதிமன்றங்களில் அங்கம் வகிப்பதாலும் மக்களுடைய உரிமைகளும், சுதந்திரங்களும் பாதிக்கப்படலாம் என்று நம்பப்படுகிறது. ஆனால், இத்தகைய அச்சத்திற்கு ஃபிரான்சு நாட்டில் இடமே கிடையாதென்று சொல்லுமளவுக்கு நீதிமன்றங்கள் தங்களுடைய கடமைகளை ஆற்றிவருகின்றனவென்று தூகிட்டு[1] என்ற அறிஞர் கூறுகிறார். இக் கருத்தை வலியுறுத்துவது போல 'ஃபிரான்சு நாடொன்றைத் தவிர வேறு எந்த நாட்டிலும் நிர்வாகத்துறையின் முறைகேடான செயல்களிலிருந்து தனிப்பட்ட மக்கள் தங்க

1. L. Duguet The French Administrative Courts.

ளுடைய உரிமைகளைக் காத்துக்கொள்ளப் பாதுகாப்பில்லை. தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளுக்கு நிச்சயமாக நட்டஈடு கிடைக்குமென்று மக்கள் உறுதியாக அங்கு நம்புகிறார்கள்.' என்று கார்னர் என்பவர் கூறுவது கவனிக்கத்தக்கதாகும்[1]. அதே சமயத்தில் அரசாங்க ஊழியர்களும் தகுந்த முறையில் பாதுகாக்கப்படுகிறார்கள். அரசாங்க ஊழியர்கள் என்ற முறையில் அலுவலர்கள் செய்யும் எந்தப் பணிக்கும் அரசு பொறுப்பேற்பதால் அவர்கள் மன உறுதியோடும், ஊக்கத்தோடும், சுதந்திரமாகவும் தங்கள் கடமைகளைச் செய்து வருகிறார்கள்.

1. J. W. Garner, French Administrative Law, Yale Law Journal, Apr. 1924. 599.

# 12. சுவிட்சர்லாந்து நீதித்துறை

சுவிட்சர்லாந்து கூட்டாட்சி முறையைப் பின்பற்றும் நாடு. அதில் நன்முக வளர்ச்சிபெற்ற இருபத்திரண்டு காண்டன்கள், அதாவது பத்தொன்பது முழுக்காண்டன்களும் ஆறு அரை காண்டன்களுமிருக்கின்றன அங்கு கூட்டாட்சிக்கும், காண்டன்களுக்கும் தனித்தனி அரசியலமைப்புகள் இருக்கின்றன. அவ்வாறே நீதித்துறையும் தனித்தனியாக இருக்கிறது. கூட்டாட்சி நீதித்துறையில் இதர நாடுகளைப்போல அல்லாமல் ஒரேயொரு நீதிமன்றம்தான் இருக்கிறது. எனவே இதர நீதித்துறைகளில் காணப்படும் சிக்கல்கள் அங்குக் காணப்படுவதில்லை. இவ்வத்தியாயத்தில் சுவிட்சர்லாந்து கூட்டாட்சி நீதித்துறை எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறதென்று காணலாம்.

கூட்டாட்சி நீதிமன்றம் (The Federal Tribunal): கூட்டாட்சி நீதிமன்றம் தோற்றுவிக்கப்பட்டது, நிலையங்களைப் பொறுத்தவரை 1874ஆம் ஆண்டு அரசியலமைப்பின் புதுமையாகும், 1848ஆம் ஆண்டு அரசியலமைப்பும், 'கூட்டாட்சித் துறையில் நீதிநிர்வாகத்திற்காக' என்று நீதிமன்றமொன்றிற்கு ஏற்பாடு செய்திருந்தது. ஆனல் அந் நீதி மன்றத்திற்கு, கூட்டாட்சிக்கும், காண்டன்களுக்குமிடையிலும் அல்லது காண்டன்களுக்குமிடையிலும் ஏற்படும் சட்டச்சார்புடைய சச்சரவுகளை விசாரணை செய்து தீர்ப்பளிக்க அதிகாரம் தரப்பட்டிருக்கவில்லை. அத்தகைய வழக்குகள் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தினல் விசாரணை செய்யப்பட்டு முடிவுசெய்யப்பட்டன. குடிமக்களுடைய உரிமைகள் சார்புடைய வழக்குகளைக்கூடக் கூட்டாட்சி, பாராளுமன்றம் கேட்டுக்கொண்டாலல்லது விசாரணை செய்யமுடியாது. 1874 ஆம்ஆண்டு அரசியலமைப்பு, அதன் அமைப்பு, அதிகாரங்களில் தீவிரமான மாறுதல்களைச் செய்யவில்லை என்ருலும், நிகழ் முறையில் அதன் அதிகாரங்கள் விரிவடைந்தன. திருத்தியமைக்கப்பட்ட நீதிமன்றம் 1875ஆம்

ஆண்டு இயங்கத் துவங்கியது. அதிலிருந்து அதன் அதிகாரங்கள் பல தடவைகளில் விரிவாக்கப்பட்டன.

**கூட்டாட்சி நீதிமன்றத்தின் அமைப்பும் அதிகாரங்களும் :** அரசியலமைப்பின் 107ஆம் விதி இரண்டாவது பிரிவு கூட்டாட்சி நீதிமன்றத்தின் அமைப்பு, அதன் பிரிவுகள், அதிலிருக்க வேண்டிய உறுப்பினர்கள், துணை உறுப்பினர்கள், அவர்களின் பதவிக்காலம், அவர்களுக்குத் தரப்படவேண்டிய ஊதியம் ஆகியவைகளெல்லாம் சட்ட அடிப்படையில் நிர்ணயிக்கப்படும் என்று கூறுகிறது. நீதிபதிகளும் துணை நீதிபதிகளும் கூட்டாட்சிச் சட்டமன்றத்தால் அதன் கூட்டுக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நீதிபதிகளுக்கு இருக்க வேண்டிய தகுதிகளைப் பற்றி அரசியலமைப்பு எதுவும் கூறவில்லை. அது, தேசிய மன்றத்திற்குத் (National Council) தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதியுடைய சுவிட்சர்லாந்து குடிமகன் எவனும் கூட்டாட்சி நீதிமன்றத்திற்கு நியமிக்கப்படலாம் என்று மட்டுமே கூறுகிறது. ஆனால் கூட்டாட்சிச் சட்டமன்றத்திலும், கூட்டாட்சி அமைச்சரவையிலும் அங்கத்தினராக இருப்பவர்கள் அல்லது இவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் உயர் அலுவலர்கள் எவரும் கூட்டாட்சி நீதிமன்றத்தில் நீதிபதிகளாக ஒரே சமயத்தில் இருக்க முடியாது. அரசியலமைப்பு விதிக்கும் ஒரே நிபந்தனை, கூட்டாட்சியின் அரசாங்க மொழிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும் மூன்று மொழிகளைச் சேர்ந்தவர்களுக்கும் பிரதிநிதித்துவம் இருக்குமாறு நீதிபதிகள் நியமிக்கப்படவேண்டுமென்பதாகும். எனினும், சட்டத்துறையில் தேர்ச்சி பெற்றவர்களும், திறமையுடையவர்களும் அம் மன்றத்தில் நீதிபதிகளாக நியமிக்கப்படுகிறார்கள் என்பதில் ஐயமில்லை. எனவே, அம் மன்றம் இங்கிலாந்து, அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளிலுள்ள உச்ச நீதி மன்றங்களுக்கு இணையாகக் கருதப்படுவதில் ஆச்சரியமில்லை.

நீதித்துறை அமைப்புப் பற்றிய 1943ஆம் ஆண்டுச் சட்டம் கூட்டாட்சி நீதிமன்ற அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டுமென்பதைத் தீர்மானிக்கிறது. அச்சட்டத்தின்படி நீதிபதிகளின் எண்ணிக்கை 26 முதல் 28 ஆக இருக்கவேண்டும். இவர்களோடு 11 முதல் 13 வரை மாற்று அல்லது துணை நீதிபதிகளும் இருப்பார்கள். நீதிபதிகளின் பதவிக்காலம் ஆறு ஆண்டுகளாகும். ஆனால் நீதிபதிகள் மீண்டும் மீண்டும் எத்தனை முறை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கப்படலாம். இதனால் அவர்களின் பதவிக்காலம் ஆயுட்காலம் முழுவதற்கும் என்பது போல நிகழ்முறையில் இருந்து வருகிறது. நீதிமன்றத்திற்கு ஒரு தலைவரும், ஒரு துணைத் தலைவரும் ஓராண்டுக் காலத்திற்குத்

தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் அவர்கள் மீண்டும் அடுத்த ஆண்டிலேயே தொடர்ந்தாற்போல அதே பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட முடியாது.

நீதிபதிகளுக்குத் தலைக்கு ஆண்டு ஒன்றுக்கு 30,000 பிராங்குகள் (Frnacs) ஊதியமாக அளிக்கப்படுகிறது. தலைவராக இருப்பவருக்கு 2000 பிராங்குகள் கூடுதலாக அளிக்கப்படுகிறது. துணை நீதிபதிகளுக்கு அவர்கள் என்று பணியாற்றுகிறார்களோ அன்று அல்லது அந்த நாட்களுக்குமட்டும் ஊதியம் அளிக்கப்படுகிறது. பத்தாண்டுக்காலத்திற்குக் குறையாது பணியாற்றி ஓய்வுபெற்ற நீதிபதிகளுக்கு 60 வயதுக்குப்பிறகு ஓய்வூதியம் அளிக்கப்படுகிறது. ஓய்வூதியம் 40 விழுக்காடுமுதல் 60 விழுக்காடாக இருக்கிறது. அது அவர்களுடைய ஊதியம், மொத்தப் பணிக்கால அடிப்படைகளில் அளிக்கப்படுகிறது.

சுவிட்சாலாந்தில் உள்ள ஒரே தேசிய நீதிமன்றம் கூட்டாட்சி நீதிமன்றமாகும். குற்றவியல் வழக்குகளை விசாரணை செய்து முடிவு செய்வதற்காகக் கூட்டாட்சி நீதிமன்றம் பல பிரிவுகளாக அமர்கிறது. இதர நாடுகளிலுள்ளவாறு அங்குக் கீழ்மட்ட (subordinate) நீதிமன்றங்கள் கிடையாது. இதற்குக் காரணம் நீதிப்பணியின் பெரும்பகுதி காண்டன்களிலுள்ள நீதிமன்றங்களால் செய்யப்பட்டுவிடுவதாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ளவாறு, கூட்டாட்சி நீதிமன்றத்தின் முடிவுகளை அமல்படுத்துவதற்குத் தனியாக அதற்கெனப் பணியாட்கள் நாடு முழுவதும் கிடையாது. தீர்ப்புகளைக் கூட்டாட்சி அமைச்சரவை, காண்டன் அரசாங்கங்களின் துணைகொண்டு நிறைவேற்றுகிறது. இத்தகைய அமைப்பு, கூட்டாட்சி நீதிமன்றத்தைத் தனித்தன்மையுடையதாகச் செய்துவிடுகிறது.

**நீதிமன்றத்தின் அதிகார எல்லை :** சிவில், குற்றவியல் வழக்குகளிலும், சட்டங்கள் பற்றிய பிரச்சினைகளிலும் கூட்டாட்சி நீதிமன்றத்திற்கு அதிகாரமிருக்கிறது. ஆனால் அரசியலமைப்பை விளக்கவும், அதன்படி கூட்டாட்சிச் சட்டங்கள் செல்லுபடியாகாதென அறிவிக்கவும் அதற்கு அதிகாரம் கிடையாது.

*(1)* **சிவில் அதிகாரம் :** அரசியலமைப்பின் 110ஆம் விதி கூட்டாட்சி நீதிமன்றம் கூட்டாட்சிக்கும் காண்டன்களுக்குமிடையிலும், காண்டன்களுக்குமிடையிலும் ஏற்படும் எல்லா வழக்குகளையும் விசாரணை செய்யும் அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. தனிப்பட்டவர்களாலோ, நிலையங்களாலோ கூட்டாட்சிக்கு எதிராகக் கொண்டு வரப்படும் வழக்குகளில் சம்பந்தப்பட்ட

தொகை ஒவ்வொரு வழக்கிலும் 4,000 பிராங்குகளுக்குமேல் இருக்குமாஞல் அவைகளையும் அந் நீதிமன்றம் ஏற்று விசாரணை செய்து தீர்ப்பளிக்கும் அதிகாரமுடையது. குடியுரிமை சார்பான வழக்குகளும் இதன் அதிகார எல்லையின் கீழ் வருகின்றன.

மேற்கூறப்பட்டவையோடு கூட வேறு எந்த விஷயத்தையும் அரசியலமைப்பின் 114-ஆம் விதியின் கீழ் நீதிமன்றத்தின் பரிசீலனைக்குக் கூட்டாட்சி அரசு விடலாம். இந்த விதியைப் பயன்படுத்திக்கொண்டு, கூட்டாட்சிப் பாராளுமன்றம், நீதிமன்றத்தை 4,000 பிராங்குகளுக்கும் அதிகமான எந்த வழக்கையும் விசாரணை செய்யும் பொது மேல் முறையீட்டு நீதிமன்றமாக நிகழ்முறையில் மாற்றி விட்டது.

(2) குற்றவியல் அதிகாரம் : இத் துறையில் அதன் அதிகாரங்கள் பின்வருமாறு :

(அ) கூட்டாட்சிக்கு எதிரான சதி ; கூட்டாட்சி அதிகாரிகளுக்கு எதிரான புரட்சி, கலகம், வன்முறை.

(ஆ) நாடுகளின் சட்டத்திற்கு (Law of Nations) எதிரான குற்றங்கள்.

(இ) கூட்டாட்சி தலையீடு அவசியமாகும் அளவிற்கு, அமைதியின்மைக்கும், கலகங்களுக்கும் காரணமாக, விளைவாகக் கருதப்படும் அரசியல் குற்றங்கள்.

(ஈ) கூட்டாட்சி அலுவலர்கள் மீது கூட்டாட்சி அரசு கொண்டுவரும் வழக்குகள்.

குற்றவியல் துறையில் சட்டங்களைக் கொண்டு வருவதற்குக் கூட்டாட்சிக்கு அரசியலமைப்பின் 64 (1) ஆம் விதி அதிகாரங்கள் வழங்குகிறது. குற்றவியல் வழக்குகளை விசாரணை செய்வதற்காக, நாட்டின் ஒவ்வொரு பிரிவிலும் இம் மன்றம் விசாரணைகளை நடத்துகிறது. இதற்காக நாடு பல பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. நீதிமன்றமும் பல குழுக்களாகப் பிரிந்து, ஒவ்வொரு குழுவும் ஏதேனுமோர் பிரிவில் விசாரணை செய்கிறது. விசாரணையின் போது, அறநடுவர்களின் உதவியும் பெறப்படுகிறது. இந்த அறநடுவர்கள், வழக்கு எங்கு நடைபெறுகிறதோ அதைச் சுற்றியுள்ள ஊர்களிலுள்ள குடிமக்களிலிருந்து திருவுளச் சீட்டுக் குலுக்கிப் போட்டுத் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். குற்றஞ் சாட்டப்பட்ட ஒருவர் தண்டிக்கப்பட வேண்டுமாஞல் அறநடுவர்களின் எண்ணிக்கை ஆருஞல், ஐந்துபேர்களின் ஒப்புதல்வேண்டும்.

குற்றவியல் வழக்குகளுக்காகக் கூட்டாட்சி நீதிமன்றம் நான்கு பிரிவுகளாக அமர்கிறது. அவைகள், கூட்டாட்சிக் குற்றவியல் நீதிமன்றம்; குற்றம் சாட்டு நீதிமன்றம்; காசேஷன் நீதிமன்றம், தனித்தன்மை வாய்ந்த காசேஷன் நீதிமன்றம் (Extra Ordinary Court of Cassation) என்பன. குற்றம் சாட்டு நீதிமன்றம், கொண்டுவரப்படும் வழக்கில் எடுத்த எடுப்பிலேயே குற்றம் செய்யப்பட்டிருக்கிறதா என்பதையும், அக் குற்றத்தை விசாரணை செய்யும் அதிகாரம் நீதிமன்றத்திற்கு இருக்கிறதா என்பதையும் ஆராய்ந்து முடிவுசெய்யும். மேலும் எந்தக் காண்டனில் விசாரணை நடைபெற வேண்டுமென்பதையும் அது தீர்மானிக்கும். தனி காசேஷன் நீதிமன்றத்தில் மொத்தம் ஏழு நீதிபதிகள் இருப்பார்கள்.

*(3)* **அரசியலமைப்புச் சார்பு அதிகாரம்:** கூட்டாட்சி நீதிமன்றத்திற்குச் சில கட்டுதிட்டங்களுக்குட்பட்ட அரசியலமைப்புச் சார்புடைய சில அதிகாரங்கள் தரப்பட்டிருக்கின்றன.

(அ) ஒரு பக்கம் கூட்டாட்சி, மறுபக்கம் காண்டன்கள் ஆகிய இருவகைப்பட்ட அரசாங்கங்களுக்கிடையே ஏற்படும் மோதலின் தகுதி.

(ஆ) காண்டன்களுக்கிடையே அரசாங்கச் சட்டம் (Public Law) பற்றி எழும் தகராறுகள்.

(இ) குடிமக்களின் உரிமைகள் மறுப்புப் பற்றிய மேல்முறையீட்டு வழக்குகள், பன்னாட்டு உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள் மீறப்படுதல் பற்றிய தனிப்பட்ட குடிமக்களின் மேல் முறையீடு போன்றவை அந்த அதிகாரங்கள். குடிமக்களின் உரிமைகள் பற்றிய அரசியலமைப்பு விதிகள், கூட்டாட்சி வழங்கும் உரிமைகளோடு காண்டன்கள் வழங்கும் உரிமைகளையும் சேர்த்து என்பதாகப் பிறகு சட்டம் மூலமாக ஒழுங்குபடுத்தப்பட்டது. இது சம்பந்தமாக ஏற்படும் சச்சரவுகளில் கூட்டாட்சி நீதிமன்றம் கூட்டாட்சி அரசியலமைப்புக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கும். காண்டன்களின் சாதாரணச் சட்டங்கள் கூடக் கூட்டாட்சியின் சட்டங்களுக்கு மாறுபட்டில்லாமல் நீதிமன்றம் பார்த்துக் கொள்ளவேண்டும்.

*(4)* **ஆட்சித்துறைச் சார்பு அதிகாரம்:** இறுதியாக, அதற்குச் சில ஆட்சித்துறை சார்புடைய அதிகாரங்களும் இருக்கின்றன. அது அரசாங்க அதிகாரிகளின் தகுதி பற்றிய சட்டப் பிரச்சினைகளையும், வரிவிதிப்புப் பற்றிய ஆட்சித்துறை வழக்குகளையும், பல வகைப்பட்ட இரயில்வே வழக்குகளையும் தீர்மானிக்கிறது.

இதுகாறும் கூறப்பட்டவைகளிலிருந்து கூட்டாட்சி நீதிமன்றம் அமெரிக்காவிலோ, இந்தியாவிலோ உள்ள உச்ச நீதி

மன்றத்தைப்போல விரிவான அதிகாரங்களைப் பெற்றிருக்கவில்லை யென்பது விளங்கும். பொதுவாக, சிவில், குற்றவியல் வழக்குகள் இதன் அதிகார எல்லையின்கீழ் வந்தாலும் அரசியலமைப்புச் சட்ட விளக்கம், அரசியலமைப்புச் சட்டத்தை மையமாகக் கொண்டு எழும் பிரச்சினைகளில் கூட்டாட்சி நீதிமன்றத்தின் பணி மிகவும் குறைவாகவே இருக்கிறது. விளங்கக் கூறவேண்டுமாயின் அத்தகைய அதிகாரங்கள் இம் மன்றத்திற்கு இல்லையென்றே குறிப்பிட வேண்டும். அரசியலமைப்புச் சட்டப் பிரச்சினைகள், அரசியலமைப்புச் சட்டவிளக்கம் ஆகியவற்றைக் கூட்டாட்சிச் சட்டமன்றமே முடிவு செய்கிறது. அதிகார எல்லைகள் பற்றி நீதிமன்றத்திற்கும் கூட்டாட்சி அமைச்சரவைக்குமிடையே (Federal Council) கருத்து வேறுபாடுகள் ஏற்படுமாயின் அவற்றைக் கூட்டாட்சிச் சட்ட மன்றமே முடிவு செய்யும். கூட்டாட்சி சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்கள் ஒவ்வொன்றையும் நீதிமன்றம் பின்பற்றிச் செயலாற்ற வேண்டுமென்று அரசியலமைப்பின் 113ஆம் விதி குறிப்பிடுவதால், அவைகளைச் செல்லத்தகாததாக அறிவிக்க அதற்கு அதிகாரம் கிடையாதென்பது தெளிவாக்கப்படுகிறது. ஆனால் காண்டன்களின் அரசியலமைப்புகளும், சட்டங்களும் கூட்டாட்சி அரசியலமைப்புக்கும், சட்டங்களுக்கும் மாறுபட்டிருக்குமானால் அவைகளைக் கூட்டாட்சி நீதிமன்றம் செல்லாதவை என்று தீர்ப்புக்கூறலாம்.

கூட்டாட்சி நீதிமன்றம் இவ்வாறு விரிவான அதிகாரமும், அதிகபட்ச சுதந்திரமும் இல்லாதிருப்பதற்குக் காரணம், சுவிட்சர்லாந்தில் மக்கள் இறைமை ஏற்றுக்கொள்ளப்பட்டு, அது நடைமுறையில் செயல்படுவதாலாகும், அரசாங்க அமைப்புச் செயல்முறையில் தனித்தன்மையைப் பின்பற்றும் அந் நாடு, நீதி முறையிலும், இதர நாட்டு முறைகளினின்றும் மாறுபட்டிருப்பதில் வியப்பில்லை.

# 13. சோவியத் யூனியனில் சட்டமும் நீதித்துறையும்

*1917-18* அதிகாரத்தைக் கைப்பற்றியது முதல் தீவிரப் பொதுவுடைமைக் கட்சிக்காரர்களின் (bolsheviks) முக்கிய நோக்கமாக இருந்து வருவதாகச் சொல்லப்படுவது நீதியாகும் (Justice). அவர்கள், மேற்கு நாடுகளில் நிர்வாகத்துறை, சட்டத் துறை ஆகியவற்றின் கட்டுப்பாடின்றி நீதிமன்றங்கள் சுதந் திரமாக இயங்குவதற்கும் நியாயமான விசாரணைக்கும் முயற்சிகள் எடுத்துக் கொள்வதாகச் சொல்லப்படுவதெல்லாம் [1]அநீதியை மூடிமறைப்பதற்காக என வாதிக்கிறார்கள். அவர்களுடைய வாதத்திற்கு ஆதாரமாக அவர்கள் 1848-ல் காரல்மார்க்சு வெளியிட்ட பொதுவுடைமைக் கட்சியின் விண்ணப்பத்திலுள்ள (Communist Manifesto) குற்றச்சாட்டுகளை எடுத்துக் காட்டு கிறார்கள். காரல்மார்க்சு, அவருடைய காலத்தில் வாழ்ந்த வர்கள் புகழ்ந்துரைத்த நீதி, உண்மையில் ஆட்சியிலிருந்த ஒரு சிலருக்காகவே என்று குறிப்பிட்டுள்ளார். அவருடைய இவ் வாதத்திற்கேற்ப, அவர் வகுப்பாதிக்கத்தின் (Class domination) கருவியாக அரசு இருக்கிறதென்றும், நீதிமன்றங்கள் ஆட்சியி லிருக்கும் வர்க்கத்தினரைக் காப்பாற்றுபவைகளே யாகுமென்றும் கூறியுள்ளார். எனவே, நீதிமன்றங்கள் நீதியை நிலைநாட்டு பவையென்றும், நீதி என்ற சொல்லுக்குள்ள உண்மையான பொருளெதுவோ, அப் பொருளில் நீதியை வழங்குபவையென்றும் சொல்வதற்கில்லை யென்று கூறியுள்ளார்.

தீவிரப் பொதுவுடைமைக்கட்சிக்காரர்கள் எந்தக் காலத் திலுமே கருத்தடிப்படையிலான (abstract sense) நீதி வழங்கு வதாகச் சொல்வதில்லை. மேலைநாடுகளிலுள்ள நீதிமன்றங்களைக்

[1]மேற்கத்திய முறைகளிலுள்ள

காட்டிலும் அவர்களுடைய நீதிமன்றங்கள் குடியாட்சிக் கொள்கைகள் அடிப்படையில் அமைந்திருப்பவை என்று அவர்கள் கூறுவதானது, சோவியத் அரசாங்கம் பாமரமக்களுக்குப் பிரதி நிதித்துவம் உடையதாக இருக்கிறதென்பதாலாகும். அவர்கள் அவர்களுடைய நீதிமன்றம் சார்பற்றதன்மையுடையதன்று என்றும், அரசுக்கொள்கையை (state policy) நிறைவேற்றுவதற் கான கருவியென்றும் வெளிப்படையாக அறிவிக்கிறார்கள். புரட்சியின் நோக்கங்களை அடைய உதவுவதன் மூலமாக அமைதியை நிலைநாட்ட வல்லதென்று பொருளுடைய 'சட்டப்படியான புரட்சியைப்' (revolutionary legality) பற்றி அவர்கள் ஆரம்பக் காலத்தில் அடிக்கடி பெருமையாகச் சொல்லிவந்தார்கள். அமைதியை நிலைநாட்டுவதில் அரசின் ஆட்சித்துறைக்கு எந்த அளவிற்குப் பங்குண்டோ அந்த அளவிற்கு நீதிமன்றங்களுக்கும் கடமையுண்டு. அமைதி என்பது இவ்விடத்தில் பொதுவுடைமைக்கட்சி விருப்பப்படியானதெனக் கொள்வது அவசியமாகும்.

நிர்வாகத்துறை, சட்டத்துறைகளைக் கட்டுப்படுத்தக் கூடிய முறையில் தீவிரப்பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் அவர் களுடைய முறையை அமைத்திருக்கவில்லை. அமெரிக்க முறைக்கு ஆதரமாகக் கருதப்படும் அதிகாரப் பிரிவினைக் கொள்கையை அவர்கள் நிராகரிக்கின்றார்கள். மார்க்சீயவாதிகளினுடைய விளக்கத்திற்கேற்ப, அமெரிக்க நீதிபதிகள் எவ்வாறு அரசியல் கட்சிகள், அரசாங்கம் போன்றவற்றின் செல்வாக்கிற்குக் கட்டுப் பட்டிருக்கிறார்களோ, அவ்வாறே தங்களுடைய முறையிலும் நீதி பதிகள் கட்டுப்பட்டவர்களாவார்களென்று அவர்கள் கூறு கிறார்கள். நிர்வாக, சட்டத்துறை அதிகாரவெல்லைகள் பற்றிய வற்றில் நீதித்துறை அமெரிக்காவில் தலையிடும் அளவிற்குச் சோவியத்யூனியனில் குறுக்கிடுவதை அவர்கள் வெறுக்கிறார்கள்.

பொதுவுடைமைக் கட்சியின் கொள்கைகளை நிறைவேற்றும் அளவிற்கு நீதிபதிகள் ஆர்வமும்,ஈடுபாடுமுடையவர்களாக இருக்க வேண்டுமெனில்,சோவியத் முறையில் நீதிமன்றம் இருக்கவேண்டிய அவசியமென்னவென்று எவரும் ஆச்சரியப்படலாம். குற்ற மிழைத்தவர்களுக்குத் தண்டனையளிக்க வேண்டுமென்று கோரிக் காவல்துறையினர் கொண்டு வரும் அலுவலகத்திற்கு, சோவியத் நீதி அமைச்சரவையைச் சேர்ந்த ஒருவர் தலைமை தாங்குவது சாத்தியமானதென்பது எவரும் யூகிக்கக் கூடியதாகும். இத் தகைய முறை படைமானிய முறைத் திட்டத்தின் (Fendalism) கீழ்ச் சாதாரணமானதாக நிலவியதொன்றாகும். சமீப காலங் களில் கூட ஆட்சித்துறை நீதிமன்றங்கள் குற்றங்களை விசாரித்துத்

தண்டனை அளிக்கும் அதிகாரத்தோடு ஏற்பட்டு இயங்கி வருகின்றனவென்பதையும் இவ்விடத்தில் நினைவு கூறலாம். எனவே, சோவியத் முறையின் மேற்கூறப்பட்ட அம்சம் வியப்பூட்டுவதாகாதென்று வாதாடப்படுகிறது.

ஒழுங்கை நிலைநாட்டுவதற்கு ஆட்சித்துறை நீதிமன்றத்தை (administrative tribunal) சோவியத் யூனியன் பெருமளவிற்குப் பயன்படுத்தி வருகிறது. உள்துறை அமைச்சரகத்திலுள்ள (Ministry of Internal Affairs) தனிவாரியங்கள் சோவியத் தலைவர்களால் அச்சுறுத்தும் கருவிகளாகப் பயன்படுத்தப் படுமளவிற்குச் சுறுசுறுப்புடையவைகளாக இருக்கின்றன. குடிமக்களிடையே ஏற்படும் சச்சரவுகள், சட்ட மீறல் போன்ற குற்றச்சாட்டுகளை விசாரணை செய்யும் அதிகாரம் இத்தனி வாரியங்களுக்குத் தரப்படலாம் என்ற அளவிற்கு அவை வளர்ச்சி பெற்றிருக்கின்றனவென்றாலும், அவ் வதிகாரம் அவற்றிற்கு இன்னும் தரப்படவில்லை.

**நீதிமன்ற முறை ஏற்படுத்தப்படுவதற்கான காரணங்கள் :** நீதி அமைச்சரகத்தைச் சேர்ந்த அதிகாரிகளை நீதி நிர்வாகத்திற்குப் பயன்படுத்திக் கொள்வதற்குப் பதிலாக 'நீதிமன்றம் என்று சோவியத் தலைவர்களால் அழைக்கப்படும் அமைப்பொன்றை அவர்கள் ஏற்படுத்தியதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. அநீதியின் அரண் என்று மார்க்சினால் குறை கூறப்பட்ட நீதிமன்றம் போற்றப்பட்ட சமூகம் லெனின் காலத்திலும் தொடர்ந்திருந்தது. எனவே நீதிமன்ற அமைப்பு, புரட்சிக்குப் பிறகு கைவிடப்பட்டிருக்குமானால் அது மக்களிடையே அச்சத்தைத் தோற்றுவித்திருக்கக்கூடும். அதனால் தானோ என்னுமாறு புரட்சி ஏற்பட்ட ஒரு திங்களுக்குள்ளாகப் பழைய முறை கைவிடப்பட்டுப் புதிய நீதிமன்ற முறையொன்று அமைக்கப்பட்டது. அது முதல் நீதிமன்றம் நிலையானதோடு, பிறகு நீதிமன்றம் ஒழிக்கப்படவேண்டுமென்ற பேச்சே ஏற்படவில்லை.

மேலும், பொதுவுடைமைவாதிகள் அப்போது உலகக் கருத்துக்கேற்ப நடந்து கொள்ளவேண்டும் என்ற எண்ணம் உடையவர்களாக இருந்ததால் நீதிமன்ற முறையை ஒழித்துவிட்டால் உலகம் அதை ஏற்குமோ, ஏற்காதோ என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டியவர்களாக இருந்தார்கள். ஆனால், அவர்கள் தங்களுடைய வகுப்பு நோக்கிற்கு (Class approach) எதிரான இதரர்களுடைய கருத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஏனெனில், குடியானவர்கள், தொழிலாளிகளுடைய நன்மையைக் கருத்தில் கொண்டதும், அவர்களுக்கு நீதிவழங்கவல்லதும்.

வகுப்பு நோக்குடையதுமான நீதிமன்ற முறையை உலகத்தார் ஏற்றுக் கொள்வார்களென்பது அவர்களுக்குத் தெரியும். செல்வந்தர்களுக்கு எதிராக ஏழைகளுக்கு நீதிவழங்க வல்ல முறையொன்றை ஃபிரெஞ்சு பொதுவுடைமைவாதியொருவர் வெறுக்க மாட்டார். ஆனால், உழைக்கும் வர்க்கத்தினருக்கு நீதி கிடைக்க, அதாவது அவரது கருத்துப்படி, வகை செய்யாத நீதிமன்ற முறையைப்பற்றி மகிழ்ச்சியடையமாட்டார். ஃபிரான்சில் அரசராட்சி மங்கத் தொடங்கிய காலம் முதல் ஆட்சித்துறை அலுவலர்கள் மேல் எழுந்த ஐயமும் ஆத்திரமும் சோவியத் பொதுவுடைமைவாதிகளுக்குத் தெரிந்ததாகும். எனவே, ஆட்சித்துறை அலுவலர்களுக்கு நீதி அதிகாரம் வழங்கும் முறை ஃபிரெஞ்சுக்காரர்களுக்குத் துன்பம் தருவதாகும். ஆதலினால் சோவியத்முறையில் ஆட்சித்துறை அலுவலர்களின் எதேச்சாதிகாரம் மேலோங்கியிருக்கும் என்ற எண்ணம் பிறருக்கு ஏற்படக் கூடாதென்று சோவியத் பொதுவுடைமைவாதிகள் கருதினர். எனவே, சோவியத்பொதுவுடைமை வாதிகள் இதர நாடுகளிலுள்ள மக்களுடைய கருத்திற்கு மதிப்பளிக்க விரும்புகிறார்களோவெனத் தோன்றுகிறது.

சட்ட நிர்வாகத்திற்கு நீதி அமைச்சரகத்தைச் சேர்ந்த அதிகாரி ஒருவருக்குப் பதிலாக நீதிமன்ற முறையொன்று ஏற்படுத்தப்பட்டுப் பராமரிக்கப்படுவதற்குச் சோவியத் 'அரசியல்' அகராதியில் பிறிதொருகாரணமும் இருக்கக் கூடும். இதற்கு நிர்வாகத்துறையில் இருக்க வேண்டிய திறமை முக்கியக் காரணமாகச் சொல்லப்படுகிறது. ஆட்சித்துறை அல்லது நிர்வாகத் துறையில் வழக்கமாகக் காணப்படுவதைக் காட்டிலும் அதிகமான அளவிற்கு நீதித்துறையில் பலவற்றைப்பற்றியும் முடிவு செய்வதற்கு நிதானமும் சிந்தனையும் தேவைப்படுகின்றன என்பதோடு நீதிப்பணி சிறப்புத்தன்மை வாய்ந்ததாகவும் உணரப்பட்டிருக்கிறது. அரசியலும், சட்டமும் பிரிக்கப்பட முடியாததெனக் கருதும் சோவியத் தலைவர்கள் ஆட்சித்துறைப் பணிகளும் நீதிமன்றப் பணிகளும் பிரிக்கப்படலாமென்னும் கருத்துடையவர்களாக இருக்கிறார்களெனத்தெரிகிறது. சோவியத் நீதிபதிகள் அரசியலை ஊன்றிக்கவனித்துவர வேண்டியதோடு தலைவர்களோடு அவ்வப்போது தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யத்தவறினால் அவர்கள் கண்டனம் செய்யப்படுகிறார்கள். பொதுவுடைமைக் கட்சியின் நோக்கங்களிலிருந்து விலகிச்செல்ல அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. உண்மையில் கீழ்மட்டத்திலுள்ள நீதிபதிகளில் முக்கால் பகுதியினரும், மேல்மட்டத்திலுள்ள அனைவரும் பொதுவுடைமைக்

கட்சியில் உறுப்பினர்களாக இருப்பதோடு அதன் கட்டுத்திட்டங்களுக்கும் உட்பட்டவர்களாவர்.

கட்சியின் கொள்கைகளுக்கு நீதிமன்றத்தில் எதிர்ப்பு இருக்கக் கூடாது; ஆனால் நீதிபதியொருவர் தனித்தன்மையுடைய பொறுப்பை நிறைவேற்ற வேண்டியவராக இருப்பதால் அவருக்குத் தனிப்பயிற்சி அவசியமென்பது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. சோவியத் கருத்தை விளக்க முயலும் விசின்சிகி (Vyshinsky) அமெரிக்காவில் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பின்பற்றப்படும் அதிகாரப் பிரிவினை முறையைச் சோவியத் முறை நிராகரிக்கிறதெனினும், பணிகள் பிரிக்கப்பட வேண்டியதன் அவசியத்தை ஏற்றுக்கொள்கிறதெனக் கூறுகிறார். இதனால் நீதிமன்றப் பணிகள் தனித் தன்மை வாய்ந்தவை என்பதை அவர் உணருகிறாரெனத் தெரிகிறது. அவைகள் நிபுணர்களால் செய்யப்படவேண்டியவை. ஆனால் இந் நிபுணர்கள் தங்களைப் பற்றி நினைக்கவோ, சட்டமன்றம் அல்லது நிர்வாகத்தைக் கண்காணிக்கத் தாங்கள் இருப்பதாக நினைக்கவோ கூடாது. நிர்வாகத்துறை, சட்டத் துறை, நீதித்துறை ஆகிய அரசாங்கத்தின் மூன்று அங்கங்களும் தங்களை ஒரே குழுவின் உறுப்பினர்களாகக் கருதிப் பொதுவுடைமைக் கட்சியின் தலைமையில் இயங்கவேண்டும்.

இவ் வுண்மையை எடுத்துக் காட்டும் வகையில் அந் நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தில் சோவியத் யூனியனில் சர்வ வல்லமை கொண்ட உச்ச மன்றத்திற்கு (Supreme Soviet) நீதிமன்றங்கள் பொறுப்புடையவைகளாகும் என்பது தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. கொள்கையளவில் உச்ச மன்றமும் இதர கீழ்மட்டத்திலுள்ள மன்றங்களும் நீதிமன்றங்களாகப் பணியாற்ற முடியும். ஆனால், அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரித்தவர்கள் வழக்குகளை விசாரணை செய்து தண்டனையளிக்கும் அதிகாரத்தை உச்ச மன்றத்தால் ஏற்படுத்தப்பட்டு, அதற்குப் பொறுப்புள்ள நீதிமன்ற அமைப்பு முறையொன்றிற்கு உச்ச மன்றம் வழங்குமாறு செய்தார்கள். எனினும், நீதிமன்றங்களின் தீர்ப்புகள் உச்ச மன்றத்தால் மாற்றப்படக்கூடியவைகளாகும்.

**ஆரம்பக்கால அரசியல் நீதிமன்றங்கள் :** நீதிமன்ற முறையைத் தொடர்ந்து பெற்றிருக்கச் சோவியத் தலைவர்கள் ஒப்பியபோதிலும் எல்லா நீதிமன்றங்களும் ஒரே மாதிரியாகவே இருக்க வேண்டியதில்லையென்பது அவர்கள் கருத்தாகும். வகுப்பு விரோதிகளைப் (Class enemies) பற்றிய பயம் அவர்களுக்கு இருந்ததால் 1917 ஆம் ஆண்டைய புரட்சித் தலைவர்கள் இரு வகைப்பட்ட நீதிமன்றங்களைச் சட்டம் ஒன்றின் மூலமாக ஏற்படுத்

தினர்கள். ஒருவகை நீதிமன்றம் குற்றவியல் சிவில் சம்பந்தப் பட்ட மாமூல் வழக்குகள் பற்றியதாகவும், மற்றொரு வகை நீதி மன்றம் ஆட்சி பற்றியதாகவும் இருந்தது. இரண்டாவது வகை யைச் சேர்ந்த நீதிமன்றங்கள் 'புரட்சி நீதிமன்றங்கள்' (revolutionary tribunals) எனப்பட்டன. அவைகளது வேலை புரட்சி அரசாங்கம் கவிழ்க்கப்படாமல் இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டியதாகும். அவற்றைச் சார்ந்த நீதிபதிகள் அரசியல் துறையில் தேர்ச்சி பெற்றவர்கள். தங்களுடைய பணியில் அவர்கள் சாதாரணமாக நீதிமன்றங்கள் பின்பற்றும் நடைமுறை விதிகளையும், கட்டுப்பாடுகளையும் பின்பற்றவேண்டியதில்லை.

காலம் செல்லச் செல்ல இந்த அரசியல் நீதிமன்றங்கள், பயன் குறைந்து போனாலும் தொடர்ந்து நீடித்து வந்தன. உள்நாட்டுப் போர் நடைபெற்று வந்த காலத்திலிருந்து வந்த பெரும் அபாயங்கள் மறைந்து விட்டதால் எல்லா நீதிமன்றங்களையும் ஒரேயொருவகையைச் சேர்ந்தவைகளாக மாற்றிவிடலாமென நீதி அமைச்சரகத்தைச் சேர்ந்த சில அதிகாரிகள் கருதினர். ஆனால் வேறுசில அதிகாரிகள் இதனை ஆட்சேபித்தனர். எனெனில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட 'மக்கள் நீதிமன்றங்கள்' (Peoples Courts) போதுமான அரசியல் ஞானமில்லாமல் இருந்ததோடு; வட்டார உந்தல்களுக்குக் கட்டுப்பட்டு இயங்கவேண்டியதாக இருந்ததாகும் எனப்படுகிறது. அரசியல் நீதிமன்றங்கள் அகற்றப் பட்டால் இதர நீதிமன்றங்களில் இருந்த நீதிபதிகளின் அரசியல் அறிவும், அதற்கேற்ப நடக்கும்தன்மையும் அதிகரிக்கப்பட வேண்டிய தவசியமாகும் என வாதாடப்பட்டது. ஆனால் இது சாத்தியப்படாதென்பது ஒருங்கிணைப்பை விரும்பாதவர்கள் கொண்டிருந்த கருத்தாகும். வட்டார உந்தல்களுக்கு இரை யாகாமல் சுதந்திரமாக நீதிபதிகள் செயலாற்றும் தகுதியைப் பெறுவதற்கும் பலகாலமாகும் என்பதும் அவர்கள் கூற்றாகும். எனவே, அரசியல் அறிவு பூரணமாக ஏற்படும் வரை மேற் கூறப் பட்ட இருவகை நீதிமன்ற முறைகளும் தொடர்ந்திருக்க வேண்டியது இன்றியமையாததாகும் என்று வற்புறுத்தப்பட்டது.

இதன் விளைவாக 1921-ஆம் ஆண்டில் ஒரு சமரசத்திட்டம் வகுக்கப்பட்டு அதன்படி அரசியல் நீதிமன்றங்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டதோடு, அவைகளின் அதிகார எல்லையும் வரம்புக் குட்பட்டதாக ஆக்கப்பட்டது. மிகச்சில குற்றவகைகளே அவை களிடம் கொண்டு வரப்படலாம் என்றும் தெளிவாக்கப்பட்டது. அவைகளெல்லாம் 'இராணுவ நீதிமன்றங்களாகவும்', 'இராணுவ போக்குவரத்து நீதிமன்றங்களாகவும்' திருத்தியமைக்கப்பட்டு

பினர்களில் பாதிபேர்கள் ஜெர்மானியப் பாராளுமன்றத்தாலும் (Bundestag) மீதமுள்ள பாதிபேர்கள் இராச்சியங்களைச் சேர்ந்த நீதித்துறை அமைச்சர்களாலும் குறிப்பிடப்படுகிருர்கள்.

**2. கூட்டாட்சி அரசியல் சட்ட நீதிமன்றம் :** கூட்டாட்சி அரசியல் சட்ட நீதிமன்றம் (The Federal Constitutional Court) பான் ஆதாரச் சட்டத்திஞல் ஏற்படுத்தப்பட்டதென்ருலும், 1951-ஆம் ஆண்டு முதல் தான் நடைமுறையில் இயங்கி வருகிறது. அது, கூட்டாட்சியின் தலைநகரமான பானில் ((Bonn) இயங்காமல் கார்ல்ருகி (Karlsruhe) என்னுமிடத்தில் இயங்கிவருகிறது. இந்த நீதிமன்றம், கூட்டாட்சிச் சட்டங்கள் அல்லது இராச்சிய சட்டங்கள் ஆதாரச் சட்டத்தோடு மோதும் தன்மையையுடையவைகளாக இருக்குமாஞல், அல்லது கூட்டாட்சிச் சட்டங்களும் இராச்சிய சட்டங்களும் ஒன்ருெடொன்று மோதும் தன்மையையுடையவைகளாக இருக்குமாஞல், அம் மோதல்களை ஆராய்ந்தறிந்து தீர்ப்பு வழங்கும்அதிகார எல்லையைப் பெற்றிருக்கிறது. இவ்வாறு அது, அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் நீதிமன்றங்களுக்கு எத்தகைய சிறப்புப் பணிகள் இருக்கின்றனவோ அத்தகைய முக்கியமான பணிகளைச் செய்து வருகிறதெனலாம். இந்த நீதிமன்றத்திற்கு வரும் வழக்குகள், கூட்டாட்சிச் சட்டமொன்று அரசியலமைப்புக்கு மாருனதாக இருக்கிறதென்ற ஐயம் ஏற்படும்போது, முறைப்படியான (regular) நீதிமன்றங்களிஞல் அனுப்பி வைக்கப் படுபவைகளாகும். அதாவது கூட்டாட்சிச் சட்டமொன்று அரசியல் சட்டச் சம்மதமானது தாஞ என்ற கருத்து நிலவும்போது ஏற்படும் சந்தேகத்தைத் தீர்த்துவைக்க, வழக்குகள் அரசியல் சட்ட நீதிமன்றத்தின் பரிசீலனைக்கும் தீர்ப்புக்கும் வருகின்றன. மேற் கூறப்பட்ட முறைப்படியல்லாமல், கூட்டாட்சி அரசாங்கம், இராச்சிய அரசாங்கம் அல்லது கூட்டாட்சிப் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்களின் வேண்டுகோளுக்கிணங்கவும் வழக்குகள் அரசியல் சட்ட நீதிமன்றத்திற்குக் கொண்டு வரப்படலாம். அமெரிக்க உச்ச நீதிமன்றத்தைப் போல வல்லாமல், இந் நீதிமன்றம் அரசியல் சார்புடைய பிரச்சினைகளிலும் கருத்துரை நல்கும் அளவிற்கு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. அது, பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட விருக்கும் மசோதாவொன்று அரசியல் சட்ட பூர்வமானது தாஞ என்று அறிவுரை கூறுமாறு பாராளுமன்றத்தால் கேட்டுக் கொள்ளப்படலாம். அது குடியரசுத் தலைவருக்கெதிராகக் கொண்டுவரப்படக்கூடிய மன்பகை வழக்கு விசாரணையிலும் சில பொறுப்புகளைப் பெற்றிருக்கிறது. மேலும் அது பன்ஞட்டுச் சட்டத்தின் விதியொன்று மேற்கு ஜெர்மனியைக்

கட்டுப்படுத்துமா என்பதையும் தீர்மானிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படலாம்.

கூட்டாட்சி அரசியல் சட்ட நீதிமன்றத்தின் நீதிபதிகள், கூட்டாட்சி நீதித்துறையிலிருந்தும், இதர பல துறைகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று கூறும் ஆதாரச் சட்டம், அதனுடைய அமைப்பு, கூட்டாட்சிச் சட்டத்தினுல் தீர்மானிக்கப் படும் என்று கூறுகிறது. ஆனுல், 1951ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 12ஆம் தேதிவரை இதைப் பற்றிப் பாராளுமன்றம் சட்டமியற்ற வில்லே. இச் சட்டம், ஒவ்வொன்றும் எட்டு நீதிபதிகளேக் கொண்ட இரண்டு செனட்டுகளுக்கு, அதாவது பிரிவுகளுக்கு (chambers) வகை செய்கிறது. கூட்டாட்சி அரசியல் சட்ட நீதி மன்றத்தின் பரிசீலனேக்குக் கொண்டுவரப் படக்கூடிய பதினேந்து வகைப்பட்ட பொருள்களேயும், அவைகளில் எவ்வெவை ஒவ் வொன்றின் அதிகார எல்லேயில் வருமென்பதையும் ஆதாரச் சட்டம் தொகுத்துத் தருகிறது. இரண்டு செனட்டுகளாலும் சட்டப் பிரச்சினேகள் பற்றித் தெரிவிக்கப்பட்ட கருத்துகளில் மாறுபட்ட நிலே இருக்குமாஞல் அதனேப் பரிசீலனேசெய்ய பதினுறு நீதிபதிகள் கொண்ட முழுக் கூட்டமொன்று அழைக்கப்படலாம். இந்தப் பதினுறு நிதிபதிகளில் எட்டுப் பேர்கள் கூட்டாட்சி நீதி மன்றங்களிலிருந்து பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மீதமுள்ள எட்டு நீதிபதிகள், அரசியல் கட்சிகளின் பிரதிநிதித்துவத்திற்கேற்ப அவைகளிலிருந்து பாராளுமன்றத் தால் நியமிக்கப்படும் பன்னிரண்டுபேர்களேக் கொண்ட குழுவினுல் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இரண்டாவதாகச் சொல்லப்பட்ட எட்டுப்பேர்களும், இராச்சிய அரசாங்கங்கள், கூட்டாட்சி அரசாங் கம், பாராளுமன்ற உறுப்பினர்களால் பரிந்துரை செய்யப்பட்ட வர்களிலிருந்து நீதி அமைச்சரகத்தால் பொறுக்கி எடுக்கப்பட்ட பட்டியலிலுள்ளவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுபவர்களாவர். நீதிபதிகளின் தேர்வுமுறை எவ்வாறிருந்தாலும், அவர்கள் எந்த செனட்டிற்குவேண்டுமாஞலும் ஒதுக்கப்பட்டு நியமிக்கப்படுகி ருர்கள். நீதிபதிகளின் பதவிக்காலம் எட்டு ஆண்டுகளென் ருலும், அவர்கள் மீண்டும் நியமிக்கப்படலாம்.

## நார்வே

இங்கிலாந்து நாட்டுப் பொதுச் சட்டத்தைப் போலவும் ஃபிரான்சு நாட்டு நெப்போலியன் சட்டங்களேப் போலவும் நார்வே (Norway) நாட்டினர் சட்ட, நீதி முறைகளில் கவனத்தை ஈர்க்கும் அளவுக்குப் பெரிய சாதனேகள் எதனே யும் செய்திராவிட்டாலும், அவர்களுடைய சட்ட, நீதி

முறைகள் சில சிறப்புகளையுடையவைகளாக இருக்கின்றன. முதலாவதாக, சமரசத்தன்மையுடைய முறையொன்றை அந் நாடு தான் முதன் முதலாக ஏற்படுத்திக் கொண்டிருக்கிறதெனச் சொல்லலாம். எல்லா சிவில் வழக்குகளையும் நீதிமன்றங்களின் விசாரணைக்குக் கொண்டு வருவதற்கு முன்பாக நாட்டின் பல பகுதிகளிலும் ஆங்காங்கே காணப்படும் சமரசக் கழகத்தின் (conciliation council) பரிசீலனைக்கு அவைகள் செல்லவேண்டும். சமரசக் கழகம் ஒவ்வொன்றிலும் அந்தந்தப் பகுதியைச் சேர்ந்த அதிகாரிகளால் நியமிக்கப்படும் மூன்று சமரசவாதிகள் இருப்பார்கள். அவர்கள், நீதிமன்றங்களில் பின்பற்றப்படும் சட்ட பூர்வமான முறைகளைப் பின்பற்றாமல், சச்சரவுகளையும், பூசல் களையும் தீர்த்து வைக்க முயற்சி செய்வார்கள். சச்சரவுகளில் அல்லது வழக்கில் சம்பந்தப்பட்ட இருசாராரும் அவர்களது சமரசத் திட்டத்தை ஏற்பார்களானல், அத் திட்டம் அதிகார பூர்வமாக முறைப்படி அறிவிக்கப்பட்டுக் கட்சிக்காரர்களால் ஏற்றுக்கொள்ளப்படும். இரு சாராரில் ஒரு சாரார் வரவில்லை யெனினும், சாதாரண சிறு வழக்குகளில் சமரசக் கழகம் அதன் தீர்ப்பை அளிக்கும். இவ்வாறு வழக்குகள் தீர்த்துவைக்கப்படு வதன் காரணமாக நீதிமன்றங்களில் இதர நாடுகளைப் போல நீதிமன்றங்களால் விசாரிக்கப்படும் தகுதியைப் பெறுவதற்கு முன்னதாகவே வழக்குகள் அந் நாட்டு நீதிமன்றங்களில் குவிவது கிடையாது.

நார்வே நாட்டினர், சிலவகை நீதிமன்றங்களில் அவைகளி லுள்ள தொழில்முறை நீதிபதிகளுக்கு உதவியாக, சோவியத் யூனியனில் கடைப்பிடிக்கப்படுவதுபோலச் சாதாரண நீதிபதிகளை நியமிக்கிறார்கள். இந்தச் சாதாரண நீதிபதிகள் (lay judges) சட்ட நுணுக்கங்களில் தேர்ந்தவர்களாக இருக்கவேண்டு மென்பதில்லை. எனினும், அவர்களின் உதவி, சட்டங்களில் ஊறி அவற்றின் தன்மைகளைப் பின்பற்ற விழையும் நீதி பதிகளைக் கட்டுப்படுத்துவதற்கும், அந்த நீதிபதிகளுக்கு அந்தந்தப் பகுதியிலுள்ள மக்களின் மனநிலை, பிரச்சினைகள் போன்ற வற்றை விளக்குவதற்கும் இன்றியமையாததாகக் கருதப் படுகிறது. வேறு சில நீதிமன்றங்களில் அறநடுவர்களின் உதவி யைப் பெறும் முறையும் பின்பற்றப்படுகிறது. இறுதியாக, இதர சில நாடுகளில் உள்ளவாறு உச்ச நீதிமன்றத்திற்கு அரசிய லமைப்பு அடிப்படையில் நீதி மறு ஆய்வு செய்யும் அதிகாரம் தரப்பட்டிருந்தபோதிலும், அவ் வதிகாரம் நிகழ் முறையில் வரம்பிற்குட்பட்டதாக இருக்கிறது. ஏனெனில், அரசாங்கத் தால் நியமிக்கப்படும் நீதிபதிகளைக் கொண்ட உச்ச நீதிமன்றத்

திடம் நம்பிக்கை வைப்பதற்குப் பதிலாக ஸ்டார்டிங் (Storting) என்று சொல்லப்படும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட நிலையத்திடம் மக்கள் மிகுந்த நம்பிக்கை வைத்திருப்பதாகும். மேலும், தன்னால் இயற்றப்படும் சட்டங்கள் அரசியலமைப்புக்கு உட்பட்டு இருக்குமாறு சட்டத்துறை மிகுந்த எச்சரிக்கையுடன் இருப்பது பிறிதொரு காரணமாகும். எனவே, சட்டங்கள் அரசியலமைப்புக்கு மாறுபட்டவை அல்லது விரோதமானவை யென்ற அடிப்படையில் அவைகள் செல்லாதென்று அறிவிப்பதற்கான வாய்ப்புகள் உச்ச நீதிமன்றத்திற்கு அடிக்கடி கிடைப்பதில்லை.

சமரசக் கழகங்களால் சிவில் வழக்குகளை நீதிமன்றித்திற்கு வெளியே தீர்த்து வைக்க முடியாமற் போனாலோ, வழக்குகள் குற்றவியல் தன்மையை யுடையவைகளாக இருந்தாலோ அவைகளெல்லாம் மூன்றுவகைப்பட்ட நீதிமன்றங்களின் விசாரணைக்கு வருகின்றன. அந்த நீதிமன்றங்கள், (1) நகர நீதிமன்றங்கள் (Town Courts), (2) பைஃபாகுடு (Byfogd), (3) சோரன்ஸ் கிரைவர் (the Sorenskriver) என்பன. நார்வேயின், நான்கு மிகப்பெரிய நகரங்களான—ஆஸ்லோ (Oslo), பர்கன் (Bergen), திராண்டுஹைம் (Trondheim) ஸ்டாவன்கர் (Stavanger) ஆகிய இடங்களில் நகர நீதிமன்றங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றிலும் தலைமை நீதிபதியொருவரும், இரணடு முதல் பதினைந்து வரையிலான் உதவி நீதிபதிகளும் இருப்பார்கள். மக்கள் தொகை குறைவான ஆனால் முக்கியத்துவம் வாய்ந்த இத்ர நகரங்களில், நீதிபதிகளின் பணிகளையும் ஆயத்துறைப் பதிவாளர் (notary) அலுவல்களையும் சேர்த்துப் பார்க்கும் பைஃபாகுடு என்ற அலுவலர் ஒருவர் இருக்கிறார். அவர், மிகப் பெரிய நகரங்களிலுள்ள நீதிமன்றங்களின் பணிகளுக்குச் சமமான பணிகளைச் செய்கிறார். கடைசியாக, நாட்டுப்புறப் பகுதிகளில், சோரன்ஸ் கிரைவர் என்றழைக்கப்படும் வட்டார மாஜிஸ்திரேட்டு தலைமையில் மாவட்ட நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்த எல்லா வகைப்பட்ட நீதிமன்றங்களுக்கும் சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. நீதிபதிகள் வாக்காளர்கள்ால் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதிலாக அமைச்சரவை பரிந்துரைக்கிணங்க மன்னரால் ஆயுட்காலப் பதவிக் காலத்திற்கு நியமிக்கப்படுகிறார்கள். சில சமயங்களில் இந் நீதிமன்றங்களிலுள்ள நீதிபதிகளுக்கு உதவியாக இரண்டு சாதாரண நீதிபதிகள் நியமிக்கப்படுகிறார்கள். இந்த வட்டார நீதிமன்றங்களுக்குமேல் நடுவே லாக்மன்சுரெட் (Lagmannsvrett)

என்றழைக்கப்படும் நீதிமன்றங்களிருக்கின்றன. வட்டார நீதி மன்றங்களின் தீர்ப்புகளை எதிர்த்து இந்த இடைப்பட்ட நீதி மன்றங்களுக்குக் கட்சிக்காரர்கள் மேல் முறையீடு செய்து கொள்ள லாம். ஆனால், அவ்வாறு மேல் முறையீடு செய்து கொள்ளப் படும் வழக்குகள் ஒவ்வொன்றின் மதிப்பும் ஐந்நூறு குரானர் களுக்கு (Kroner) மேல் இருக்க வேண்டும். சில சமயங்களில் 5,000 குரோனர்களுக்கும் அதிகமான மதிப்புடைய எந்த வழக்கும் நேரிடையாக உச்ச நீதிமன்றத்தின் விசாரணைக்குக் கொண்டு செல்லப்படலாம். ஐந்தாண்டுகளுக்கும் அதிகமான சிறைக்காவல் தரப்படத்தக்க வழக்குகளில் இந்த நீதிமன்றங் களுக்கு மூலஅதிகார எல்லையிருக்கிறது. சிவில் வழக்குகளை விசாரணை செய்யும் போது இடைப்பட்ட நீதிமன்றங்கள் சாதாரண நீதிபதிகளின் உதவியைப் பெறுவதும், கிரிமினல் வழக்குகளில் பத்துப் பேர்கள் கொண்ட அறநடுவர் குழு வொன்றின் பரிந்துரையைப் பெறுவதும் வழக்கமாகும். நார்வேயில் ஆட்சித்துறை நீதிமன்றங்கள் கிடையாது. ஆனால், மீன்பிடித்தல், அரசு ஊழியர்கள் போன்றவற்றைக் கவனிப்பதற் காக அங்குத் தனி நீதிமன்றங்கள் இருக்கின்றன.

நார்வேயைப் போன்ற மக்கள்தொகை குறைவாகவுள்ள ஒரு நாட்டில் உச்ச நீதிமன்றம், அமெரிக்க ஐக்கிய நாட்டு உச்ச நீதிமன்றத்தைப் போல அல்லாமல் சிக்கல் நிறைந்ததாக இருப் பது சற்று வியப்பாக இருக்கிறது. அமைச்சர்கள், ஸ்டார்டிங் உறுப்பினர்கள், உயர் நீதிபதிகள் மேல் கொண்டுவரப்படும் குற்றச் சாட்டுகளை விசாரணை செய்வதற்கு, அரசு உயர் நீதிமன்றம் (High Court of the Realm) ஒன்று அமைக்கப்பட்டு அதிகாரம் தரப் பட்டிருந்தபோதும், உச்ச நீதிமன்ற மொன்றுதான் நாடுமுழு வற்குமான நீதிமன்றமாக அரசியலமைப்பு ஏற்பாடு செய்திருக் கிறது. அரசியலமைப்பு விதிகளுக்கிணங்க, உச்ச நீதிமன்றத்தில் ஒரு தலைமை நீதிபதியும், இதர ஆறு நீதிபதிகளும் இருக்கவேண் டும். ஆனால், இருபிரிவுகளாகவுள்ள அம் மன்றத்தில் தற்போது இருபது நீதிபதிகள் இருக்கிறார்கள். மூன்று நீதிபதிகளைக் கொண்ட மேல்முறையீட்டுக்குழு, கீழ்மட்ட நீதிமன்றங்கள், இடைப்பட்ட நீதிமன்றங்களிலிருந்து வரும் எந்தெந்த வழக்குகள் உச்ச நீதி மன்றத்தால் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படவேண்டுமென் பதைத் தீர்மானிக்கிறது. சாதாரணமாக வழக்குகளெல்லாம் இரண்டு பிரிவுகளில் ஏதாவதொன்றினால் பைசல் செய்யப்பட்ட போதினும், தனிச்சிறப்புடைய வழக்குகள் முழு நீதிமன்றத் தாலும் விசாரணை செய்யப்பட்டு முடிவு செய்யப்படுகின்றன.

## சுவீடன்

நார்வேயும், சுவீடனும் (Sweden) பல அம்சங்களில் ஒன்றுபட்டிருந்தாலும், சில அம்சங்களில் சட்டென நன்ருகத் தெரியுமளவுக்கு மாறுபட்டிருக்கின்றன. இந்த மாறுபாடுகள், நீதிமன்ற முறையில் நன்கு வெளிப்படுகின்றன. சுவீடன் இதர பெரிய ஐரோப்பிய நாடுகளைப் பின்பற்றித் தனி ஆட்சித் துறை நீதிமன்ற முறையைப் பின்பற்றுகிறது. ஆனல் நார்வே சாதாரண நீதிமன்றங்களே ஆட்சித்துறை நீதிமன்றங்களின் பணிகளையும் மேற்கொள்ளும் முறையைப் பின்பற்றுகிறது சான்று நடுவர்முறை சுவீடனில் பின்பற்றப்படுகிறதென்ருலும், அது செய்திச் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்கு மட்டுமே பின்பற்றப் படுகிறது. ஆனல், நார்வேயில் இம்முறை இதர பல துறை களுக்கும் கிட்டுமாறு செய்யப்பட்டிருக்கிறது. சுவீடனில் நீதி மறு ஆய்வுக்கு வகை செய்யப்படவில்லை. அதற்குப் பதிலாக சட்டத்துறையே அப் பணியை மேற்கொள்கிறது. சிவில் அலுவல்களை மேற்பார்வை செய்வதற்காக, சட்ட மன்றத்தினல் (Riksdag)நியமிக்கப்படும் அலுவலர் (Justitiombudsman) ஒருவர், சட்டமன்றம், அரசியலமைப்புக்கும் அப்பாற்பட்ட அல்லது விரோதமான சட்டங்களை இயற்ருதவாறு பார்த்துக்கொள்கிருர்.

நார்வேயிலுள்ளவாறு சுவீடனிலுள்ள வட்டார நீதிமன்றங் கள் நகர, நாட்டுப்புறத் தேவைகளைப் பூர்த்திசெய்யும் வகை யில் திட்டமிடப்பட்டு அமைக்கப்பட்டிருக்கின்றன. எழுபத்தைந் துக்கும் மேற்பட்ட நகரங்களிலும், பட்டினங்களிலும் மாஜிஸ்தி ரேட் (Magistrat) நீதிமன்றங்கள் என்றழைக்கப்படும் வட்டார நீதிமன்றங்கள் (Local Courts) இருக்கின்றன. ஏதேனுமொரு பட்டினம் அதற்கென வட்டார நீதிமன்றமொன்றைப் பெற் றிருக்க வேண்டுமா, அல்லது மாவட்ட நீதிமன்றமொன்றின் அதிகார எல்லைக்குள் இருக்க வேண்டுமா என்பது அதிலுள்ள மக்கள் தொகையோடு மட்டுமல்லாமல் இதர பல காரணங்கள் அடிப்படையிலும் தீர்மானிக்கப்படுவதால் சில சமயங்களில் மக்கள் தொகை அதிகமாகவுள்ள பட்டினத்திற்கு வட்டார நீதி மன்றம் இல்லாமலும் மக்கள்தொகை குறைவாகவுள்ள நகர மொன்றிற்கு வட்டார்ர நீதிமன்றம் இருக்கின்ற நிலைமையும் அங்குக் காணப்படுகிறது. இந்த நகர நீதிமன்றங்களுக்குத் தலைவராக இருப்பவர் அந்தந்தப் பட்டினத்தின் மேயராவார் (Börgmastare), யெரிய நகரமொன்றின் மேயராக இருப்பவர் சட்ட, நீதித்துறை களில் அறிவும், பயிற்சியும் உடையவராக இருப்பார். சாதாரண மாக ஒவ்வொரு மேயருக்கும் உதவியாக இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட துணை நீதிபதிகள் இருப்பார்கள். வேலைப்பளு அதிக மாகவுள்ள ஸ்டாக்ஹோம் (Stockholm) போன்ற நகரங்களில்

இருபதுக்கும் மேற்பட்ட நீதிபதிகள் இருக்கிறார்கள். வழக்கு களின் எண்ணிக்கை வழக்கத்தையும் விட அதிகமாக இருக்கும் பெரிய நகரங்களில், சாதாரண வழக்குகளில் நகர நீதிமன்றங் களின் காலத்தையும், சக்தியையும் வீணடிக்காமல் பார்த்துக் கொள்ளக் காவல் நீதிமன்றங்கள் (Police Courts) ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. நகர்ப்புறங்களும், நாட்டுப்புறங்களும் 125 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றிலும் ஒரு நீதிபதி யைக்கொண்ட மாவட்ட நீதிமன்றம் (district court) அமைக்கப் பட்டிருக்கிறது. இந்த மாவட்ட நீதிபதிகளுக்கு உதவியாக, மாவட்டத்தின் பல துணைப் பிரிவுகளிலிருந்து ஆறாண்டுப் பதவிக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படும் பன்னிரண்டு அல்லது அதற் கும் மேற்பட்ட குடிமக்களை உறுப்பினர்களாகக் கொண்ட குழுக் கள் மாவட்டங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக் குழுக் களின் உறுப்பினர்களுக்கு அவர்களுடைய பணிகளுக்காக எத் தகைய ஊதியமும் தரப்படுவதில்லை. எனினும் குழு உறுப் பினர்களாக இருப்பவர்கள் சமுதாயத்தினால் நன்கு மதிக் கப்படுகிறார்கள். பெரும்பாலான உறுப்பினர்கள் தங்களு டைய கடமைகளையும், பொறுப்புகளையும் திறமையோடு செய்து வருகிறார்கள். பெரிய வழக்குகள் விசாரணை செய்யப் படும்போது குறைந்தது ஏழுபேர்கள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். சிறிய அல்லது சாதாரண வழக்கு விசாரணையின் போது மூவர் இருந்தால் போதுமானது. இவ் வுறுப்பினர்கள் ஒரு மனதான முடிவிற்கு வந்தால், நீதிபதியின் தீர்ப்பையும் மாற்றி விட முடியும். நகர, மாவட்ட நீதிமன்றங்களுக்கு சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்வதற்கு அதிகாரம் தரப் பட்டிருக்கிறது. மாவட்ட நீதிமன்றங்களிலும், நகர நீதிமன்றங் களிலுமுள்ள நீதிபதிகள் அமைச்சரவையினால் ஓய்வு பெறும் வயதை அடையும்வரை பதவியிலிருக்க நியமிக்கப்படுகிறார்கள். கீழ்மட்டத்தில் ஆரம்பக் கட்டத்திலுள்ள இந்த நகர, மாவட்ட நீதிமன்றங்களுக்கு மேல், ஒவ்வொன்றிலும் ஒருதலைமை நீதிபதியும் ஆறு முதல் நாற்பது உதவி நீதிபதிகளும் கொண்ட நான்கு மேல் முறையீட்டு நீதிமன்றங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் பலவகைப்பட்ட வழக்குகளையும் விசாரணை செய்வதற்குத் தகுதியைப் பெறும் வகையில் மேலும் பல பிரிவுகளாகப்பிரிக்கப் பட்டிருக்கின்றன. ஸ்டாக்ஹோமில் அமைக்கப்பட்டுள்ள நீதி மன்றத்தின் இருபிரிவுகள், முறையே தண்ணீர் உரிமைகள் (water rights) பற்றிய சச்சரவுகள், இராணுவம் சம்பந்தப்பட்ட வழக்குகளைக் (military cases) கவனிக்கும் வகையில் தனித்தன்மை வாய்ந்தவைகளாக இருக்கின்றன. தொழிலாளர் தகராறுகளை யும் பிரச்சினைகளையும் கவனிப்பதிற்காகத் தனியாக ஒரு நீதிமன்ற

மும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதில் தலைமை நீதிபதியும் ஏழு உதவி நீதிபதிகளும் இருப்பார்கள். கடைசியாக, அரசாங்க நடவடிக்கைகள் காரணமாக எழும் வழக்குகளை விசாரணை செய்வதற்காக ஏழு நீதிபதிகளைக் கொண்ட ஓர் உச்ச ஆட்சித் துறை நீதிமன்றமும் (Supreme Administrative Court) இருக்கிறது.

மேற்கூறப்பட்ட நீதிமன்றங்களுக்கும் மேலே ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக இயங்கிவரும் உச்ச நீதிமன்றம் (Högsta Domstolen) ஒன்றும் இருக்கிறது. 1809 ஆம் ஆண்டு அரசியலமைப்புச் சட்டம், பிறகு இயற்றப்படும் சட்டமொன்றினால் அதிகரிக்கப்பட்டாலல்லது, அதில் பன்னிரண்டு நீதிபதிகள் இருக்க வேண்டுமென்று கூறுகிறது. இப்போது அந் நீதிமன்றத்தில் இருபத்தைந்து நீதிபதிகளுக்கும் மேல் இருக்கிறார்கள். நிகழ் முறையில் அம் மன்றம் இரண்டு அல்லது மூன்று பிரிவுகளாக அமைந்து பணியாற்றுகிறது. ஒவ்வொரு பிரிவிலும் வழக்கு விசாரணையின்போது குறைந்தது ஏழு நீதிபதிகளாவது கலந்து கொள்ளவேண்டும். மிக முக்கியமான வழக்குகள் விசாரணைக்கு வரும்போது முழு நீதிமன்றமும் அவ் வழக்குகள் விசாரணையைச் செய்கிறது. 1909-ம் ஆண்டுக்கு முன்பு வரையிலும் அந் நீதிமன்றத்திற்கு அரசரே தலைமை வகித்தார். நீதிமன்றத்தின் நடவடிக்கைளில் அரசருக்கு மட்டும் இரண்டு வாக்குகள் உண்டு. இப்போதும் நீதிமன்றத்தின் அலுவல்கள் அரசர் பெயராலேயே செய்யப்படுகின்றன. இராணுவ நீதிமன்றங்களிலிருந்து வழக்குகள் மேல் முறையீட்டு அடிப்படையில் உச்ச நீதிமன்றத்திற்குக் கொண்டு வரப்படும் போது இராணுவத்தைச் சேர்ந்த ஓர் உயர் அதிகாரியும், கப்பற்படையைச் சேர்ந்த ஓர் உயர் அதிகாரியும் ஆக இரண்டு உயர் அதிகாரிகள் அம் மன்றத்தில் அமர்வார்கள். ஒரு சில சமயங்களில், உச்ச ஆட்சித்துறை நீதிமன்றத்தின் அதிகார எல்லைக் குட்பட்ட அரசு திருச்சபை சம்பந்தப்பட்ட வழக்குகளையும் விசாரணை செய்து தீர்ப்பளிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது. அரசாங்க அதிகாரிகளின் தவறான நடத்தை பற்றிய ஒரு சில வழக்குகளில் உச்ச நீதிமன்றம் முதலில் விசாரணை செய்யும் மூல அதிகாரமுடையதென்றாலும், பெரும்பாலும் அதனிடம் மேல் முறையீட்டு அடிப்படையில் வரும் வழக்குகளே அதிகம். அதிலும், குறிப்பாக மிக முக்கியமான வழக்குகளே அதனிடம் எடுத்துச் செல்லப்படலாம்.

### கானடா

கானடாவில் நீதித்துறையின் மேல் மட்டத்தில் 1875 ஆம் ஆண்டு முதல் இயங்கிவரும் உச்ச நீதிமன்றம் இருக்கிறது.

இம் மன்றத்தின் தலைமை நீதிபதியும், இதர எட்டு நீதிபதிகளும் அமைச்சரவையின் சிபாரிசின் பேரில் ஆளுநர்-தலைவரால் (Governer - General) நியமிக்கப் படுகிறார்கள். கானடாவிலுள்ள மாநிலங்களில் நீதித்துறையில் மேல் மட்டங்களிலுள்ள நீதிமன்றங்களில் பணியாற்றுகின்ற நீதிபதிகள் அல்லது நீதிமன்றங்களில் வழக்குரைஞர்களாகப் பணியாற்றுபவர்களில் பத்தாண்டுக்கும் குறையாத அனுபவம் உடையவர்கள் எவரும் உச்ச நீதிமன்றத்திற்கு நீதிபதியாக நியமிக்கப்படலாம். நீதிபதிகள் எழுபத்தைந்து வயதை அடைந்ததும் பதவியிலிருந்து ஓய்வு பெறுகிறார்கள். அவர்கள், ஆளுநர் தலைவரின் நல்லெண்ணத்தை இழந்தாலோ. செனட், பொதுமக்கள் சபை ஆகியவை அவர்களைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமென்று கோரித் தீர்மானமொன்றை இயற்றினாலோ, பதவிக் காலத்திற்கு முன்னதாகவே பதவியிலிருந்து அகற்றப்படலாம். இம் மன்றத்தின் தலைமைச் செயலகம் ஆட்டாவாவில் (Ottawa) இருக்கிறது. சிவில், குற்றவியல் துறைகளில் கானடா முழுமைக்கும் இதற்கு மேல் முறையீட்டு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. ஆளுநர்-தலைவர் கேட்டுக்கொள்ளும் எந்தவொரு பிரச்சினை பற்றியும் இந் நீதிமன்றம் ஆலோசனை வழங்க வேண்டும். அவ்வாறே, செனட்டோ, பொதுமக்கள் சபையோ தனி மசோதாக்கள் (Private Bills) பற்றிய இதன் கருத்துகளை விரும்பிக்கேட்டால் நீதிமன்றம் அளிக்க வேண்டும்.

மாநிலங்களிலுள்ள உயர்வகை நீதிமன்றங்களால் இறுதியாக அளிக்கப்படும் தீர்ப்புகளை எதிர்த்து உச்ச நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்துகொள்ளப்படலாம். ஆனால், அவ்வாறு மேல் முறையீட்டு வாயிலாக வரும் வழக்குகளில் சம்பந்தப்பட்ட தொகையின் மதிப்பு 2,000 டாலர்களுக்குக் குறையாமல் இருக்க வேண்டியதோடு, அப்பீல் செய்வதற்குச் சம்பந்தப்பட்ட நீதிமன்றங்களின் அனுமதியும் பெறப்பட்டிருக்க வேண்டும். சில சமயங்களில் உச்ச நீதிமன்றமே இத்தகைய அனுமதியை வழங்கலாம் குற்றவியல் வழக்குகள் பற்றிய மேல் முறையீடு குற்றவியல் சட்டத்தினால் ஒழுங்குபடுத்தப்படுகிறது. இதர கூட்டாட்சி நீதிமன்றங்களிலிருந்து மேல் முறையீட்டு மூலமாக வரும் வழக்குகள் அந் நீதிமன்றங்களை ஏற்படுத்தும் சட்டங்களால் ஒழுங்குபடுத்தப் படுகின்றன. கானடாவைப் பொறுத்த வரையிலும் எல்லாவகையான வழக்குகளிலும் அந் நாட்டு உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்புகள் இறுதியானவை.

கருவூல நீதிமன்றம் (Exchequer Court) : இந் நீதிமன்றம் 1875ஆம் ஆண்டு உச்ச நீதிமன்றத்தின் ஒரு பகுதியாக ஏற்படுத்

தப்பட்டதென்ருலும், இப்போது அது கருவூல நீதிமன்றச் சட்டப்படி (Exchequer Court Act) தனியாக இயங்கிவருகிறது. இதில் ஒரு தலைமை நீதிபதியும், நான்கு இதர நீதிபதிகளும் இருக்கிருர்கள். இவர்கள் அனைவரும் உச்ச நீதிமன்ற நீதிபதிகளைப் போலப் பதவிக்கு அமர்த்தப்பட்டு, நீக்கப்படுகிருர்கள். இந் நீதிமன்றத்தின் தலைமைப்பீடம் ஆட்டாவாவில் இருக்கிறதென்ருலும், இதன் கூட்டங்களும் நடவடிக்கைகளும் கானடாவின் எப்பகுதியிலும் இதன் முடிவுப்படி நடத்தப்படலாம். உரிமை விண்ணப்பச் சட்ட (Petition of Right Act) அடிப்படையில் அரசாங்கத்திற்கு எதிராக நட்ட ஈடுகோரிக் கொண்டுவரப்படும் பல வகைப்பட்ட வழக்குகளையும் விசாரணை செய்யும் அதிகாரம் இந் நீதிமன்றத்திற்குத் தரப்பட்டிருக்கிறது. குடிமக்களுக்கெதிராக அரசாங்கம் கொண்டுவரும் வழக்குகளையும் இம் மன்றம் விசாரித்துத் தீர்ப்பு வழங்கும். இக் கருவூல நீதிமன்றம், கடற்படைத் துறைசார்ந்த வழக்குகளையும் கேட்கும் அதிகாரமுடையதாகும்.

இந் நீதிமன்றத்தால் முடிவு செய்யப்படும் வழக்குகளில் 500 டாலர்களுக்குக் குறையாத மதிப்புடையவை உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பிற்கு மேல் முறையீட்டு அடிப்படையில் எடுத்துச் செல்லப்படலாம். அத் தொகைக்கும் குறைவான மதிப்புடைய வழக்குகளில் சட்டப்பிரச்சினைகளும், விளக்கங்களும் சம்பந்தப்பட்டிருக்குமாஞல் உச்ச நீதிமன்றத்திற்கு அப்பீல் செய்து கொள்ளப்படலாம்.

**பிரிவி கவுன்சிலின் நீதிக்குழு (Judicial Committee of the Privy Council)** : 1949-ஆம் ஆண்டுவரையிலும், கானடா நாட்டு மக்கள் அந் நாட்டு உச்ச நீதிமன்றத்தின் முடிவுகளை எதிர்த்து லண்டனிலுள்ள பிரிவிகவுன்சிலின் நீதிக்குழுவிற்குச் சில சமயங்களில் விண்ணப்பித்துக் கொள்ளும் உரிமை தரப்பட்டிருந்தார்கள். இதற்குக் காரணம் கானடா, இங்கிலாந்து நாட்டுடனுன தன்னுடைய உறவை வெட்டிக் கொள்ளாமல் அந்நாட்டின் டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடாக இருந்ததாகும். ஆனுல், ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் பல சுதந்திரம் பெற்றதும், தங்களுடைய நீதித்துறையிலிருந்த இத்தகைய பிணைப்பை அறுத்துக் கொண்டதைத் தொடர்ந்து, கானடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளும், இப் பிணைப்பு, காலத்திற்கும், சுதந்திரக் கொள்கைகளுக்கும் ஏற்றதன்று என்று உணர்ந்து துண்டித்துக் கொண்டன. எனவே, இப்போது பிரிவி கவுன்சிலின் நிதிக்குழுவிற்கு வழக்குகள் மேல் முறையீட்டு மூலமாக எடுத்துச் செல்லப்படுவதில்லை.

மாநில நீதிமன்றங்கள் (Provincial Courts) : பிரித்தானிய வட அமெரிக்கச் சட்டம் (1857) மாநிலங்களில் இருக்க வேண்டிய நீதித்துறையைப் பற்றியும் கூறுகிறது. அச் சட்டத்தின் 92 (14)-ஆம் பிரிவு, மாநிலங்களிலுள்ள மேல் மட்ட, மாவட்ட, கவுண்டி நீதிமன்றங்களின் அமைப்பு, பராமரிப்பு, நீதிவழங்கல் ஆகிய பலவற்றைப் பற்றிக் கூறுகிறது. இந் நீதிமன்றங்களுக்கான நீதிபதிகள் ஆளுநர்-தலைவரால் நியமிக்கப்படுகிறார்கள்.

மாநிலங்களிலுள்ள நீதிமன்றங்கள், குறிப்பாக மேல்மட்டத்திலுள்ள நீதிமன்றங்கள் அவற்றின் அமைப்பு, அளவு ஆகிய அம்சங்களில் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக, நோவாஸ்கோஷியா (Nova Scotia) விலுள்ள உச்ச நீதிமன்றத்திலுள்ள நீதிபதிகள் தனித்தனியாக மாநிலம் முழுவதும் சுற்றி வருகிறார்கள். ஆனால், கீழ்மட்ட நீதிமன்றங்களிலிருந்து அப்பீல் வாயிலாக வரும் வழக்குகளை விசாரணை செய்வதற்கு அவர்கள் அனைவரும் மேல் முறையீட்டு நீதிமன்றமாக அமர்கிறார்கள். பெரிய மாநிலமான ஒண்டாரியோவிலுள்ள உச்ச நீதிமன்றம், மேல் முறையீட்டு நீதிமன்றம் (Court of Appeal) உயர் நீதிமன்றம் (High Court) என்ற இரு பிரிவுகளையுடையதாக இருக்கிறது. முதலாவதாகச் சொல்லப்பட்ட பிரிவு, உயர்நீதிமன்றத்திலிருந்தும், கீழ்மட்டத்திலுள்ள நீதிமன்றங்களிலிருந்தும் மேல் முறையீடு மூலமாக வரும் வழக்குகளை மட்டுமே கேட்கும். இரண்டாவதாகச் சொல்லப்பட்ட பிரிவு, முதல்நிலை வழக்குகளையும், ஒரு சில அப்பீல் வழக்குகளையும் விசாரணை செய்கிறது. இதற்கு அடுத்தாற்போல் மாவட்ட நீதிமன்றங்களிருக்கின்றன. இவை சாதாரண சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்வதற்கான மூல அதிகாரம் உடையவைகளாகும். மேற்கூறப்பட்ட நீதிமன்றங்களோடு கூட, சாதாரண நீதிமன்றங்கள் பல, திருமண விலக்கு, இளங்குற்றவாளிகள், கட்டாய சமரசம் போன்றவைகளைக் கவனிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவை தவிர, பல மாஜிஸ்திரேட்டு நீதிமன்றங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## ஆஸ்திரேலியா

கானடாவைப் போலவே, ஆஸ்திரேலியாவிலும் நீதித்துறையின் மேல்மட்டத்தில் ஆஸ்திரேலியாவின் உயர் நீதிமன்றம் என்றழைக்கப்படும் கூட்டாட்சி உச்ச நீதிமொன்று அரசியலமைப்பினாலேயே ஏற்படுத்தப்பட்டுச் செயலாற்றி வருகிறது. இந்த உயர் நீதிமன்றத்திற்கு, இதர கூட்டாட்சி, இராச்சிய நீதிமன்றங்களிலிருந்து அப்பீல் மூலமாக வரும் வழக்குகளில் மேல்முறை

யீட்டு அதிகார எல்லை தரப்பட்டிருக்கிறது. அரயசிலமைப்பு விளக்கம் பற்றிய வழக்குகளில் இந் நீதிமன்றத்திற்குள்ள அதிகார வரம்பு மிகச் சிறப்பு வாய்ந்ததாகும்.

ஆஸ்திரேலிய உயர் நீதிமன்றத்தில் தற்போது ஒரு தலைமை நீதிபதியும், வேறு ஆறு நீதிபதிகளும் இருக்கிறார்கள். இவர்கள் ஆளுநர் தலைவரால் ஆயுட்காலம் முழுவதற்கும் பதவியிலிருக்க நியமிக்கப்படுகிறார்கள். ஆனால், பதவிக்காலம் முடிவதற்கு முன் பாகவே, ஒரே கூட்டத்தொடரில் இவர்கள் பதவியிலிருந்து விலக்கப்படவேண்டுமென்னும் தீர்மானமொன்றைப் பாராளு மன்றம் இயற்றுமானால், அமைச்சரவையின் வேண்டுகோளுக் கிணங்க நீதிபதிகள் பதவிநீக்கம் செய்யப்படலாம். உயர்நீதி மன்றம் மெல்போர்னிலிருந்து (Melbourne) செயலாற்றுகிறது. ஆனால் இதன் கூட்டங்களும், நடவடிக்கைகளும், தேவைக்கும், சூழ்நிலைகளுக்கும் தகுந்தாற்போல இராச்சிய தலைநகரங்களிலும் நடத்தப்படலாம்.

இந்த உயர்நீதிமன்றம், மூல, மேல் முறையீட்டு அதிகார எல்லைகளையுடையது. ஆனால் நிகழ் முறையில் இதனிடம் மேல் முறையீட்டு வழக்குகளே மிக அதிகமாக வருகின்றன. மிகச் சாதாரண விஷயங்கள் சம்பந்தப்பட்ட வழக்குகள் மேல்முறை யீட்டு முறை மூலமாகவும் இந் நீதிமன்றத்திற்கு எடுத்துச்செல்லப் படமுடியாது. எந்தெந்த நீதிமன்றங்களிலிருந்து எத்தகைய வழக்குகள் உயர்நீதிமன்றத்தின் பரிசீலனைக்கும் தீர்ப்புக்கும் எடுத் துச் செல்லப்படலாமென்பதைப் பாராளுமன்றம், சட்டங்கள் இயற்றுவதன்வாயிலாக ஒழுங்குபடுத்தலாம்.

அரசியலமைப்பின் 75-ஆம் பிரிவு பின்வரும் இனங்களில் உயர் நீதிமன்றத்திற்கு மூல அதிகார எல்லை இருப்பதாகக் கூறுகிறது. அவைகள் வருமாறு: (1) உடன்படிக்கை ஏதேனுமொன்றின் அடிப்படையில் எழுபவை; (2) இதர நாடுகளின் பிரதிநிதிகளாக ஆஸ்திரேலியாவிற்கு வருபவர்கள் அல்லது கான்சல்கள் (Consuls); (3) காமன்வெல்த் தனிப்பட்டவர்கள் மேலோ, தனிப் பட்டவர்கள் காமன்வெல்த் மேலோ தொடரும் அல்லது காமன் வெல்த் ஒரு கட்சியாக இருக்கும் வழக்குகள்; (4) இரு இராச்சியங்கள் அல்லது பல்வேறு இராச்சியங்களைச் சேர்ந்த குடி மக்கள் அல்லது ஓர் இராச்சியத்திற்கும் பிறிதோர் இராச்சி யத்தைச் சேர்ந்த குடிமகனுக்கும் இடையிலான வழக்குகள்; (5) காமன் வெல்த் அதிகாரிக்கு எதிராகக் கொண்டு வரப்படும் வழக்கில் அவர் மீது ஆணை (writ) யொன்றைப் பிறப்பிக்கவேண்டு

மென்று கேட்டுக் கொள்ளுதல். இவைகளோடு, (1) அரசியலமைப்பு விளக்கம், (2) கூட்டாட்சியின் சட்டங்களுக்கு விரோதமான, தண்டிக்கப்படத்தக்க குற்றங்கள் போன்றவற்றிலும் உயர் நீதிமன்றத்திற்கு மூலஅதிகாரம் தரப்பட்டிருக்கிறது. வரிவிதிப்புத் துறையைச் சேர்ந்த மறுபரிசிலனை வாரியங்கள் (Boards of Review) போன்ற ஆட்சித்துறை நீதிமன்றங்களிலிருந்து வரும் மேல் முறையீட்டு வழக்குகளை விசாரணை செய்வதற்கும், முடிவு கூறுவதற்கும் அதிகாரமுண்டு. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் போது இது உயர் நீதிமன்றத்திற்குள்ள மேல்முறையீட்டு அதிகாரம் என்று தோன்றினாலும் அரசியல் சட்டக் கொள்கைகளின்படி இது மூல அதிகாரத்தின் ஒரு பகுதியாகவே இருந்து வருகிறது.

ஆரம்பத்தில் குறிப்பிட்டவாறு, கூட்டாட்சி உயர்நீதிமன்றம் நீதித்துறையில் சிறந்ததோர் இடத்தைப்பெற்றிருக்கிறது. இராச்சியங்களிலுள்ள நீதிமன்றங்கள் அரசியலமைப்பையும், கூட்டாட்சிச் சட்டங்களையும் விளக்கும் உரிமையையும் அவற்றின் அடிப்படையில் எழும் வழக்குகளை விசாரணை செய்து தீர்ப்பளிக்கும் அதிகாரத்தையும் பெற்றிருந்த போதிலும், இத் துறைகளில் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதியானது என்பது குறிப்பிடத்தக்கது. வழக்குகள் இராச்சிய நீதிமன்றங்களில் நடை பெற்றுக்கொண்டிருக்கும் போதே, உயர் நீதிமன்றத்தின் பரிசீலனைக்கு அவை மாற்றப்படலாமென்பதும், இராச்சியங்களுக் கிடையே ஏற்படும் வழக்குகளை விசாரணை செய்ய இராச்சிய நீதிமன்றங்களுக்கு எவ்வித அதிகாரமும் கிடையாதென்பதும் கவனிக்கத் தக்கது.

ஆஸ்திரேலிய காமன்வெல்த் முழுவதற்கும் அதிகார எல்லையையுடைய வேறு இரு நீதிமன்றங்களையும் அந்நாட்டுப் பாராளுமன்றம் ஏற்படுத்தியிருக்கிறது. அவை (1) கூட்டாட்சி திவால் நீதிமன்றம் (Federal Court of Bankruptcy), (2) காமன் வெல்த் தொழில் நீதிமன்றம் (Commonwealth Industrial Court) என்பன.

கூட்டாட்சி திவால் நீதிமன்றம், திவாலான எஸ்டேட்டுகள் சம்பந்தப்பட்ட சட்டப் பிரச்சினைகளை ஆராய்ந்து முடிவு செய்கிறது. காமன்வெல்த் தொழில் நீதிமன்றம், இராச்சியங் களின் எல்லைக்கும் அப்பாற்பட்ட தொழில் சார்புடைய தகராறு களையும் வழக்குகளையும் தீர்த்துவைக்கிறது.

## இலத்தீன் அமெரிக்க நாடுகளில் நீதித்துறை
## (Judiciary in Latin American Countries)

அரசாங்கங்களைப் பற்றிய நூல்களில் இலத்தீன் அமெரிக்க நாடுகளிலுள்ள அரசாங்கங்களைப் பற்றியோ நீதித்துறையைப் பற்றியோ சாதாரணமாக எவ்விதமான செய்தியும் தரப்படுவதில்லை. இதற்குக் காரணம் என்னவென்று திட்டவட்டமாகக் கூறமுடியாதெனினும், பொதுவாக, அப் பகுதியிலுள்ள இருபது நாடுகளும் தனியாகவோ கூட்டாகவோ எந்தவொரு துறையிலும் இதர ஐரோப்பிய, ஆசிய நாடுகளைப்போல தெளிவான, பிறருக்குப் பயன்தரும் வகையில் எந்தச் சாதனையையும் செய்யாமற்போனதெனலாம். அதாவது இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்ற அரசாங்கமுறையைப் போலவோ, அமெரிக்கக் கூட்டாட்சித் தத்துவத்தைப் போலவோ, சோவியத் யூனியனின் கட்சிக் கட்டுப்பாட்டிற் குட்பட்ட அரசாங்க அமைப்பைப் போலவோ, காந்தீயக் கொள்கைகளைப் பின்பற்றும் இந்திய சமூக, பொருளாதாரத் தத்துவமுறைகளைப் போலவோ பிறநாடுகளைக் கவரும் அளவுக்கு அவைகள் முன்னேற்ற மெதையும் தென் அமெரிக்கப் பகுதியில் ஏற்படுத்தவில்லை. எனினும், அந்நாடுகளின் மொத்த நிலப்பரப்பளவையும், மக்கள் தொகையையும் ஐக்கிய நாடுகள் கழகத்தில் அவைகளுக்குள்ள முக்கியமான இடத்தையும் கருத்தில் கொள்ளும்போது, அந் நாடுகளைப் பற்றிச் சிறிதளவாவது தெரிந்து கொள்வது இன்றியமையாததாகும். ஆனால் அந்த இருபது நாடுகளும் எந்தவோர் அம்சத்திலும் எல்லாவற்றிற்கும் பொதுவான தன்மையைப் பெற்றில்லாதிருப்பது அவைகளைப் பற்றி எழுத விரும்பும் ஆசிரியர்களுக்குள்ள இடர்ப்பாடாகும்.

இலத்தீன் அமெரிக்க நாடுகளில் குறிப்பிடத் தகுந்தவை, பிரேசில், பெரு, கைட்டி (Haiti), சிலி, வெனுசுயலா, நிகாரகுவா, கொண்டுரா (Hondures,) பராகுவே, கௌதேமாலா, டாமினிகன் குடியரசு, பனமா, உருகுவே, அர்ஜெண்டினா, மெக்சிகோ பொலிவியா, கியூபா, ஈகுவடார் முதலியன. ஆனால், அந் நாடுகள் ஒவ்வொன்றிலுமுள்ள நீதித்துறையமைப்பைப் பற்றித் தனித்தனியாக எழுதுவதென்பது அவ்வளவு எளிதானதன்று. எனவே, அவைகளில் சாதாரணமாகக் காணப்படும் சில அம்சங்கள் சுருக்கமாக இங்குத் தரப்படுகின்றன.

நீதித்துறையில், பொதுவாக ஃபிரான்சு நாட்டுச் செல்வாக்கு மிகுந்து காணப்படுகிறது. எனினும் பிராந்திய நிலைமைக்குத்

தகுந்தவாறு மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அந் நாடு களிலுள்ள சட்டங்கள் பொரும்பாலும் நெப்போலியன் சட்டங்கள் (Napoleonic Codes) அடிப்படையில் இயற்றப்பட்டவைகளாகும். அங்குள்ள மேல் முறையீட்டு நீதிமன்றங்கள், ஃபிரன்சு நாட்டிலுள்ள காசேஷன் நீதிமன்றத்தின் (Court of Cassation) முடிவுகளை ஆதாரமாக எடுத்துக்காட்டி, தங்களின் கருத்துகளையும் முடிவுகளையும் வெளியிடுகின்றன.

அங்குள்ள நீதித்துறைகளின் மேல் மட்டத்தில் ஓர் உச்ச நீதிமன்றமோ, மேல்முறையீட்டு நீதி மன்றமோ இருக்கிறது. ஆனல் அந் நீதி மன்றம், பாரிஸ் நகரத்திலுள்ள காசேஷன் நீதிமன்றம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதுபோல் பிரிக்கப்பட்டிருக்கவில்லை. இதற்குக் காரணம் நீதிமன்றம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்படாமல் இருந்தால் நீதிபதிகள் பெருந்தடைகள் இல்லாமல் செயல்பட முடியுமென்பதாகும், அப் பகுதிகளிலுள்ள இந்த நீதிமன்றங்கள் மக்களிடையே மிகுந்த செல்வாக்குடையவைகளாகவும், சிறந்த ஞானமும் தகுதியுமுடைய நீதிபதிகளையுடையவைகளாகவும் இருக்கின்றன. இந்த நீதிமன்றங்கனில் சில அமெரிக்க உச்ச நீதிமன்றத்திற்குத் தரப்பட்டிருப்பதுபோல நீதி மறு ஆய்வு அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. ஆனல் இவ் வதிகாரம் பல தடைகளுக்கு உட்பட்டது என்பதோடு, அது இன்னும் ஒரு கொள்கையளவில்தான் இருக்கிறதென்பதே உண்மை. அர்ஜெண்டினவைப் போன்ற நாடுகளிலுள்ள உச்ச நீதிமன்றம் புகழுடையதாக இருப்பினும், அந் மன்றம் நிர்வாகத்துறையின், குறிப்பாக வலிமைமிக்கவர்கள் அதிகாரத்திலிருக்கும் போது கைப்பாவையாக இருத்கிறதென்பதும், அதன் முடிவுகள் ஒதுக்கிவைக்கப் படுகின்றனவென்பதும் சாதாரண அம்சங்களாகும்.

உச்ச நீதிமன்றத்திற்குக் கீழே சாதாரணமாகப் பல நடுநீதி மன்றங்கள் இருக்கின்றன. இவைகளின் நீதிபதிகள் மத்திய அரசாங்கத்திஞல் நியமிக்கப்படுகிருர்கள். அவர்கள் நீதி அமைச்சரகத்திற்குப் பொறுப்புடையவர்களாக இருக்கிருர்கள். இவைகள் மூல அதிகாரமும் மேல் முறையீட்டு அதிகாரமும் உடையவை. இறுதியாக, நூற்றுக்கணக்கான சாதாரண சிறுசிறு சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்து தீர்ப்பளிக்கும் அதிகாரமுடைய பலவட்டார நீதிமன்றங்கள் இருக்கின்றன. இலத்தீன் அமெரிக்க நாடுகளிலுள்ள மக்கள் வழக்காடுவதில் ஆர்வமுடையவர்களாதலால், அங்குள்ள வட்டார, மாவட்ட நீதிமன்றங்கள்

எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கின்றன. அனேகமாக எல்லா இடங்களிலும் சட்டத்தொழில் மிகுந்த வரவேற்புடையதாக, இருப்பதால், அங்குள்ள பல்கலைக் கழகங்களில் வேறு கல்வித் துறைகள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் சட்டக் கல்வித்துறை இருக்கிறது. எனவே, வழக்குரைஞர்கள் மிக அதிகமாக இருப்பதோடு அவர்களிடையேயுள்ள போட்டியும் தீவிரமாக இருக்கிறது.

# மேற்கோள் நூல் பட்டியல்
## (SELECT BIBILIOGRAPHY)


BASU, D. D. — Commentary on the Constitution of India.

CORWIN, S. EDWARD. — American Constitutional History.

FINER, H. — Theory and Practice of Modern Government
Major Governments of Europe

GETTELL, R. G. — Political Science

GLEDHILL, A. — The Republic of India

GHOSH, R. C. — The Goverament of the Swiss Republic

HAROLD ZINK — Modern Governments

HART, H. L. A. — The Concept of Law

HAZARD, JOHN, N. — The Soviet system ofGovernment

IKE, N. — Japanese Politics

IRISH and PROTHRO — The Politics of American Democracy.

KAHIN, G. M. — Major Governments of Asia.

KAPUR, A. C. — Select Modern Constitutions

Mac IVER, R. M. — Web of Government

Mc NELLY — Japanese and Government and Politics.

PYLEE, M. V. — India's Constitution.

REDFORD and Others — Politics and Government in the United States

SHARMA, B. M. and CHOUDHRY, L. P. — Federal Polity

SHARAN, P. — Political Organisation and Government.

STRONG, C. F. — Modern Political Constitutions

TANG, S. H. — Communist China Today

VYSHINSKY, ANDREW, Y. — The Law of the Soviet State

WALLER, C. J. — Government and Politics in China.

# கலைச் சொற்கள்

## (TECHNICAL TERMS)

### A

Accusatorial — குற்றம் சாட்டும் அல்லது விசாரணைத் தன்மையுடைய
Adjudication — நடுத்தீர்ப்புக் கூறு
Admiralty — கடற்படை சார்புடைய
Administrative Court — ஆட்சித்துறை நீதிமன்றம்
Administrative Justice — ஆட்சித்துறை நீதி
Administrative Law — ஆட்சித்துறைச் சட்டம்
Agency — செயலி
Appeal — மேல் முறையீடு
Arbitrary — ஒருதலைப் பட்சமான
Article — விதி (அரசியலமைப்பு)
Assizes — ஆணையாளர் விசாரணை நீதி மன்றம்; அசைஸ்
Attorney — வழக்குரைஞர்

### B

Bankruptcy — திவால் நிலைமை
Basic Law — ஆதார அல்லது அடிப்படைச் சட்டம்
Bicameral — இரு மன்ற முறை
Bills of Exchange — மாற்றுண்டிகள்
Bolshviks — தீவிரப் பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள்

## C

| | | |
|---|---|---|
| Capitalism | — | முதலாளித்துவம் |
| Capitalist | — | முதலாளி, முதலாளித்துவ |
| Cases | — | வழக்குகள் |
| Chancery (division) | — | ஆலோசகப் (பிரிவு) |
| Character | — | பண்பு |
| Church | — | திருச்சபை |
| Circuit | — | மண்டலம், |
| Civil | — | உரிமையியல், சிவில், சமூக |
| Class Approach | — | வகுப்பு நோக்கு |
| Class domination | — | வகுப்பாதிக்கம் |
| Class rule | — | வகுப்பாட்சி |
| Conflict | — | பூசல் |
| Confederation | — | நாடுகளின் கூட்டம் |
| Cold war | — | கெடுபிடிப் போர் |
| Collegiate system | — | குழு முறை |
| Collective community | — | கூட்டுச் சமுதாயம் |
| Commerce | — | வணிகம் |
| Common Law | — | பொதுச் சட்டம் |
| Communism | — | பொதுவுடைமைத் தத்துவம் |
| Communist | — | பொதுவுடைமை வாதி, பொதுவுடைமைக் காரர் |
| Co-operative government | — | கூட்டுறவு அரசாங்கம் |
| Concurrent | — | பொது, பொதுவான |
| Concentration camp | — | குற்றவாளிகள் முகாம் |
| Contract | — | ஒப்பந்தம் |
| Constitutional | — | சட்ட பூர்வமான, அரசியலமைப்புச் சம்மதமுடைய |
| Consolidated Fund | — | திரட்டு அல்லது குவிப்பு நிதி |
| Constitutional Court | — | அரசியல் அல்லது அரசியலமைப்பு நீதிமன்றம் |
| Control | — | கட்டுப்பாடு |
| Convention | — | வழக்காறு |
| Court packing | — | நீதிமன்றத்தைத் திரட்டு, சுருட்டு |
| Crown | — | அரசுமுடி, முடி |
| Customs | — | சுங்கம், சுங்கச்சாவடி |
| Customary Law | — | வழக்கியல் அல்லது வழக்கச் சட்டம் |

D

Defamation — அவதூறு
Delegated Legislation — நிர்வாகம் சட்டம் செய்வதற்குச் சட்டமன்றம் தரும் அதிகாரம்
Development — வளர்ச்சி, முன்னேற்றம்
Discretion — உசிதம்
Dispute — சர்ச்சை, வழக்கு
Divorce — திருமண விலக்கு
Division (of powers) — (அதிகாரப்) பங்கீடு
Directive (Principles of state policy) — அரசு நெறி செய்நியதிகள், வழிகாட்டு நெறிகள்
Doctrine — கோட்பாடு
Dooms — எழுதப்படாத தீர்ப்புகள்
Drafting committee — வரை குழு
Due Process of Law — சட்டப்படியான வழக்கு விசாரணை

E

Equity Law — அறச்சட்டம்
Exequtive — நிர்வாகம், நிர்வாகத்துறை

F

Fact — உண்மை
Factor — மூலக்கூறு
Federal system — கூட்டாட்சி முறை
Federalist — கூட்டாட்சிவாதி
Federal Constitutional Court — கூட்டாட்சி அரசியல் சட்ட நீதிமன்றம்
Feudalism — படைமான்ய முறை
Finance commission — நிதிக் கழகம்
First Instance — முதல் நிலை
Freedom of Speech — பேச்சுச் சுதந்திரம்
Fundamental Rights — ஆதார அல்லது அடிப்படை உரிமைகள்

G

General Assembly — பொதுச்சபை, மன்றம்
Governor-General — தலைமை ஆளுநர், ஆளுநர்

தலைவர்

**Grant** — மான்யம்
**Great Depression** — பெரிய பொருளாதார மந்தம்
**Guardian** — காப்பாளர்

**H**

**Hierarchical** — படிமரபுத் தன்மை, கூர்க்கோபுர அமைப்பு
**Human Rights** — மானிட உரிமைகள்

**I**

**Ideological** — கொள்கை, தத்துவத் தன்மை யுடைய
**Influence** — உந்தல்
**Itinerant** — நடமாடும்
**Initiative** — துவக்கம், குடித்துவக்கம்
**Inquisitorial** — விசாரணைத்தன்மையுடைய, புலன் விசாரணை
**Integrate** — ஒருங்கிணை
**International Law** — பன்னாட்டுச் சட்டம்
**Institution** — நிலையம், நிறுவனம்

**J**

**Judicial Review** — நீதிப்புனராய்வு, நீதி மறு ஆய்வு
**Judicial Veto** — நீதி மறுப்பாணை
**Judicial System** — நீதிமுறை, நீதித்துறை முறை
**Jurisprudence** — சட்டவியல்
**Jury** — சான்று நடுவர், அறங்கூறுநர், அறநடுவர்
**Justice** — நீதி, நீதிபதி
**Justice of the peace** — அமைதி காண் நீதிபதி

**K**

**Kind** — வகை
**King** — அரசர், மன்னர்
**Kingship** — அரச பதவி

L

| | |
|---|---|
| Law Lords | — சட்டப் பிரபுக்கள் |
| Laissez-faire | — கட்டுப்பாடற்ற வணிகக் கொள்கை |
| Law of Sales | — விற்பனைகள் பற்றிய சட்டம் |
| Legal | — நீதிசார்புடைய |
| Liberal | — மிதவாதம், முற்போக்கு வாதம் |
| Liberalism | — முற்போக்குக் கொள்கை |
| Leninism | — லெனினிசம் |
| Local | — வட்டார |
| Lot | — திருவுளச் சீட்டு, குலுக்குச் சீட்டு |

M

| | |
|---|---|
| Marxism | — மார்க்சீயம் |
| Matter | — பொருள், விஷயம் |
| Merchant Law | — வணிகச் சட்டம், வணிகர் சட்டம் |
| Middle Ages | — இடைக்காலம் |
| Mortgage | — அடமானம் |

N

| | |
|---|---|
| Nature | — தன்மை, இயற்கை |
| Natural rights | — இயற்கை உரிமைகள் |
| Neo-Nazi Party | — புதிய நாசிக் கட்சி |
| New Deal | — புது நோக்கு |
| Non-Parliamentary | — பாராளுமன்ற முறையல்லாத |

O

| | |
|---|---|
| Omnipotent | — சர்வ அல்லது முழுவல்லமை யுடைய |
| Ordinance | — சட்டம் |
| Organ | — உறுப்பு, பிரிவு, அங்கம் |
| Organisation | — அமைப்பு, நிலையம் |
| Original | — முதல், மூலம் |
| Original Jurisdiction | — முதல் அல்லது மூல அதிகார எல்லை |

## P

Paid-up — செலுத்தப்பட்ட
Party — கட்சி, கட்சிக்காரர்
Parliamentary System — பாராளுமன்ற முறை
Part-time — பகுதி நேரம்
People's Court — மக்கள் நீதிமன்றம்
Police — காவலர்
Political — அரசியல் சார்புடைய
Political Court — அரசியல் நீதிமன்றம்
Political Culture — அரசியல் பண்பாடு
Practice — பயிற்சி
Privy Council — பிரிவு கவுன்சில்
Private Law — தனிச்சட்டம்
Problem — பிரச்சினை
Probate — இறப்புறுதி
Process — நடப்பு
Procuracy — வழக்கறிஞர்கள் கழகம்
Procurator — வழக்கெடுத்துரைப்பவர்
Provision — ஏற்பாடு
Public — பொது, அரசாங்கம் சார்ந்த
Public conduct — பொது நடத்தை
Public Record — பொதுப்பதிவேடு, ஆவணம்
Public Welfare — பொதுநலம்

## Q

Quarter Session — காலாண்டுப் பருவம்

## R

Recorder — பதிவு செய்பவர்
Registrar — பதிவாளர்
Regulation — ஒழுங்குபடுத்து
Revenue Commissioner — நிலவரி ஆணையாளர்
Regime — ஆட்சி
Rigid — நெகிழா
Roman Law — உரோமானியச் சட்டம்
Rule of Law — சட்ட ஆட்சி
Rule making — விதி செய்யும்

## S

Saxons — சாக்சேனியர்
Seduction — நெறி தவறி நடக்கும் செயல்

Segregation — இன ஒதுக்கல்
Share — பங்கு
Solicitor — வழக்குரைஞர்
Stability — திடத்தன்மை
Statute Law — பட்டயச் சட்டம், இயற்றப்படும் சட்டம்
State List — இராச்சியப் பட்டியல்
State policy — அரசுக் கொள்கை
Summary offences — ஒட்டுமொத்தக் குற்றங்கள்

T

Temporal — சமயம் சாராத
Theory of separation of Powers— அதிகாரப்பிரிவினை
Tort — சட்டமீறல்
Tradition — மரபு
Treaty — உடன்படிக்கை
Tribunal — தனி வழக்கு நீதிமன்றம், டிரிபியூனல்
Trust — அறக்கட்டளை

U

Union — ஒன்றியம்
Unicameral — ஒரு மன்ற முறை
Urban — நகர
Unitary system — ஒற்றையாட்சி முறை
Unity — ஐக்கியம்
United Nations — ஐக்கிய நாடுகள் கழகம்

V

Value — மதிப்பு, பிடிப்பு

W

Will — உயில்
Wind up — முடிவுக்குக் கொண்டு வருதல்
Writ — ஆணை
Writ of Habeas Corpus — ஆளுரிமைக்காப்பு ஆணை

Y

Year Book — ஆண்டு நூல்

